# சங்க இலக்கிய அகப்புறப்பாடல்களில்

# கபிலரின் பாடுபொருள் - ஓர் ஆய்வு

ஆய்வாளர்

**இரா. அம்பிகாபாய்**

பதிவு எண் : 4176

**தமிழ்**

மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.)

பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு




**மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்,**

**திருநெல்வேலி - 627012.**

பிப்ரவரி - 2018

## மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்,

## திருநெல்வேலி - 627012.

## சான்றிதழ்

**"சங்க இலக்கிய அகப்புறப்பாடல்களில் கபிலரின் பாடுபொருள் - ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் ஆய்வாளர் **இரா. அம்பிகாபாய்** அவர்கள் மேற்கொண்ட இவ்வாய்வு மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக (தமிழ்) தெ.தி. இந்துக்கல்லூரித் தமிழ் ஆய்வு மையத்தில் அவர் பயின்ற காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இவ்வாய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப்பட்டமும் இதுவரை அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**இரா. அம்பிகாபா**
ஆய்வாளர்

நெறியாளர்

**முனைவர் மா. நீலகண்டபிள்ளை,**
தமிழ்த்துறைத் தலைவர்,
இலக்குமிபுரம் கலை மற்றும்
அறிவியல் கல்லூரி,
நெய்யூர்.

இணை நெறியாளர்
**முனைவர் தா. நீலகண்டபிள்ளை,**
தமிழ்த்துறை தலைவர் (பணி நிறைவு)
தெ.தி. இந்துக்கல்லூரி,
நாகர்கோவில்.

# நன்றியுரை

**"சங்க இலக்கிய அகப்புறப் பாடல்களில் கபிலரின் பாடுபொருள் - ஓர் ஆய்வு"** என்னும் இவ்வாய்வேடு நன்முறையில் அமைய அருள்புரிந்த இறைவனுக்கு என் முதற்கண் நன்றி.

தென்திருவிதாங்கூர் இந்துக்கல்லூரித் தமிழ்த்துறையில் ஆய்வு செய்வதற்கு அனுமதியளித்த கல்லூரி நிர்வாகத்திற்கும், கல்லூரி முதல்வர் **முனைவர் தா. சிதம்பரதாணு** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்விற்கு மேற்பார்வையாளராக இருந்து தற்போது இறைவனடி சேர்ந்திருக்கும் **முனைவர் இரா. பிரபாவதி பிறின்சில்லா சினேகபாய்** அவர்களுக்கும் என் இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு நெறிகளைக் கற்பித்தும், மேற்பார்வையாளராக இருந்து வழிகாட்டி அவ்வப்போது ஊக்கமளித்து பேருதவி புரிந்த பேராசிரியர் **முனைவர் தா. நீலகண்டபிள்ளை** அவர்களுக்கும், இலக்குமிபுரம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் **டாக்டர் மா. நீலகண்டபிள்ளை** அவர்களுக்கும் இதய பூர்வ நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு மேற்கொள்ள வாய்ப்பளித்த தமிழ்த்துறைத் தலைவர் **ற்றி.வி. ஜெகதீசன்** அவர்களுக்கும், ஆய்வு பயணத்தில் அடியெடுத்து வைக்க ஊக்கமளித்த பேராசிரியர் **செல்லையாப்பிள்ளை** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு நெறிமுறைகளைக் கற்பித்தும் ஆக்கபூர்வமான சிந்தனைகளைத் தூண்டியும், பலவற்றாலும் பேருதவி புரிந்தத் தமிழ்த்துறை ஆசிரியப் பெருமக்கள் அனைவருக்கும் என் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான பல நூற்கள் வழங்கி உதவிய தெ.தி. இந்துக்கல்லூரி நூலகத்தாருக்கும், தமிழ்த்துறை நூலக அலுவலர் அவர்களுக்கும் நாகர்கோவில் கவிமணி நூலகத்தாருக்கும் எனது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான செலவுகளைச் செய்தும் பல வழிகளில் உதவி செய்த என் அண்ணன் வழக்கறிஞர் இரா. பக்தவத்சலம் அவர்கட்கும் என் நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

ஆய்வேட்டினை நல்ல முறையில் தட்டச்சு செய்து ஆய்வேடு வடிவில் ஆக்கித் தந்த கண்ணன் தட்டெழுத்துப் பயிற்சி உரிமையாளர் **அ. சுகுமாரன்** அவர்களுக்கும் என் அன்பு மிக்க நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

**இரா. அம்பிகாபாய்**

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஐங்.மஞ்ஞை | - | ஐங்குறுநூறு மஞ்ஞை பத்து |
| ஐங்.கிள்ளை | - | ஐங்குறுநூறு கிள்ளைப் பத்து |
| ஐங்.குரக் | - | ஐங்குறுநூறு குரக்குபத்து |
| கலி. | - | கலித்தொகை |
| குறி.கலி. | - | குறிஞ்சிக்கலி |
| குறி.பா. | - | குறிஞ்சிப் பாட்டு |
| குறள். | - | திருக்குறள் |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| நற். | - | நற்றிணை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| புறம். | - | புறநானூறு |
| மணிமே. | - | மணிமேகலை |

முன்னுரை

ஆய்வுத் தலைப்பு

ஆய்வின் நோக்கம்

ஆய்வு முறை

ஆய்வுக் களம்

ஆய்வு அணுகுமுறை

ஆய்வின் கருதுகோள்

ஆதாரங்கள்

முதன்மை ஆதாரங்கள்

துணைமை ஆதாரங்கள்

ஆய்வின் மொழிநடை

ஆய்வேட்டின் கட்டமைப்பு

## முன்னுரை

மொழியானது உள்ள உணர்வுகளையும் எண்ணங்களையும் வெளியிட உதவும் கருவியாகும். உலகில் சிறப்பொடு வழங்கி வரும் உயர்தனிச் செம்மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்றாகும். இதற்குக் காரணம் அம்மொழியில் தோன்றிய இலக்கியங்கள். சங்க இலக்கியங்கள் தொன்மைச் சிறப்பும் பழம் பெருமையும் ஆழமாகப் படித்து உணர்வதற்குரிய இலக்கியத் தரமும், வாழ்வியல் மெய்மைகளையும் கொண்டு மிளிர்கின்றன. உலகப் பேரிலக்கியங்களோடு ஒப்பிடத்தக்க உயர்வு பெற்றுத் திகழ்பவை சங்க இலக்கியங்களாகும்.

மனித வாழ்க்கையின் உயிர்நாடியாக உள்ள அன்பு என்பது பழந்தமிழர் அனைத்து உலகத்திற்கும் அளித்த பெருங்கொடை ஆகும். மனிதனின் அச்ச உணர்விலிருந்தும் குற்ற உணர்ச்சியிலிருந்தும் தான் இறைவழிபாடு தோன்றியது என சிக்மண்ட் பிராய்டு கூறுகிறார். சங்க இலக்கியங்களில் வேட்டைக்கால சமூகமும் மேய்ச்சல் சமூகமும் நாகரிகமடைந்து வேளாண்மைச் சமூகம் தோன்றிய பல கால கட்டங்களைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இக்கால கட்டங்களில் பண்பாடு சார்ந்த திணைத் தெய்வங்களையும் பழந்தமிழர் வழிபட்டுள்ளனர்.

மக்கள் கூட்டம் கூட்டமாக வாழும் பொழுது பண்பாட்டுக் கலப்புகள் உருவாவதும், ஒன்றுடன் ஒன்று கலக்கும் சூழலில் பழக்க வழக்கங்கள், சடங்குகள் போன்றவற்றில் காலத்துக்கு காலம் மாற்றங்கள் அடைவதும் இயல்பானது. சமூக நன்மைக்காவும், போர் சிறக்கவும் பண்டைத் தமிழ் அரசர்கள் விருப்புடன் வைதீகம் சார்ந்த வேள்விச் சடங்குகளையும்,

யாகங்களையும் ஏற்று நடத்தியுள்ளனர். சங்க காலத் தமிழகத்தில் சைவம், வைணவம், பௌத்தம், சமணம் முதலிய சமயங்கள் இருந்துள்ளன.

**ஆய்வுத் தலைப்பு**

சங்க இலக்கியம் 'பாட்டும் தொகையும்' என்றும் கூறப்படும். பாட்டு என்பது பத்துப்பாட்டு. தொகை என்பது எட்டுத்தொகை. எட்டுத்தொகையில் ஒவ்வொன்றும் பல உதிரிப் பாடல்களின் தொகுப்பெனலாம். பத்துப்பாட்டு நெடும் பாடல்களின் தொகுப்பாகும். சங்க இலக்கிய அகப்புறப் பாடல்களில் கபிலர் 235 பாடல்கள் பாடியுள்ளார். குறுந்தொகையில் உள்ள பாடல்கள் அகத்திணையின் உயிரோட்டத்தைக் காட்ட வல்லனவாயுள்ளன. தலைமகள் தோழியிடம் தலைவன் அன்புடைமையை வற்புறுத்தும் சூழல் ஒன்று வருகிறது. அப்போது அவள் அக்காதல் நிலத்தைவிடப் பரந்ததாக வானைவிட உயர்ந்ததாக. நீரைவிட ஆழமானதாக விளங்குவதாகக் கூறினாள். பிரிந்த தலைவன் உரிய காலத்தே திரும்பினானில்லை. அதனால் தலைவி சோகமே வடிவானாள்.

தோழி எவ்வளவு கூறியும், தலைவி தலைவன் மேற்கொண்ட சீற்றம் தணியவில்லை. அதனால் மனம் வருந்திய தோழியின் கூற்றாகக் கபிலர் பாடிய பாடல் இது.

"மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்
வாலியோன் அன்ன வயங்குவெள் ளருவி
அம்மலை கிழவோன் நம்நயந்தென்றும்

வருந்தினன் என்பதோர் வாய்ச்சொல் தேறாய்
நீயுங் கண்டு நுமரொடும் எண்ணி
அறிவறிந்து அளவல் வேண்டும் மறுதரற்கு
அரிய வாழி தோழி! பெரியோர்
நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார்தம் தட்டியோர் திறத்தே" (நற். 32)

இயற்கையையும் உயிருள்ளதாகக் கருதி நாணும் நுட்பமான உணர்வு நிலையை நாம் சங்கப்பாடல்களில் கண்டு மகிழலாம். முதல், கரு, உரிப்பொருள் மூன்றும் நிறைவுற அமைந்த முறையில் அகநானூறு காணப்படுகிறது. வரலாற்றுச் செய்திகளாகிய புறச் செய்தியும் கூறுகின்றதாக புறநானூறு அமைந்துள்ளது.

கலித்தொகைப் பாடல்கள் உணர்ச்சி கொந்தளிப்பன. உள்ளத்தைத் தொடுவன எனலாம். சங்க இலக்கியத்திலிருந்து நீதி இலக்கியம் கிளைத்தது என்பதற்கு கலித்தொகை பாடல்கள் சான்றாக அமைகின்றன. "கற்றறிந்தார் ஏத்தும் கலி" என்பதற்கு முற்றிலும் பொருத்தமுடைய சிறந்த பாடல்கள் கலித்தொகையில் காணலாம். புறநானூறு தமிழர் வரலாற்றுக் களஞ்சியமாக பழந்தமிழ் வேந்தர்கள் குறுநில மன்னர்களின் வரலாற்றை அறிவிக்கும் ஆவணமாக கருதலாம். மன்னர் புலவர் உறவு, மக்கள் மன்னர் உறவு, புலவர் புலவர் உறவு யாவும் புறநானூற்றால் அறியத்தக்கன. பாரி கபிலர் நட்பு பற்றிக் கூறப்படுகிறது. உலகம் அறியத் தக்க பற்பல அரும் பொருட் செய்திகளும் தமிழ்

மக்களின் பழக்க வழக்கங்களைப் பற்றிய உண்மைகளுமாக புறநானூற்றில் விரவிக் கிடக்கும் சமுதாயச் செய்திகள் கணக்கற்றனவாகும். எனவே “சங்க இலக்கிய அகப்புறப் பாடல்களில் கபிலரின் பாடுபொருள்” என்பது ஆய்வுத் தலைப்பாக அமைக்கப்பட்டுள்ளது.

**ஆய்வின் நோக்கம்**

சங்க இலக்கியங்களில் பல புலவர்கள் பல பாடல்கள் பாடியிருக்கிறார்கள். கபிலர் பாடிய பாடல்களில் என்னென்ன கருத்துக்கள் கூறியிருக்கிறார் என்பதைக் குறிப்பால் அறியும் படி இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. தலைவன் தலைவியின் களவு மணம் கற்பு மணமாக வேண்டி தலைவி வருந்துவதையும், தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றலையும் பற்றி பல பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. விழுமிய வாழ்க்கை நெறிகளான அன்பு, வாய்மை, பொறுமை, சகிப்புத் தன்மை, மனிதநேயம், ஒழுக்கம், கொடைத் தன்மை, தொண்டுள்ளம், தியாகம் ஆகியவற்றை இலக்கியங்கள் வலியுறுத்தின. இத்தகைய வாழ்க்கை நெறிகள் தனிமனிதனுக்கு அறிவுரைகளாகவும் அமைந்தன. மனித வாழ்க்கையோடு இலக்கியங்கள் பின்னிப் பிணைந்து மனிதனின் தெளிவான வளர்ச்சிக்கு வித்திட்டன.

சங்க இலக்கியங்கள் வரலாற்று நிகழ்வுகளை விவரிப்பதோடு அல்லாமல் சமூக உறவினை வளர்த்துத் தமிழ் மொழிக்கும், தமிழருக்கும் பெருமை சேர்க்கின்றன. சங்க இலக்கிய கபிலரின் பாடல்கள் வழி தமிழருக்கே

உரிய தமிழரின் தனித்த அன்பு வாழ்க்கையின் சிந்தனைகளை அடையாளம் காண்பதும், கபிலர் பாடல்களுக்குச் சமூகத்தில் எத்தகைய சிறப்பிடம் இருந்தது என்பதைச் சங்க இலக்கியப் பாடல்கள் வழி ஆய்வு செய்வதும் இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு முறை**

ஆய்வுக்குரிய தரவுகளைச் சேகரிப்பதற்கும், அவற்றை விளக்குவதற்கும் நூலக ஆய்வு முறை பின்பற்றப்பட்டுள்ளது.

**ஆய்வுக் களம்**

சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ள கபிலர் பாடல்கள் தொடர்பான தரவுகளை மட்டும் ஆய்விற்கு எடுத்தாளப்பட்டுள்ளன.

**ஆய்வு அணுகுமுறை**

“சங்க இலக்கிய அகப்புறப் பாடல்களில் கபிலரின் பாடுபொருள் ஓர் ஆய்வு” என்னும் இவ்வாய்வு சமூகவியல், விளக்கமுறை மற்றும் தேவையான சில இடங்களில் ஒப்பீட்டு முறை ஆய்வும் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

**ஆய்வின் கருதுகோள்**

மக்கள் கூட்டமாக வாழ்ந்தபோது பழக்கவழக்கங்கள், சடங்கு முறைகள் ஆகிய வற்றில் பல மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. கபிலரின் பாடல்கள் வழி அக்கால மக்கள் எவ்வாறு வாழ்ந்தனர். எவ்வாறு தினைப்புனங்காத்தனர்,

என்பதையும் விரிவாக விளக்குவதாக அமைந்துள்ளது. இவ்வாய்வின் கருதுகோளாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

**ஆதாரங்கள்**

ஆய்வு மேற்கொள்வதற்கு ஆதாரங்கள் முக்கியமானவை. அவை முதன்மை ஆதாரங்கள் மற்றும் சார்பு ஆதாரங்கள் என இருவகைப்படும்.

**முதன்மை ஆதாரங்கள்**

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூற்கள் முதன்மை ஆதாரங்களாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

**துணைமை ஆதாரங்கள்**

பல்வேறு இலக்கிய நூற்கள், ஆய்வுக் கட்டுரைகள், திறனாய்வு விமர்சன நூல்கள் துணைமை ஆதாரங்களாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வின் மொழிநடை**

சங்க இலக்கியங்கள் குறித்து ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளதால் பல இலக்கியங்களிலிருந்து மேற்கோள்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. மேலும் ஆய்வாளருக்குரிய மொழிநடையிலும் அனைத்துத் தரப்பினரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையிலும் ஆய்வேடு அமைக்கப்பட்டுள்ளது.

**ஆய்வேட்டின் கட்டமைப்பு**

"சங்க இலக்கிய அகப்புற பாடல்களில் கபிலரின் பாடுபொருள் ஓர் ஆய்வு" என்ற இவ்ஆய்வு ஆறு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

1. ஆய்வு அறிமுகம்
2. சங்க இலக்கியங்கள்
3. சங்க இலக்கியத்தில் கபிலர் பாடல்களில் அகம் மற்றும் புறக் கருத்துக்கள்
4. கபிலர் பாடல்களில் காதல் நெறி
5. கபிலர் பாடல்களில் புறம் மற்றும் வீரச் செய்திகள்
6. ஆய்வு நிறைவுரை

**"ஆய்வு அறிமுகத்தில்"** ஒவ்வொரு இயலிலும் உள்ள கருத்துக்கள் சுருக்கி கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் கபிலர் பாடல்கள் ஓர் ஆய்வில் அகம் மற்றும் புறக் கருத்துக்கள், தலைவன், தலைவி கருத்துகள் போன்றவை கூறப்பட்டுள்ளன.

**"சங்க இலக்கியங்கள்"** என்ற இரண்டாவது இயலில் உள்ள பொதுவான கருத்துகள், சங்கம் இருந்த நூல்களை ஆராய்தல், விருந்தோம்பல் இறைவழிபாடு போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

**"சங்க இலக்கியத்தில் கபிலர் பாடல்களில் அகம் மற்றும் புறக் கருத்துகள்"** என்ற மூன்றாவது இயலில் அவர் வாழ்ந்த முறைகள், அவர் பாடல்களின் அமைப்பு பற்றிக் கூறப்படுகின்றன.

**“கபிலர் பாடல்களில் காதல்நெறி”** என்ற நான்காவது இயலில் களவு மணம் பற்றிய காதல் நெறிகள் கூறப்பட்டுள்ளன.

**“கபிலர் பாடல்களில் புறம் மற்றும் வீரச் செய்திகள்”** என்ற ஐந்தாவது இயலில் புறக்கருத்துக்களும் வீரச்செய்திகளும் விளக்கப்பட்டுள்ளன. நட்பு சார்ந்தவையும் வீர வாழ்க்கை முறைகளும், கொடைச்சிறப்பு, செல்வச் சிறப்பு போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

இறுதியாக **“ஆய்வு நிறைவுரை”** என்னும் ஆறாவது இயலில் மேலே சொன்ன கருத்துகள் பலவற்றையும் தொகுத்து கூறப்பட்டுள்ளன.

**முன்னுரை**

இந்திய மொழிகளில் மிகத்தொன்மையான வரலாறு தமிழ் மொழிக்கு உண்டு. அவ்வரலாறு சிறப்பாக அமைவதற்குத் தமிழ் மொழியிலுள்ள இலக்கியங்கள் பண்டைக்காலத் தமிழர்களின் வாழ்வின் முழு உருவத்தைக் காட்டுகிறது. மேலும் அவர்களின் வாழ்க்கையினை எல்லா கோணங்களிலிருந்தும் கண்டறியும் அரிய வாய்ப்பை அளிக்கின்றது. இலக்கியம் எப்பொழுது தோன்றுகிறதோ அப்போதே வரலாறும் தோன்றிவிடுகிறது. இலக்கியத்தைத் தெளிவாக்கிக் கொள்ள வரலாற்று அறிவும் இன்றியமையாததாகும். இலக்கியத்தைச் சமூகப் பின்னணியில் நோக்குவது ஒருவகை முயற்சியாகும். இலக்கியத்தைப் பற்றிய பார்வையும் சமூகம் பற்றிய நோக்கமும் நாளுக்கு நாள் மாறி வருவதைக் காணமுடிகின்றன.

தமிழ் இலக்கியங்கள் நீண்ட வரலாற்றுப் பின்னணியோடு அமைகின்றன. கிரேக்க செவ்வியல் இலக்கியங்களும் சமஸ்கிருத செவ்வியல் இலக்கியங்களும் இணையான பாரம்பரிய மரபினை சங்க இலக்கியங்கள் கொண்டிருந்தாலும் வேறுபட்ட தனித்துவமான சில தன்மைகளை இவைகள் கொண்டுள்ளன. அறம், பொருள், இன்பம் வீடு என்பனவற்றின் அடிப்படையில் வடமொழியாளர்கள் நூலியற்றும்போது தமிழ் மரபு அகம், புறம் என்னும் தன்மையில் அமைந்துள்ளது. அகம், புறம் என்பன நெகிழ்ந்து கொடுக்கக் கூடிய தன்மையுடையன.

சங்க இலக்கியங்களில் பாணர் சிறப்பிடம் பெறுகின்றனர். பெரும் பாணாற்றுப்படையும், சிறுபாணாற்றுப்படையும், பாணர் வாழ்வியலை அணி

செய்கின்றன. தமிழகத்தின் பழங்குடிகளுள் ஒன்று பாண்குடியாகும். சங்க இலக்கியங்களில் 'பறையன், பாணன், துடியன், கடம்பன்' என நான்கு பழங்குடியினர் சிறப்பிடம் பெற்றுள்ளனர். இவர்கள் தோற்கருவி, உலோகக் கருவி, நரம்புக் கருவி, மிடற்றுக் கருவி போன்றவைகளுடன் தமிழகமெங்கும் சுற்றித் திரிந்து மக்களை ஆடிப்பாடி மகிழ்வித்துள்ளனர். அக்காலத்தில் செய்தி பரிமாற்றமும், இலக்கிய பரிமாற்றமும் இவர்கள் மூலம் நடந்ததும், இவர்கள் பாடல்கள் வாய்மொழி மரபுகளாக இருந்ததும் புலனாகிறது.

சங்க இலக்கியப் பாடல்கள் சமச்சீரற்ற வளர்ச்சிப் போக்கை அடிப்படையாகக் கொண்டு காணப்படுகின்றன. சங்கப் பாடல்கள் அனைத்தும் கி.மு. 200-லிருந்து, கி.பி. 200 வரையிலான கால கட்டங்களில் பாடப்பட்டவையாகும். சங்க இலக்கியங்கள் வேட்டைக் காலச் சமூகமும் மேய்ச்சல் சமூகமும் நாகரிகம் மடைந்து வேளாண்மைச் சமூகம் தோன்றிய பல காலகட்டங்களை பதிவு செய்துள்ளன.

**சங்க இலக்கியங்கள்**

சங்கங்கள் அமைத்து தமிழ் மொழியை வளர்த்த காலம் சங்க காலமாகும். இக்காலத்தில் தோன்றிய இலக்கியங்கள் சங்க இலக்கியங்களாகும். சமுதாயமானது மாறுதலுக்கு உட்பட்டதால் சமுதாயப் படைப்புகளாக வெளிவருகின்ற இந்த இலக்கியங்களின் நடையும், மொழியும் அச்சமுதாய மாற்றங்களைப் பிரதிபலிக்கின்றது. ஒரு குறிப்பிட்ட காலச் சமுதாயத்தில் எழும்

இலக்கியப் படைப்புகள் அச்சமுதாயத்தின் வாழ்க்கைமுறை, பண்பாடு, உணவுப்பழக்க வழக்கங்கள், ஆட்சிமுறை, வீரம், கொடை, நற்சிந்தனை, ஒருமைப்பாடு, மனிதநேயம், அறநெறி முதலிய பல்வேறு கூறுகளை வெளிப்படுத்துகின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலப்பகுதியில் தோன்றிய சங்க இலக்கியங்கள் தொடர்ச்சியான சமுதாய மாற்றங்களைப் பிரதிபலிக்கின்றன.

தமிழ்ச் சமூகத்தின் காலத் தொன்மை மிக்க பாட்டும், தொகையும் எனப் போற்றப்படும் பதினெட்டு நூற்களும் தனித்தனிப் பாடல்களாகப் பாடப்பட்டு பின் பல துறைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன. பாட்டுத்தொகை எனக் கூறினாலும் காலத்தால் முற்பட்டது எட்டுத்தொகை ஆகும். எட்டுத்தொகை நூற்களைப் பற்றிய பழைய வெண்பா.

“நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு

ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்

கற்றறிந்தார் ஏத்தும் கலியொடு அகம்புறமென்று

இத்திறத்த எட்டுத்தொகை”[1]

என பட்டியலிட்டுக் காட்டுகிறது.

பத்துப்பாட்டு நூற்கள் நீண்ட அடிகளைக் கொண்டு தனித்தனிப் புலவர்களால் பாடப்பட்டுள்ளன. பத்துப்பாட்டின் பெயர் குறித்து பழம்பாடல்,

“முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை

பொருகு வள மதுரைக் காஞ்சி - மருவினிய

கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சிப் பட்டினப்

பாலை கடாத்தொடும் பத்து”[2]

எனக் குறிப்பிடுகிறது.

சங்க இலக்கியங்கள் தமிழனின் தனித்த அடையாளமாக விளங்குகின்றன. சங்க இலக்கியங்கள் உலகப் பொதுமையையும் மனித நேயத்தையும், கூடிவாழ்வதன் முக்கியத்துவத்தையும் விரிவாக வற்புறுத்துகின்றன. உலக மக்களுக்கு அறிவுரை பகர்வதிலும், இயற்கையோடு இயற்கையாக வாழக்கற்றுக் கொடுப்பதிலும், அற வாழ்க்கையை வலியுறுத்துவதிலும் சங்க இலக்கியங்கள் முதலிடம் பெறுகின்றன.

**பழந்தமிழகத்தின் எல்லைகள்**

தொல்காப்பியக் காலத்திற்கு முன் தொடங்கிய தமிழ்கூறும் நல்லுலகத்திற்கு வேங்கடமலை வடக்கெல்லையாகவும், குமரியாறு தெற்கெல்லையாகவும் கூறப்பட்டுள்ளது என்பதை,

“வடவேங்கடந் தென்குமரி

ஆயிடைத்

தமிழ்கூறு நல்லுலகத்து”[3]

எனத் தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம் குறிப்பிடுகின்றது. தற்கால குமரிக் கடலின் தெற்கே பழந்தமிழ் நிலம் இருந்ததும், அந்தத் தமிழ் நிலப்பரப்பில் ப∴றுளி, குமரி முதலான ஆறுகளும், பல மலைத்தொடர்களும், அத்தமிழ்

மண்ணிற்குத் தெற்கே பிறநாடுகளும் இருந்து கடல் கொள்ளப்பட்டது என்ற வரலாற்றை இளங்கோவடிகள்,

"வடிவே லெறிந்த வான்பகை பொறாது
ப∴றுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன்"[4]

எனக் கூறியிருக்கின்றனர். கோடு எனுஞ்சொல் மலையுச்சியினையும், ஆற்றின் கரையினையும் குறிக்கும்[5]. சங்க காலத்திற்கு முன்பு குமரிக்குத் தெற்கிலும் பரவியிருந்த தமிழகம் சங்க காலத்தில் சுருங்கிவிட்டது. குறுங்கோழியூர் கிழாரும் இதனைத்,

"தென்குமரி வடபெருங்கடல்
குணகுட கடலா வெல்லை"[6]

எனத் தெளிவுபடுத்துகிறார்.

இயற்கையான எல்லைகளைப் பெற்றிருந்த தமிழகம் தனித்து நின்றது மட்டுமல்லாமல் இந்தியாவின் பிற பகுதியிலிருந்தும் வேறுபட்டும் விளங்கியது. அன்றைய தமிழகத்தின் அரசியலும் பண்பாடும் தனித்து இயங்கின. உலகில் எந்த மொழியினருக்கும், இனத்தாருக்கும், நாட்டாருக்கும் இல்லாத நானிலப் பாகுபாடும், அதனை அடியொற்றிய பண்பாடும் தமிழகத்தில் தான் மலர்ந்தன.

காரிகிழார் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமி பொருவழுதியைப் பாடும் பாடலொன்றில்,

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடல் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்"[7]

எனக் குறிப்பிடுகிறார்.

வடக்கிலுள்ள பனி பொருந்திய இமயமலையின் வடக்கும் தெற்கிலுள்ள குமரியாற்றின் தெற்கும், கிழக்கிலுள்ள சகரரால் தோண்டப்பட்ட கடலின் கிழக்கும், மேற்கிலுள்ள முதிர்ந்த கடலின் மேற்குப் பகுதியும் தமிழ் நிலப்பரப்பாக இருந்தது புலனாகிறது. கடற்கோள் ஏற்படுவதற்கு முன்னால் இவ்வாறு நிலப்பரப்புகள் விரிந்து கிடந்தன என்பதை இப்பாடல் தெளிவாக்குகிறது. இமய மலையின் வடக்குப் பகுதியிலும் தமிழர் வாழ்ந்தனர் அல்லது தமிழ் நிலப்பகுதி இருந்தது என்று கூறினால் சிந்து வெளிப்பகுதியிலும் தமிழர் வாழ்ந்தனர் என்பதையும் அங்குள்ள நாகரிகம் தமிழர் நாகரிகமே என்று சர். ஜான் மார்ஷல் கூறுவதையும் எண்ணிப்பார்க்க வேண்டும். சிலப்பதிகார வேனிற் காதையில்,

"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ் வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு"[8]

என்று இளங்கோவடிகள் கடலைத் தமிழகத்துக்குத் தென் எல்லையாக வகுத்துள்ளார். இளம்பூரணர், இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் ஆகியோர்கள் அனைவரும் குமரி முனைக்குத் தெற்கிலும் நெடுந்தொலைவு பரவி இருந்தது எனக் கருதினர்.

தமிழ்மொழி எப்போது தோற்றுவிக்கப்பட்டது, யாரால் தோற்றுவிக்கப்பட்டது என்பதை வரையறுத்துக் கூற இயலாது. தமிழினமானது கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன் தோன்றிய மூத்தகுடி என்பது உலக மனித இனம் தோற்றம் பற்றிய வரலாற்றினை ஆய்வு செய்யும் உலக அறிஞர்கள் அனைவரும் ஒப்புக் கொள்ளும் உண்மையாகும். மேலும் பதிற்றுப்பத்து,

“வடதிசை எல்லை இமயமாத்

தென்னவ குமரி”[8]

எனக் குறிப்பிடுகிறது.

இத்தகைய தமிழினம் தான் இந்தியாவெங்கும் பரவி வாழ்ந்தது என்பதை மொஹஞ்சதாரோ, ஹரப்பா நாகரிகங்கள் உணர்த்துகின்றன. மேற்படி அகழ்வாராய்ச்சி கருத்திற்கு ஆதரவு செய்து தமிழர்கள் இந்தியாவின் வடக்கெல்லை இமயமலை வரையிலும், இமயமலையின் வடக்கிலும் பரவியிருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

**தாய்த் தலைமையின் எச்சங்கள்**

சங்க கால இனக்குழு சமூகத்தில் குடும்ப அமைப்புகளும் பெண்ணை முதன்மைப்படுத்தியே பேசுகின்றன. தமிழின் தொன்மையான இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் தாய், தோழி, செவிலி, தலைவி ஆகியோருக்கு கூற்றுக்கள் அமைந்துள்ளன. ஆனால் தலைவனின் தந்தை, தோழன், தமையன் ஆகியோருக்குக் கூற்றுகள் கூறப்படவில்லை. ஒரு குடும்பத்தில் பெண், அவள் தந்தை, அவள் கணவன், உடன் பிறந்தோர், மகன் ஆகியோர் உறுப்பினராக இடம்பெறும் தாய்வழிச் சமூக அமைப்பை,

“கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதில் மகளிராதல் தகுமே
மேனாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை
யானை எறிந்து களத்து ஒழிந்தனளே
நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்
பெருநிரை விலங்கி ஆண்டுப் பட்டனமே
இன்றும் செப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல் கைக்கொடுத்து வெளிது விரித்து உடீஇ
பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒரு மகள் அல்லது இல்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே”[11]

என்னும் புறநானூற்றுப் பாடல் தெளிவாகக் காட்டுகிறது. இப்பாடலில் வரும் மூதிர்மகளிர் என்னும் தொடர் முதுகுடி மறப்பெண்களைக் குறிப்பிடுகிறது. முதல் நாள் போரில் தந்தையும், தமையன்மாரும் யானையைக் கொன்று இறந்தும், இரண்டாம் நாள் போரில் இவள் கணவன் ஆநிரைகளைப் பகைவர் கவர்ந்து செல்லாதவாறு தடுத்து நின்று போரிட்டு எழுமாறு வீரரை அழைக்கும் போர்ப்பறை ஒலி கேட்டு தன் ஒரே மகனை போர்க்களத்திற்கு அனுப்புகிறாள். இவளது துணிவு மிகவும் போற்றுதற்குரியது. இதிலிருந்து ஆண்களுக்கு வீரமூட்டுவதிலும், போரில் யார் யாரை அனுப்புவது என்று முடிவெடுக்கும் நிலையிலும் பெண்கள் இருந்துள்ளனர்.

தலைவி உடன்போக்குச் சென்ற நிலையில் அவர்களைச் செலிலித் தாயே தேடிச் சென்றதை,

“என் மகள் ஒருத்தியும் பிறன்மகன் ஒருவனும்
தம்முளே புணர்ந்த தாம் அறி புணர்ச்சியர்
அன்னார் இருவரைக் காணிரே”[12]

எனக் கலித்தொகை காட்டுகிறது. இதிலிருந்து குழந்தையைக் கண்காணிக்கும் பொறுப்பும், தேடிச் செல்லும் பணியும் தந்தையைவிட தாய்க்கே மிகுதியாக இருந்ததை அறியமுடிகிறது. பொதுமைப் பாலுறவும், குழு மணங்களும் அக்காலத்திய நியதி. அந்நிலையின் விளைவாக தந்தை வழியாற்ற தாய் வழியே முக்கியத்துவம் பெற்றிருந்தது.[13]

வீரத்தாய் ஒருத்தியிடம் உன் மகன் எங்கே எனக் கேட்க அதற்கு அவள் மறுமொழி கூறும்போது,

"புலி சேர்ந்து போகிய கல்லளைப் போல

ஈன்ற வயிறோ இதுவே

தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே"[14]

எனக் குறிப்பிடுகிறாள். இப்பாடலடிகள் அவ்வீரத்தாயின் மகன் புலிக்கு நிகரான வலிமையுடையவன் எனவும், புலி தங்கியிருந்து நீங்கிய கற்குகையைப் போல அவனைப் பெற்ற வயிறோ இங்கிருக்கிறது. அவனைக் காண விரும்பினால் போர்க்களத்தில் தோன்றுவான் அங்கு சென்று காண்பாயாக எனக் குறிப்பிடுகிறாள். வீரத்தாயின் இச்செய்கை மறக்குடியின் மாண்பை விளக்குவதோடு வீரத்தை நிலைநாட்டி அரசாட்சியைத் தீர்மானிப்பதில் மிகுதியான பங்கு பெண்களுக்குரியது என்பதைப் பறைசாற்றுகிறது.

**எயினர்களின் வாழிடம்**

எயினரின் குடிசைகள் வேல்போன்ற கூர்மையான ஈந்தின் இலைகளாலும், வேயப்பட்டு அக்குடிசைகள் முள்ளம் பன்றியின் முதுகுபோல ஒழுங்கில்லாமல் அமைக்கப்பட்டிருந்தன. அடித்தள மக்கள் புல், ஈத்து இழை ஆகியவற்றால் வேயப்பட்ட குடிசைகளில் வாழ்ந்துள்ளார்கள்[15]. எயினர்கள் வீட்டு உபயோகப் பொருள்களாக மண்பானை, உலக்கை, துடிப்பு, முதுவாய்சாடி

ஆகியவற்றைப் பயன்படுத்தினர். வேட்டைக் கருவிகளான கை, கைத்தடி, வேல், வில், அம்பு, வலை, குத்துக்கோல் ஆகியவற்றைப் பாதுகாப்பாக குடிசைகளில் அடுக்கி வைத்திருந்தனர். படுத்து உறங்குவதற்கு மான்தோலைப் பாயாகப் பயன்படுத்தியுள்ளனர். குடிநீருக்காக தம் குடிசையின் பக்கத்தில் கிணறுகளைத் தோண்டினார்கள். இக்கிணறுகள் பற்றி "கல்லறுத்தி பற்றிய வல்லுவர்க் கூவல்"[16] எனச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

எயினர்கள் வரகின் வைக்கோலால் வேயப்பட்ட குடிசைகளில் வாழ்ந்தனர். அக்குடிசைகளின் மேல் காட்டு மல்லிகை படர்ந்து வளர்ந்து அதன் பூக்கள் விரிந்து மணம் வீசியது. அத்தகைய மணம் வீசும் இல்லங்களில் எயினர்கள் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தனர். வரகு, வைக்கோல், செந்நெல், கதிர், கரும்பாடை, கூவையிலை ஆகியவற்றாலும் குடிசைகள் வேயப்பட்டன[17]. எயினர்கள் தங்களை நாடிவரும் விருந்தினர்களுக்கு முறையாக விருந்து உபசரித்து எஞ்சியதை உண்டு வாழ்ந்தனர் என்பதை,

"செழும்பல் வைப்பின் பழனப் பாறும்
ஏனல் உழவர் வரகும் திட்ட
கான்மிகு குளவிய வன்பு சேர் இருக்கை
மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும்"[18]

எனப் பதிற்றுப்பத்து பதிவு செய்கிறது. எயினர்கள் அழகிய குடிகளையுடைய சிறிய ஊரில் ஆண்யானை ஆடுதலால் கலங்கிச் சேறாகும் உண்ணும் நீர் அரிதாகின்ற நீரையுடைய நீர் நிலைகளை உடையது என்பதைப் புறநானூறு,

"களிறு பொரக் கலங்கு கழல்முள் வேலி

அரிது உண் கூவல் அங்குடிச் சீறூர்"[19]

எனப் பாராட்டுகிறது. எயினர்களின் குடிசையின் முற்றத்தில் பலாமரம் அல்லது விளாமரம் நிற்கும். அதில் பார்வைமான் கட்டப்பட்டிருக்கும். பார்வை மான் கட்டிய கயிறு உராய்ந்ததால் அம்மரத்தின் அடி தேய்ந்திருந்ததை,

"முன்றில் முஞ்ஞையொரு முசுண்டை பம்பிப்

பந்தர் வேண்டாப் பலாத்தூங்கு நீடில்

கைம்மான் வேட்டுவன் கனைதுயில் மடிந்தெனப்

பார்வை மடப்பிணை தழீஇ"[20]

எனக் குறிப்பிடுகிறது. எயினர்களின் எளிய குடிசையின் முன் கனிகள் தொங்கும் பலாமரத்தில் முல்லைக் கொடியும், முசுண்டைக் கொடியும் அதன்மீது செறிந்து படர்ந்திருக்கும். வேறே பந்தல் வேண்டாது தாமே பந்தராகப் படர்ந்திருக்கும்.

## கானவரின் வேட்டைத் திறன்

கானவர் தம் பசியைப் போக்க மலைவாழ் விலங்கினங்களை வேட்டையாட முற்பட்டனர். அடர்ந்த அக்காடுகளுக்கிடையே வேட்டையாடுதல் என்பது எளிதான செயலன்று, வன விலங்குகளால் இவர்களுக்குத் துன்பமும் மிகுதியாக இருந்தது. எயினர்கள் வேட்டைக்குச் செல்லும்போது தாம் வளர்த்த நாய்களையும் உடன் கொண்டு சென்றனர். எயினர்கள் தம் உணவுக்காக உடும்பு, முயல், பன்றி, மான் ஆகிய விலங்குகளையும் கானக்கோழி,

இதற்பறவை, புறா ஆகிய பறவைகளையும் வேட்டையாடியுள்ளனர். வேட்டை உணவைப் பாதுகாத்து வைக்க முடியாததால் உபரியைப் பகிர்ந்து கொண்டனர்[21]. தினைப்புனங்களை உண்ணும் பொருட்டும், அழிக்கும் பொருட்டும் வந்த புலி, யானை, காட்டுப்பன்றி போன்றவற்றை வளைத்துப் பிடிப்பதற்கும் முயற்சி செய்துள்ளனர். எயினர்கள் வேட்டையாடுவதற்கு வில்லைப் பயன்படுத்தியுள்ளனர். எயினச் சிறுவக்ள் தம் விளையாட்டுப் பருவத்திலேயே விற்பயிற்சியைத் தொடங்கிவிடுவர்[22]. கொல்லிமலைத் தலைவனான ஓரியும் தன் வில்லாற்றல் காரணமாகப் புலவர்களால் 'வல்வில் ஓரி' எனச் சிறப்பிக்கப்பட்டுள்ளான். வல்வில் ஓரி ஒருமுறை தொடுத்த அம்பானது யானை, புலி, மான், பன்றி ஆகியவற்றைக் கொன்று புற்றிலிருந்த உடும்பின் உடலில் குத்தி நின்றதை,

"வேழம் வீழ்ந்த விழுத்தொடைப் பகழி
பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறிது உறிஇப்
புழல்தலைப் புகர்க்கலை உருட்டி உரல் தலைக்
கேழற் பன்றி வீழ அயலது
அழற் புற்றத்து உடும்பில் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்
புகழ்சால் சிறப்பின் அம்புமிகத் திளைக்கும்
கொலைவன்"[23]

என்றப் புறப்பாடல் தெளிவுபடுத்துகிறது. எயினர்களின் விற்பயிற்சி உணவுக்காக விலங்குகளை வேட்டையாடுவதற்கே பயன்படுத்தப்பட்டதேயன்றி மண்ணாசை காரணமாகப் போரில் ஈடுபட்ட நிலையை மனித சமூகம் இன்னும் அடையவில்லை என்பது தெளிவாகிறது.

திறந்த வாயையுடைய நாய்களுடன், கானவர்கள் பசுமையான புதர்களை அடித்து கலைத்து குவிந்த இடத்தையுடைய வேலியிடத்தில் வலைகளை மாட்டி முயல்களைத் தப்பிவிடாதபடி வலையில் வளைத்துப் பிடிப்பதைப் பெரும்பாணாற்றுப்படை,

“அரைநாள் வேட்டம் அழுங்கி பகல்நாள்
படுவாய் ஞமலியொடு வைம்புதல் எருக்கித்
தொகுவாய் வேலித் தொடர்பலை மாட்டி
முள்அரைத் தாமரைப் புல்இதழ் புரையும்
நெடுஞ் செவி குறுமுயல் போக்கற வளைஇ”[24]

எனப் பதிவு செய்துள்ளது. எயினர் உணவுக்காகப் பன்றிகளையும் வேட்டையாடியுள்ளனர். கோடைக்காலங்களில் பன்றிகள் நீர் அருந்த வரும்போது மட்டுக்குழிகள் அமைத்து மறைந்திருந்து பன்றிகளை வேட்டையாடியுள்ளனர். தினைப்புனங்களை உண்ணவரும் பன்றிகளைப் பெரிய கற்பொறிகளை அமைத்து அதில் சிக்கிக் கொள்ளும் பன்றிகளை வேட்டையாடியதை மலைபடுகடாம் குறிப்பிடுகிறது[25]. புலியை வேட்டையாடுவதற்கு ‘அடார்’ என்னும் கற்பொறியினை அமைத்த செய்தியும்

அறியமுடிகிறது.[26] முள்ளம்பன்றியை வேட்டையாடிய இடத்து கூர்மையான முள் போன்ற மயிரைச் செலுத்தியதால் வலி தாங்காத கானவர் கூச்சலிட்டதையும் மலைபடுகடாம் குறிப்பிடுகிறது.[27] பயிற்சியளித்தப் பெண்மான்களைக் கொண்டு ஆண்மான்களைப் பிடித்துள்ளனர்.[28]

**எயினர்களின் விருந்தோம்பல்**

தமிழர் பண்பாடுகளில் தனிச்சிறப்புடைய ஒன்று விருந்தோம்பலாகும். பழந்தமிழகப் பண்பாடுகளுள் சிறந்த பண்பாடாகக் கூறுகின்றது[29].

"விருந்தே தானும்

புதுவது கிளந்த யாப்பின் மேற்றே"[30]

எனக் குறிப்பிடுகிறது. கோவலன் மாதவியோடு வாழ்ந்த காலத்தில் தனித்திருந்த கண்ணகி "தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை" என வருந்துவதும் அசோக வனத்தில் சிறையுற்றிருந்த சீதை இராமனை எண்ணி "விருந்து கண்டபோது என்னுறுமோ" என ஏங்குவதும் விருந்து உபசரித்தல் இல்லத்தார்க்குரிய பண்பாடு என்பதைப் புலப்படுத்துகிறது. விருந்தோம்பல் தன்மை தமிழ்ப்பெண்களின் பிறவிக் குணம் என்பதை உணர்த்தின[31]. நற்றிணை பாடலும்,

"அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்

முல்லை சான்ற கற்பின்

மெல்லியல் குறுமகள்"[32]

என விருந்தோம்பல் சிறப்பை உயர்வாகப் போற்றுகிறது.

வள்ளுவரும் மனைவியோடு இல்லத்திலிருந்து பொருள்களைப் போற்றி வாழ்வதெல்லாம் விருந்தினரைப் பேணிப் பாதுகாத்து உதவுவதற்கே ஆகும் என்ற பொருளில்,

“இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி

வேளாண்மை செய்தற் பொருட்டு”[33]

என்கிறார்.

புறநானூற்றிலும் வேட்டுவச் சிறுவர்கள் நெடுந்தொலைவு செல்லாமல் மடுக்கரையில் பிடித்து வந்த உடும்பின் தசையைப் பெய்து சமைத்து தயிரோடு கூடிய கூழையும், வேறு நல்ல உணவுகளையும் பாணருக்கும் அவரோடு வந்த விருந்தினருக்கும் ஒரு சேரக் கொடுத்து உண்பிக்கும் இயல்பினை உடையவள் எயினரின் மனைவி என்பதை,

அருமிளை இருக்கை யதுவே மனைவியும்

வேட்ட சிறாஅர் சேட்புலம் படராது

படமடைக் கொண்ட குறுந்தாள் உடும்பின்

விழுக்கு நிணம் பெய்த தயிர்க்கண் மிதவை

யாணர் நல்லவை பாணரொடு ஓரங்கு

வருவிருந்து அயரும் விருப்பினள்”[34]

எனப் புறநானூறு கூறுகின்றது. சங்க இலக்கியங்கள் தரும் பல்வேறு சான்றுகளால் உலக நாகரிகத்தில் உணவைச் சுவையாகச் சமைத்து உண்டவன் தமிழனே என அறுதியிட்டுக் கூறலாம்[35]. மேலும் எயினர் மனைக்கு வந்த

விருந்தினனான பாணனுக்குச் சிறிய தினையரிசியை முற்றத்தில் இட்டு அதனை உண்ண வரும் புறாக்களைப் பிடித்து சமைத்து விருந்து உபசரிக்க காலமின்மையால் பழைய சுட்ட முயற்கறியை உண்ணத் தருவோம் எனக் கூறி விருந்து உபசரித்து உணவூட்டியச் செய்தியைப் புறநானூறு விளக்குகிறது[36]. எயினர்கள் வறுமையிலும் செம்மையாக வாழ்ந்து விருந்தோம்பலைத் தன் தலையாயப் பண்பாகக் கொண்டமையைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. விருந்தினருக்கு இவர்கள் பெட்டைக் கோழிக் கறி பொரித்த சமையலோடு உணவளித்தனர்[37].

வரகும் தினையுமாக வீட்டில் இருந்ததெல்லாம் இரவலருக்கு தானமாகக் கொடுத்து தீர்ந்து போனதால் கதிரிடத்தே முற்றி உலரவிட்ட விதைத்தினையை உரலில் இட்டுக் குற்றி சமைத்து உண்ணச் செய்து விருந்து உபசரித்த பாங்கை,

“வரகும் தினையும் உள்ளவை எல்லாம்
இரவல் மாக்கள் உணக்கொளத் தீர்ந்தெனக்
குறித்துமாறு எதிர்ப்பை பெறாஅ மையின்
குரல் உணங்கு விதைத்தினை உரல்வாய்ப் பெய்து
சிறிது புறப்பட்டன்றோ இவளே”[38]

எனப் புறநானூறு தெளிவுபடுத்துகிறது. விதைத்தானியம் என்பது அடுத்த ஆண்டிற்கான மகசூலை வழங்கக்கூடிய ஒரு மூலப் பொருள். விவசாயி எந்தச் சூழ்நிலையிலும் விதைத் தானியத்தை உணவுக்காகப் பயன்படுத்துவதில்லை.

விதைத்தினையைக் குற்றி சமைத்து உண்பிக்கக் கூடிய எயினரின் விருந்தோம்பல் போற்றுவதற்குரியது.

**கானவர் தினை விதைத்தல்**

நாடோடியாக வேட்டையாடித் திரிந்த மனிதன் தானியங்களைச் சாகுபடி செய்யும் முயற்சியில் ஈடுபட்டான். நிலத்தில் வெறுமையாக விதைகளை விதைத்தால் எறும்புகளாலும், பறவைகளாலும் சேதமடையக் கூடும். எனவே நிலத்தைக் கிளறி புழுதியாக்கி அதில் விதைகளை விதைக்க வேண்டும் என அறிந்தான். நாடோடியாக வாழ்ந்த அவனுக்கு உழவுத் தொழிலைப் பற்றியும், உழுவதற்கான கருவிகளைப் பற்றியும் அறியாத நிலையில் இருந்தான்.

மலைவாழ் பன்றிகளால் கிளறி புழுதியாக்கப்பட்ட இடங்களில் குறவர் மழைக் காலத்தில் தினையை விதைத்தனர். வரகும், தினையும் முல்லை நிலத்தின் முக்கிய பயிர்களாகும். பன்றிகள் கிளறிய புழுதியில் கானவர் தினை விதைத்ததை,

“அருவி ஆர்க்குங் கழைபயில் நனந்தலைக்
கறிவளர் அடுக்கத்து மலர்ந்த காந்தள்
கொழுங் கிழங்கு மிளிரக் கிண்டிக் கிளையொடு
கடுங்கண் கேழல் உழுதபூமி
நன்னாள் வருபதம் நோக்கிக் குறவர்
உழாஅது வித்திய பரூஉக்குரல் சிறுதினை
முந்து விளை யாணர்”[40]

எனப் புறநானூறு குறிப்பிடுகிறது. வன விலங்குகளும், பறவைகளும் தினைப்பயிரை அழித்துவிடும். எனவே அதைக் காவல் காப்பது மனிதனின் கடமையாயிற்று. அங்ஙனம் ஆண்களும், பெண்களும் தினைப்புனம் காத்தச் செய்தியைச் சங்க இலக்கியங்கள் விரிவாகச் சுவைபடக் குறிப்பிடுகின்றன. இப்பொழுது தான் இயற்கையாகக் கிடைத்த காய்கனிகளையும் விலங்குகளின் ஊனையும் தின்று வாழ்ந்த மனிதன் தன் உடல் உழைப்பைப் பயன்படுத்தி தானியங்களை உற்பத்திச் செய்யத் தொடங்கினான். மக்கள் தொகைப் பெருக்கமும் உணவுப் பற்றாக்குறையும் அவனுக்கு அதிகமான நிலப்பரப்பினைப் பண்படுத்தி சாகுபடிக்கு கொண்டு வரத் தூண்டியது. நிலத்தைக் கிளறி புழுதியாக்க அவனுக்கு அனுபவம் கிடைத்ததால் காடுகளைத் திருத்தி சாகுபடிக்கு ஏற்றதாகப் பண்படுத்திக்கொண்டான். அங்ஙனம் பண்படுத்திய நிலத்தில் வரகும், தினையும் பயிறு விதைத்தச் செய்தியை,

"................ கானவர்
கரிபுனம் மயக்கிய அகன்கண் சொல்லை
ஐவனம் வித்தி மையுறக் கவினி
ஈனல் செல்லர் ஏனற்கு இழுமெனக்
கருவி வானம் தலைஇ யாங்கு
ஈத்த நின்புகழ் ஏத்திக் தொக்க என்
பசிதினத் திரங்கிய ஒக்கலும் உவப்ப"[41]

எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.

**தினைப்புனங் காத்தலும் களவு மணமும்**

குறிஞ்சிப் பாட்டில் தலைவியும் தோழியும் மலையிலுள்ள 99 வகை மலர்களைப் பரப்பி விளையாடிக் கொண்டிருந்தனர். அப்போது தலைவனின் வேட்டை நாய்கள் வர அவற்றைக் கண்டு இருவரும் நடுங்குகின்றனர். தலைவன் தினைக் கதிரை அழித்துக் கொண்டிருந்த யானையை அம்பெய்து விலக்க யானையானது தலைவியிருக்கும் இடம் வந்தது. உடனே தலைவி அச்சத்தோடு தலைவனிடம் செல்லத் தலைவன் அவளது அச்சத்தைப்போக்கினான். பின்புத் தலைவி அங்கு வந்தப் புதுநீர்ப் பெருக்கில் நீராடிய போது கால் தளர்ந்து வெள்ளப்பெருக்கால் இழுத்துச் செல்லப்பட்டாள். உடனே தலைவன் விரைந்து சென்று நீரிலிருந்து அவளைக் காப்பாற்றி தலைவியை நோக்கி அஞ்சாதே என்று நெற்றியைத் தடவினான். இந்நிகழ்ச்சிகளின் தொடர்பாக ஒருவர் பால் மற்றொருவருக்கு காதல் உருவாகியது. அகப்பொருட் சிறப்பை அதிலும் தலைவியின் தன்னிகரற்ற அன்பை நற்றிணை தெற்றென விளக்குகிறது.[42]

குறிஞ்சித் திணைக்குரிய மேட்டு நிலத்தில் சிவந்த தினைப்பயிர் செழித்து வளர்ந்தது. அதனை உண்பதற்கு வருகின்ற கிளி முதலான பறவைகளைத் தினைப்புனம் காக்கும் மகளிர் தட்டை முதலிய கருவிகளைப் பயன்படுத்தி விரட்டியச் செய்தியை,

“சிறுதிணைப் படுகிளி கடீஇயர் பல்மாண்
குளிர்கொள் தட்டை மதன்இல புடையா”[43]

என்ற அகநானூற்றுப் பாடலடிகள் வாயிலாக உணரமுடிகிறது. மகளிர் தினைப்புனங்களில் பறவையினங்களை விரட்ட காவல் காக்கும் போது தினைப்புனங்களுக்குப் பக்கத்தில் ஊசல் கட்டி ஆடியதைக் குறிஞ்சிக்கலி,

"இனக்கிளி யாம் கடிந்து ஓம்பும் புனத்துஅயல்

ஊசல் ஊர்ந்து ஆட, ஒரு ஞான்று வந்தானை"[44]

எனக் குறிப்பிடுகிறது.

## நானில வளவேறுபாடு

குறிஞ்சியின் மலைவளமும், மலையிலிருந்து கிடைக்கும் மலைபடு பொருள்களும் ஒருவகை வளமேயாகும். பயிறு, தினை, ஐவனநெல் முதலான யாவும் அக்குறிஞ்சி நிலத்தில் விளைந்த உணவுப் பொருள்களாகும். இவ்வளங்களே குறிஞ்சி வாழ்வியலின் பொருளியல் பண்பாடாயின. முல்லை நிலத்தின் காட்டுவளமும் கூட இன்னொரு வகையான வளமேயாகும். குறிஞ்சி நில வாழ்வியலில் பொருளியல் பண்பாட்டைத் தழுவியே காடுகளை அழித்து உண்டாக்கிய கொல்லை உழவும், ஏர்க்காட்டு உழவும் தோன்றின. முல்லை நிலத்தின் வளம் கால்நடைகளை நம்பியே இருந்தன.

மருதநில வளம் உழவுத்தொழிலை நம்பி விளைச்சலைப் பெருக்கிய நெற்பயிர் வளமாகவே இருந்தது. மலைகளில் தோன்றி காடுகளின் வழியே பாய்ந்த ஆறுகள் மருத நிலத்தின் வளத்திற்கு மூல காரணமாக இருந்தன. நெய்தல் நிலத்தின் மீன் வளப் பொருளியல் வளமே கடல் வளமாகும். எனவே

ஒரு வளத்தை மட்டுமே வைத்துக் கொண்டு எந்த நாடும் தனித்து இயங்க முடியாது என்பதால் திணைகள் மயங்கின. இத்திணைகளுக்கு இடையிலான வேற்றுமைகள் எல்லாம் இயற்கையானதால் ஒன்றைப் பிடித்துக் கொண்டு மற்றதை விட்டுவிடவோ, மக்களால் மாற்றி அமைத்து விடவோ முடியாது.

## நானிலத் தலைமை வேறுபாடுகள்

தமிழர் நிலங்களை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற முறையில் பிரித்தனர். அறிவியலாளர்கள் மாந்தரினம் மலைப்பகுதிகளில் தோற்றம் பெற்று வளர்ச்சியமைந்ததாகக் கூறுகின்றனர். மனிதன் ஆரம்ப காலத்தில் நாகரிகமற்ற பழங்குடியினராய் மலைகளிலும் காடுகளிலும் சுற்றித்திரிந்தான். இதனை அடியொற்றியே தமிழ் இலக்கியங்களும் குறிஞ்சி நிலமே மனிதனின் முதல் வாழிடம் என வெளிப்படுத்துகின்றன. இந்நிகழ்வு இயற்கையானதும், வரலாற்றை அடிப்படையாகக் கொண்டதுமாகும். ஆனால் தொல்காப்பியர்,

“முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே”[45]

என முல்லையை முதன்மைப்படுத்துகிறார். அதற்குக் காரணம் கற்பிக்கும் நச்சினார்க்கினியர் மேற்கூறிய ஒழுக்கமெல்லாம் இல்லறம் பற்றிய ஒழுக்கமாதலின் கற்பொடு பொருந்தி கணவன் சொற்பிழையாது இல்லிருந்து

நல்லறஞ்செய்தல் மகளிரது இயற்கை முல்லையாதலின் அது முற்கூறப்பட்டது என நியாயம் கற்பிக்கிறார்.

பழந்தமிழர்களின் நாகரிகத்தின் வளர்ச்சி குறிஞ்சி வாழ்வியலில் தொடங்கி முல்லை நிலத்திற்குப் பெயர்ந்து இயற்கை மாற்றங்களால் பாலையாகக் கெட்டு மருத நிலத்தில் வளர்ந்து நெய்தலில் வணிகப் பொருளாதாரத்தில் நிறைவடைந்தது. அரசின் தோற்றுவாயை முல்லை நிலத்தில் தான் பார்க்கிறோம். ஏனென்றால் ஆநிரைகளை மேய்க்கும் கைக்கோலே அரசின் செங்கோலாக மாற்றம் பெற்றது. குறிஞ்சியிலிருந்து முல்லைக்கும், முல்லையிலிருந்து மருதத்திற்கும், மருதத்திலிருந்து நெய்தலுக்கும் திரிந்த நிலையே தமிழர்க்குரிய பண்பாடு இயங்கியலின் வளர்ச்சிப் போக்காகும். ஆயினும் இதை முற்றிலும் ஏற்றுக்கொள்வதற்கில்லை. மருத வாழ்வியலின் மக்களின் அளவிலாப் பெருக்கமும் படையெடுப்புத் தேவைகளும் மருத நிலத்தவரை குறிஞ்சியை நோக்கியோ, முல்லையை நோக்கியோ திருப்பின. இத்தகைய எதிர்திசை இயக்கமே தமிழர்களின் பண்பாட்டு வரலாற்றின் மறுபகுதியாகும். மருத வாழ்வியலில் தோன்றிய பெருநகரங்களில் ஆட்சியர்களுக்கு இடையில் மூண்ட போர்களிலிருந்து உயிர் தப்பி மலைகளிலும், காடுகளிலும் குடிபுகுந்தவர்களும் உண்டு. இங்ஙனம் குடிபுகுந்தவர்கள் தனக்குத் தெரிந்திருந்த மருதநில வேளாண்தொழில் நுட்பங்களைக் காடுகளிலும் மலைகளிலும் புகுத்தி உழவு செய்ய முயன்றபோதும் அந்த உழவு மருதநிலத்து பெரும் வேளாண்மைக்கு ஈடாகவில்லை. நெய்தல் நில வாழ்க்கை கடல்படு

பொருட்களையும், வணிகப் பொருளாதாரத்தையும் கொண்டு அமைந்துள்ளது. இந்நில அமைவுக்கு ஏற்றவாறு தலைமையிலும் வேறுபாடு அமைந்து காணப்படுகின்றன.

சங்ககாலத் தலைவர்களைச் சீறூர் மன்னன், முதுகுடி மன்னர், குறுநில மன்னர், வேந்தர் என நான்காகப் பாகுபடுத்தலாம். மேற்கூறிய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நால்வகை நிலங்களும் இத்தகைய தலைமை வேறுபாட்டோடு தொடர்புடையனவாகவும், அதற்குரிய காரணங்களாகவும் இருந்துள்ளன.

**சீறூர் மன்னர்களும் வாழ்க்கை முறைகளும்**

சங்ககால மன்னர்கள் புலவர்கள் பாராட்டும் பண்புடையவர்கள். புறநானூற்றில் 285 முதல் 335 வரையுள்ள பாடல்கள் சீறூர் மன்னர்களைப் பற்றியுள்ளன. இவர்கள் ஆட்சி செய்த நிலப்பகுதிகள் “பருத்தி வேலிச் சீறூர்”[46] “கரம்பைச் சீறூர்”[47] “புன்புலச் சீறூர்”[48] “புன்புலம் தழிஇய அம்குடிச் சீறூர்”[49] என அனைத்து புன்செய் நிலப்பகுதியையும் ஆட்சிப் புரிந்ததாக அறியமுடிகிறது. இவர்கள் இயற்பெயரால் குறிப்பிடப்படாமல் வீரம் சார்ந்த பெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளனர். வன்புலச் சீறூரின் குடியாகச் சீறூர் மன்னன் இருந்ததைப்,

“புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்

குடியும் மன்னுந் தானே கொடியெடுத்து

நிறையழிந்து எழுதரு தானைக்குச்

சிறையும் தானேதன் இறைவிழு முறினே”[50]

என்றப் புறப்பாடல் குறிப்பிடுகிறது. சீறூர் மன்னன் கைப்பொருள் இல்லாத நிலையில் அடுத்தவரிடம் இரந்து நிற்கும் நிலையை,

“அத்தம் நண்ணிய நாடுகெழு பெருவிறல்

கைப்பொருள் யாதொன்றும் இலனே”[51]

“சிறுபுல் லாளர் முகத்தள கூறி

வரகுகடன் இரக்கும் நெடுந்தகை”[52]

என்றப் பாடலடிகள் காட்டுகின்றன. இச்சீறூர் மன்னன் போர் நிகழ்வதற்கு முன் தன்னிடம் வந்த விருந்தினரை உபசரிக்க வேண்டி தன் வாளை ஈடு வைத்து பொருள் பெற்று விருந்து உபசரிக்கும் பண்புடையவன் என்பதையும் சங்க பாடல்கள் பதிவு செய்துள்ளன[53]. சீறூர் மன்னன் தன் குடிசையின் முன்னுள்ள பந்தர் கீழ்ப் பாணரோடு ஒருங்கே அழகும், காட்சிக்கு எளியனாகும் தன்மை உடையனவாக இருந்துள்ளான்.[54]

முதுகுடி மன்னர்கள் குறிப்பிட்ட நில எல்லைகளை அடிப்படையாகக் கொண்டு அரசின் தலைவர்களாய் இருந்ததைப் புறப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. பின் இவர்கள் மருத நிலத்திற்குச் சொந்தக்காரர்களாக இருந்ததை,

“பிணங்கு கதிர்க் கழனி நாப்பன் ஏமுற்று

உணங்கு கலன் ஆழியின் தோன்றும்

ஓர் எயில் மன்னன் ஒருமட மகளே”[55]

என்னும் பாடல் காட்டுகிறது. இம்மன்னர்கள் மலை போன்ற பல வைக்கோற் போர்களை அழித்து கடாவிட்ட இடத்தே குவிந்த நெல்லை வலிய வில்வீரர்களுக்கு உணவாகக் கொடுப்பார்கள் என்ற செய்தியை,

“குன்று கண்டன்ன நிலைப்பல் போர்பு
நாள்கடா அழித்த நனந்தலைக் குப்பை
வல்வில் இளையற்கு அல்குபத மாற்றாந்
தொல்குடி மன்னன்”[56]

எனப் புறம் குறிப்பிடுகின்றது. இவர்கள் பெருநிலப் பரப்பை ஆண்ட வேந்தர்களாகக் காட்டப்படாமல் ஊர்த் தலைவர்களாகவே காட்டப்பட்டுள்ளனர். இம்முதுகுடி மன்னர்கள் கபிலர், பரணர், அரிசில் கிழார், மருதனிளநாகனார், காரிக்கண்ணனார் முதலிய புலவர்களால் பாடப்பட்டுள்ளனர். இவர்கள் குறிப்பிட்ட குலத்தினரோடு மட்டுமே மண உறவு வைத்துள்ளனர். ஒலிக்கும் கடலான முளவையுடைய முசிறி நகரம் போன்ற நன்மையுடைய உயர்ந்த பொருள்களைக் கொண்டு உவகையுடன் தந்தாலும் ஒப்போரும், உயர்ந்தோரும் இல்லாதவரை மணந்து கொள்ள மாட்டாள் என்று ஊர்த் தலைவனான தந்தை,

முழங்குகடல் முழவின் முசிறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்து வந்து கொடுப்பினும்
புரையர் அல்லோர் வரையலள் இவள் எனத்
தந்தையும் கொடா அன்”[57]

என மகற்கொடை மறுக்கக் காணலாம். பொருள் கொடுத்து மகட்கொடை வேண்டியதை மறுத்தபோது அச்சமுதாயத்தின் மேல் போர்த்தொடுத்து மதிலும், கிடங்கும் அழிந்து கிடங்கில் நீர் இல்லாமல் அதனுள் கன்றுகள் மேயும் ஊரின் நிலைமையை,

"மதிலும் ஞாயில் இன்றே கிடங்கும்
நீஇர் இன்மையின் கன்று மேந்து உகளும்
ஊரது நிலைமையும் இதுவே"[58]

எனப் புறப்பாடல்கள் காட்டுகின்றன. முதுகுடி மன்னரிடம் மகட்கொடை வேண்டிய வேந்தர்களின் நோக்கமானது மகட்கொடை வேண்டிப் பெற்றால் அந்த மண உறவு மூலம் மருத நிலங்களை அடைந்துவிடலாம் என்பதாகும். மேலும் வேந்தர்கள் தன் மேலாண்மையையும், வளமையையும், செல்வாக்கினையும் வெளிக்காட்டவே போர் தொடுத்ததாகவும் ஊகிக்க வேண்டும்.

**குறுநில மன்னர்கள்**

குறுநில மன்னர்கள் முற்கூறப்பட்ட முதுகுடி மன்னர்களைவிட சற்று வளத்தில் மேலானவர்கள். இவர்கள் இயற்கை வளமிக்க மலைப் பகுதிகளின் தலைவர்களாக இருந்துள்ளனர். கடையெழு வள்ளல்கள் எனப் போற்றப்படும் எழுவரும் இக்குறுநில மன்னர் பிரிவைச் சார்ந்தவர்கள்.

இவர்களின் கொடைத் தன்மையும் வீரமும் பலவாறு போற்றப்பட்டுள்ளன. கொடைத் தன்மை மூலம் இவ்வுலகத்தைக் காப்பதற்கு மாரியுடன் பாரியும் உண்டு என்பதைப்,

“பாரிபாரி என்று பல ஏத்தி
ஒருவற் புகழ்வார் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈங்கு உலகுபுரப் பதுவே”[59]

எனப் பாரியின் கொடைத் தன்மையைக் கபிலர் பாராட்டியுள்ளார். இக்குறுநில மன்னர்கள் உடைமைப் பண்புடையவர்களாக இருந்தாலும் உள்ளதைப் புலவர்களுடன் பகுத்துண்டு வாழும் இயல்பு கொண்டவர்களாக வறுமையைப் போக்கும் கொடைத்தன்மை உடையவர்களாக இருந்ததை,

“மறுமை நோக்கின்றோ அன்றே
பிறர் வறுமை நோக்கின்று அவன் கைவன்மையே”[60]

எனப் பாணர் பதிவு செய்கிறார். அதியமான் தன்னிடம் இருப்பதைப் பிறருடன் பகிர்ந்துண்டு வாழ்ந்ததை ஔவையார்,

“சிறியகட் பெறினே எமக்கீயும் மன்னே
பெரிய கட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணும் மன்னே
சிறு சோற்றானும் நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற்றானும் நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லாம் எமக்கீயும் மன்னே”[61]

என அதியனின் இறப்பிற்குப் பின் மனம் உருகிப் பாடியுள்ளார். பாணர் முதலியோர் செல்வங்களை உரிமையால் எடுத்துக் கொள்வோராயின் அவை என்னுடையவை என்று மீண்டும் அவற்றைக் கவர்ந்து கொள்ளாத இயல்புடைய மன்னன் ஆய் ஆண்டிரன் என்பதை,

"மலைகெழு நாடன் மாவேல் ஆஅய்
களிறும் அன்றே மாவும் அன்றே
ஒளிறுபடைப் புரவிய தேரும் அன்றே
தமதெனத் தொடுக்குவர் ஆயின் எமதெனப்
பற்றல் தேற்றாப் பயங்கெழு தாயமொடு
அன்ன வாக நின் வாழி"[62]

எனப் பதிவு செய்துள்ளார். இத்தகைய கொடைத்தன்மை வாய்ந்த குறுநில மன்னர்களின் இறப்பானது பாணர் மற்றும் புலவர்களின் வாழ்வின் இழப்பாகக் கருதப்பட்டது. அதியமானது மார்பில் வைத்த வேலானது பாணர், இரப்போர் மற்றும் புலவர் ஆகியோர் வாழ்வைச் சீர்குலைத்தன என்பதை,

"அருந்தலை இரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்செல் நுண்தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்று வீழ்ந்தன்று அவன்
அருநிலத்து இயங்கிய வேலே

ஆசாகு எந்தை யாண்டுளன் கொல்லோ

இனிப் பாடுநரும் இல்லை,

பாடுநடுக் கொன்று ஈகுநரும் இல்லை”[63]

என ஔவையார் தெளிவுபடுத்தியுள்ளார். இப்பாடல் அதியமானின் இறப்பிற்குப் பின் பாடுவாரும் இல்லை. பாடுவார்க்கு ஈவாரும் இல்லை எனக் கூறப்படுவதன் மூலம் குறுநில மன்னனான அதியமானின் கொடைத்தன்மைப் புலப்படுகிறது. குறுநில மன்னர்களாகிய இவர்கள் உடைமைச் சமுதாயத்தின் தலைவர்களாக இருந்தாலும் தம் உடைமையைப் பலருக்கும் பயன்பட இம்மன்னர்கள் வரையறையில்லாது வாரி வழங்கியுள்ளனர்.

**மகட்பாற் காஞ்சியும் வேந்தர்களும்**

போர் பகைமை காரணமாக எழுவதாக இருந்தாலும் அறவழிமுறைகள் அதிலும் பின்பற்றப்பட்டுள்ளன. போர் இலக்கணங்களை,

“வெட்சி நிரை கவர்தல் மீட்டல் கரந்தையாம்

வட்கார் மேல் செல்வது வஞ்சியாம் உட்காது

எதிர்வூன்றல் காஞ்சி எயில் காத்தல் நொச்சி

அது வளைத்தலாகும் உழிஞை - அதிரப்

பொருவது தும்பையாகும், போர்க்களத்து மிக்கார்

செருவென்றது வாகையாம்”[64]

என்னும் பழம்பாடல் உணர்த்துகிறது. ஆனால் வேளிர் தலைவனிடம் பெண் கேட்டு அவன் மறுத்தபோது ஏற்பட்ட போரினால் பேரழிவுகள் ஏற்பட்டுள்ளன. மூவேந்தர்களின் இச்செயல் கண்டு மனம் வெதும்பியத் தமிழ்ப்புலவர்கள் பலர். இவர்களில் குறிப்பிடத் தக்கவர்களாகக் கபிலரையும், பரணரையும் குறிப்பிடலாம், வேந்தர் மகட்கொடை வேண்டுவதும் முதுகுடி மன்னர் அதை மறுப்பதும் மகட்பாற் காஞ்சிப் பாடல்களின் பாடுபொருள்களாகும். மகளை வளர்த்தத் தாய் கூடவே பகையையும் வளர்த்துவிட்டதால் பண்பும் அறமும் இல்லாதவளாகி விட்டாளே என்ற பொருளில்,

"தகை வளர்த்து எடுத்த நகையொடு
பகை வளர்த்து இருந்த இப்பண்பில் தாயே"[65]

எனக் குறிப்பிட்டு மூவேந்தர்கள் பெண்கேட்டு நடத்தியப் படையெடுப்புகளைப் பரணர் மறைமுகமாகக் கண்டித்தார். நாளையப் போரில் இவள் தந்தையை வென்று மீள்வேன் அல்லது அப்போரில் வீரசுவர்க்கம் புகுவேன் என்று வஞ்சினம் கூறி போரிட்ட அறியாமையைக் கண்டு பரணர் மனம் வருந்தினார். மாற்று அரசனின் அல்லது வேளிர் தலைவனின் பெண்ணைக் கேட்டுப் போர் ஆற்றியே கெட்ட முடிவேந்தர்களின் அணிவகுப்பே தமிழரிடையே மட்டுமீறிய அளவுக்குச் சென்றது"[66].

பாரியின் பறம்பு மலையை மூவேந்தர்கள் முற்றுகையிட்டுப் பாரியைச் சூழ்ச்சியால் கொன்றனர். பாரியின் மகளிர் தன் தந்தையை நினைத்துக் கையறுநிலையாக வருந்திக் கூறியதை,

"அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்

எந்தையும் உடையேம் எம்குன்றும் பிறர் கொளார்

இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவில்

வென்றுஎறி முரசின் வேந்தர் எம்

குன்றும் கொண்டார் யாம் எந்தையும் இலமே"[67]

எனக் கபிலர் பாடியுள்ளார். "வேந்தர் எம் குன்றும் கொண்டார்" என்ற செய்யுளடிகளால் வேந்தரின் மண்ணாசை வெளிப்படக் காண்கிறோம். பாரியின் பறம்பு மலையை மூவேந்தர்கள் கைப்பற்றிய பின் பாரிமகளிரைத் திருமணம் செய்து கொள்ளவில்லை. வேந்தர்களின் நோக்கம் முதுகுடி மன்னர்களின் மகளை மணம் செய்தல் மட்டுமன்று மருத நில வளங்களைக் கைப்பற்றுதலே ஆகும்.

## தொகுப்புரை

இந்திய மொழிகளில் மிகத் தொன்மையான வரலாறு தமிழ் மொழிக்கு உண்டு. இந்த வரலாற்றுச் சிறப்புக்குக் காரணமாக அமைபவை சங்க இலக்கியங்களாகும். ஒரு குறிப்பிட்டக் கால கட்டத்தில் எழுகின்ற இலக்கியப் படைப்புகள் அக்கால மக்களின் வாழ்க்கைமுறை, பண்பாடு, ஆட்சிமுறை, வீரம், ஒருமைப்பாடு ஆகியவற்றைப் பிரதிபலிக்கின்றன.

சங்க இலக்கியங்கள் சங்ககால மக்களின் வாழ்க்கை முறை பெண்ணை முதன்மை படுத்தியே பேசுகின்றன. எயினர்கள் வரகின் வைக்கோலால் வேயப்பட்ட குடிசைகளில் வாழ்ந்தனர். விருந்தினர்களுக்கு

முறையாக விருந்து உபசரித்து எஞ்சியதை உண்டு வாழ்ந்துள்ளனர். சிறப்புடைய பண்பாடுகளுள் ஒன்றான விருந்தோம்பல் சங்ககால மக்களிடையே தொடர்ந்து வந்துள்ளதை இலக்கியச் சான்றுகள் வழி அறியமுடிகிறது. சங்க இலக்கியங்கள் வழி உலக நாகரிகத்தில் உணவைச் சுவையாகச் சமைத்து உண்டவன் தமிழனே என அறியமுடிகிறது. விதைத் தினையைக் கூட உரலில் இட்டுக்குற்றிச் சமைத்து விருந்தினரை உண்ணச் செய்ததைப் புறநானூறு குறிப்பிடுகிறது.

நாடோடியாக வேட்டையாடித் திரிந்த மனிதன் தானியங்களைச் சாகுபடி செய்யும் முயற்சியில் ஈடுபட்டான். நிலத்தைக் கிளறிப் புழுதியாக்கி அதில் விதைகளை விதைக்கத் தொடங்கினான். ஆண்களும், பெண்களும் தினைப்புனம் காத்தச் செய்தியைச் சங்க இலக்கியங்கள் விரிவாகக் குறிப்பிடுகின்றன. காடுகளைத் திருத்தி சாகுபடிக்கு ஏற்றதாகப் பண்படுத்திக் கொண்டான். பண்படுத்திய நிலத்தில் வரகும், தினையும் விதைத்ததைப் புறநானூறு வழி அறியமுடிகிறது. தினைப்புனங்களில் பறவையினங்களை விரட்டக் காவல் காக்கும் போது மகளிர் ஊசல்கட்டி ஆடியதைக் குறிஞ்சிக் கலி குறிப்பிடுகிறது.

குறிஞ்சியின் வளம் மலைபடு பொருள்களின் வளமாகும். முல்லை நிலத்தின் வளம் கால்நடைகளையே நம்பி இருந்தன. மருத நில வளம் உழவுத்தொழிலை நம்பி விளைச்சலைப் பெருக்கிய நெற்பயிர் வளமாக இருந்தது. நெய்தல் நிலத்தின் மீன்வளப் பொருளியல் வளமே கடல் வளமாகும். தமிழ் நிலங்களை நானிலங்களாகப் பிரித்தனர். அறிவியலாளர்கள் மாந்தரினம்

மலைப்பகுதியில் தோற்றம் பெற்று வளர்ச்சியடைந்ததாகக் கூறுகின்றனர். இதனை அடியொற்றியே தமிழ் இலக்கியங்களும் குறிஞ்சி நிலமே மனிதனின் முதல் வாழிடம் என வெளிப்படுத்துகின்றன.

பகைமை காரணமாக எழுந்த போரிலும் அறவழி முறைகள் பின்பற்றப்பட்டுள்ளன. மூவேந்தர்கள் பெண் கேட்டு நடத்தியப் படையெடுப்புகளைப் பரணர் மறைமுகமாகக் கண்டித்துள்ளார். பாரியின் பறம்பு மலையை மூவேந்தர்கள் முற்றுகையிட்டு சூழ்ச்சியால் பாரியைக் கொன்றுள்ளனர். முதுகுடி மன்னர்களின் மகளை மணம் செய்தல் மட்டும் வேந்தர்களின் நோக்கமன்று. மருத நில வளங்களைக் கைப்பற்றுதல் வேந்தர்களின் நோக்கமாகும்.

இவ்வியலில் சங்க இலக்கியங்கள் பற்றி சில கருத்துக்கள் கூறி முடிக்கப்பட்டுள்ளன.

**இயல் குறிப்புகள்**

1. ஆனந்தன், சு., தமிழ் இலக்கிய வரலாறு, ப. 24.
2. ஆனந்தன், சு., தமிழ் இலக்கிய வரலாறு, ப. 36.
3. தொல். சிறப்பு பாயிரம், பக். 1-3.
4. சிலப்பதிகாரம், காடுகாண் காதை, பக். 18-22.
5. சோமசுந்தர பாரதியார், ச., தமிழும் தமிழரும், ப. 5.
6. புறம். 17.
7. புறம். 6, 1-4.
8. சிலப்பதிகாரம், வேனிற்காதை, பக். 1-2.
9. பிள்ளை, கே.கே., தமிழக வரலாறு மக்களும், பண்பாடும், ப. 23.
10. பதிற். 43 : 7-8.
11. புறம். 279.
12. கலித். பாலைக்கலி. 9 : 6-8.
13. சுப்பிரமணியன், கா., சங்க காலச் சமுதாயம், ப. 15.
14. புறம். 86 : 4-6.
15. சந்திரசேகரன், இரா., சங்க இலக்கியம் கருத்தியல் வளம், ப. 82.
16. புறம். 331.
17. பிள்ளை, கே.கே., தமிழக வரலாறு மக்களும், பண்பாடும், ப. 145.
18. பதிற். 30 : 21-24.
19. புறம். 306 : 1-2.

20. புறம். 320 : 1-4.
21. சுப்பிரமணியன், கா., சங்க காலச் சமுதாயம், ப. 15.
22. கலித்தொகை 102.
23. புறம். 152 : 1-8.
24. பெரும். 111-115.
25. மலைபடு. 193-195.
26. புறம். 19.
27. மலைபடு. 300-301.
28. புறம். 320.
29. நீலகண்டபிள்ளை, தா., சங்கத் தமிழர் வாழ்வியல், ப. 116.
30. தொல். செய்யுளியல், நூ. 540.
31. சாமி. சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், ப. 103.
32. நற்றிணை. 13.
33. குறள். 81.
34. புறம். 326 : 7/12.
35. நீலகண்டபிள்ளை, தா., சங்கத் தமிழர் வாழ்வியல், ப. 103.
36. புறம். 319 : 5-9.
37. செல்வம், வே.தி., தமிழக வரலாறும் பண்பாடும், ப. 119.
38. புறம். 333 : 9-13.
39. செல்வம், வே.தி., தமிழக வரலாறும் பண்பாடும், ப. 142.

40. புறம். 168 : 1-7.

41. புறம். 159 : 15-21.

42. சந்திரசேகரன், இரா., சங்க இலக்கியம் கருத்தியல் வளம், ப. 21.

43. அகம். 32 : 5-6.

44. கலித். 37 : 13-14.

45. தொல்.பொருள். நூ. 5.

46. புறம். 299.

47. புறம். 285.

48. புறம். 328.

49. புறம். 324.

50. புறம். 314 : 4-7.

51. புறம். 313 : 1-2.

52. புறம். 327 : 6-7.

53. புறம். 316.

54. சியாமளா, ஜெ., சங்க கால அரசு உருவாக்கம், ப. 126.

55. புறம். 338 : 10-12.

56. புறம். 353 : 8-11.

57. புறம். 343 : 10-13.

58. புறம். 355 : 1-3.

59. புறம். 107.

60. புறம். 141 : 14-15.

61. புறம். 235 : 1-6.

62. புறம். 135 : 13-18.

63. புறம். 235 : 10-17.

64. தேவிரா, தமிழ் இலக்கணம், ப. 400.

65. புறம். 336 : 11-12.

66. குணா, மண்ணுரிமை, ப. 78.

67. புறம். 112.

கபிலர்

கபிலர் பாட்டுக்கள் சங்க இலக்கியத்துள் காணப்பெறும் முறை

திணை

ஐந்திணை பாடிய புலவர் (கபிலர்)

கம்பருக்கு நிகர் – கபிலர்

கபிலர் புகழ்

பாரியின் தோழன் கபிலர்

நக்கீரர் கபிலரைப் புகழ்ந்து பாடியது

கபிலருக்கு செல்வக் கருங்கோ வாழியாதன் அளித்த பரிசு

பெருங்குன்றூர்கிழார் கபிலரைப் புகழ்ந்தது

இளங்கீரனார் பாடிய புறநானூற்றுப் பாடல்

மாறோக்கத்து நப்பசலையார் கூறும் கருத்து

போற்றத்தக்க பெரும் புலவர் கபிலர்

கபிலர் – பெயர்க் காரணம்

பாடலில் தம் பெயரைப் பதித்தவர் – கபிலர்

கபிலரும் பரணரும்

பாரிக்காகப் பாடியவர் கபிலர்

கபிலரால் பாடப் பெற்றவர்கள்

கபிலர் இருங்கோவேளிடம் கண்டித்துக் கூறியது

ஆரியவரசன் பிரகத்தன்

கபிலர் அறிவுறுத்திய தமிழ்

கபிலர்

தலைவி தலைவன் காதல்

தலைவன் மகிழ்ந்து உரைத்தது

தலைவியின் அழகு நலன்களைத் தலைவன் தானே சொல்லி இன்புறுதல்

தலைவனுக்கு தோழி கூறியது

தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியது

தலைவன் தனக்கு தானே சொல்லிக் கொள்வது

குறிஞ்சிக் கலியில் தலைவியின் காதல்

தலைவிக்குத் தோழி கூறியது

தலைவி தோழிக்குத் கூறியது

தோழி தலைவிக்குக் கூறியது

தலைவன் வரும் வழியின் அருமை

தோழி வழியருமை கூறி வருந்துதல்

தலைவி தன் நெஞ்சிற்குத் கூறியது

தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியது

தோழியின் செயல்

தலைவியின் தன்மையை தலைவன் நண்பனுக்குக் கூறுதல்

குறிப்புக்கருத்து

தலைவியின் தன்மையை தலைவன் தோழிக்குத் கூறியது

முருகனை வேண்டி பெற்ற மகள் தலைவி

தோழி தலைவி நிலை பற்றிக் கூறுதல்

தலைவி தோழிக்குக் கூறியது

தலைவி தோழிக்குக் கூறியது

தலைவனும் தலைவியும் உறழ்ந்து கூறுதல்

தலைவன் பதிலும் தலைவி வேட்கை மறுத்து உரைத்தலும்

மகளிரை வலிதிற் புணர்தலும் அறநூல் வழக்கு, என தலைவன் மொழிதல்

புணர்ச்சிக்கு உடம்பட்டு, தலைவி நெஞ்சொடு கூறுதல்

தலைவன் தலைவியைப் புகழ்ந்து கூறுதல்

தலைவியின் அழகு

தலைவனின் தன்மை

குறிஞ்சிக்கலியில் தலைவன் இயல்பு

தலைவன் பண்பு

காதலியர் இயல்பு

உடன் போக்கு நிகழ்ந்தமை

நற்றிணையில் உள்ளுறை

நற்றிணையில் இறைச்சி

குறிஞ்சி நில மக்கள் மரபு

குறிஞ்சி நில மக்கள் பண்பாடு

உலக இயல்பு

கொடைப் பண்பு

தொகுப்புரை

## கபிலர்

பாட்டுத் தொகையாலும் பாடும் திறத்தாலும் கபிலர் சங்க காலப் பெரும் புலவர்களில் ஒருவர். மற்ற புலவர்களின் பாடல்களைக் காட்டிலும் கபிலர் பாடல்களேச் சங்க இலக்கியத்துள் மிக அதிகம்.

நமக்கு கிடைத்துள்ள சங்க இலக்கியத்துள் இவரது பாடல்களின் தொகை 235.

## கபிலர் பாட்டுக்கள் சங்க இலக்கியத்துள் காணப்பெறும் முறை

1) நற்றிணை 20
2) குறுந்தொகை 29
3) ஐங்குறுநூறு (குறிஞ்சி) 100
4) பதிற்றுப்பத்து (ஏழாம் பத்து) 10
5) அகநானூறு 18
6) புறநானூறு 28
7) குறிஞ்சிப்பாட்டு 1
8) கலித்தொகை (குறிஞ்சிக் கலி) 29

இந்த 235 கபிலர் பாடல்களில் குறிஞ்சித்திணை பற்றியன 193. புறப்பொருள் பாடல்கள் 38 எஞ்சியன நான்கும் அகத் திணைப் பாடல்களே.

## ஐந்திணை பாடிய புலவர் (கபிலர்)

அகநானூற்றில் பாலைத்திணையில் ஒன்றும்,

நற்றிணையில் முல்லைத்திணையில் ஒன்றும், மருதத்திணையில் ஒன்றும்.

குறுந்தொகையில் நெய்தல் திணையில் ஒன்றும்,

இவரால் பாடப்பட்டுள்ளன. இதனால் ஐந்திணையும் பாடிய புலவர் என்று ஆகிறது.

'குறிஞ்சி பாடக் கபிலன்' என்னும் மூதுரை, இவ்வளவு அதிகமான – குறிஞ்சிப்பாடல்கள் இவர் பாடியுள்ளதால் மட்டுமன்று. குறிஞ்சித் திணையைக் கற்பனை ஓவியமாக்கி, சொற்படமாக்கி, கருத்துக் காட்சியாக்கிக் காட்டும் திறத்தாலும் பொருந்தும்.

### கம்பருக்கு நிகர் - கபிலர்

கல்விப்பரப்பு, சொல்லாட்சிச் சிறப்பு, கற்பனை நயம், உவமை அழகு, காவிய நுணுக்கம், பாட்டுத்திறன், போன்றவற்றில் கம்பருக்கு நிகராகக் கபிலரை கருதலாம்.

### கபிலர் புகழ்

கபிலர் தாம் வாழ்ந்த காலத்தே பெரும் புகழுடையவராகத் திகழ்ந்திருக்க வேண்டும். ஏனெனில் பிற பெரும்புலவர்கள் பலரும் இவரைப் பாராட்டிப் புகழ்ந்து பாடியுள்ளார்கள். அவர்கள் கூற்றிலிருந்து இவர் தம்மைத் தாமே கூறிக் கொள்வதிலிருந்தும்[1] இவர் ஓர் அந்தணர் என்று தெரிகிறது. 'புலன்

அழுக்கற்ற அந்தணாளன் என்பதால் இவர் திருமணமே புரிந்து கொள்ளாத தூய துறவியாக வாழ்ந்திருக்க வேண்டும் எனஅறிகிறோம்.

மற்ற எல்லா உயிர்க்கும் ‘செந்தண்மையாம்’ அருள் பூண்டு ஒழுகிய காரணத்தால் ‘அந்தணன்’ என்றும் தூய துறவியாக வாழ்ந்த காரணத்தால் புலன் அழுக்கற்ற அந்தணாளன் என்றும் இவர் அழைக்கப் பெற்றிருக்க வேண்டும்.

**பாரியின் தோழன் கபிலர்**

பாரியின் தோழராக விளங்கிய பான்மையும்; பறம்பு மலையை மூவேந்தரின் முற்றுகையிலிருந்து காக்க முயன்ற பெருமையும்; பாரி மகளிரைத் திருமணம் செய்து கொடுக்க முயன்ற அருமையும் அனுபவம் முதிர்ந்து அறிவு நிறைந்த வயதான ஒரு தூய துறவியை நம் மனக்கண் முன் நிறுத்துகின்றன.

**நக்கீரர் கபிலரைப் புகழ்ந்து பாடியது**

அகநானூற்றில் நக்கீரர்,

“உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன்”[2]

என இவரது பெரும்புகழையும். வாய்மையையும் புகழ்ந்துள்ளார்.

**கபிலருக்கு செல்வக் கடுங்கோ வாழியாதன் அளித்த பரிசு**

பதிற்றுப்பத்தில் ஏழாவது பத்தினை, கபிலர் செல்வக் கடுங்கோ வாழியாதன் என்ற சேரமன்னன் மீது பாடினார். அப்பெருவேந்தன் இச்சிறந்த பாடல்களுக்காக,

"சிறுபுறம் என நூறாயிரம் காணம் கொடுத்து,

நன்றா என்னும் குன்றேறி நின்று

தன் கண்ணில் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான்"[3]

என்று குறிக்கப்பட்டுள்ளது. அஃதாவது நூறாயிரம் பொற்காசுகளை (காணம்) சிறு நன்கொடையாகக் கொடுத்தான்.

மேலும் நன்றா என்னும் மலைமீது ஏறிநின்று பார்த்து. கண்ணுக்குத் தோன்றிய நாடுகள் அனைத்தையும் 'இவை உமக்கு' எனக் காட்டி அவ்வேந்தன் கொடுத்தானாம்.

**பெருங்குன்றூர்கிழார் கபிலரைப் புகழ்ந்தது**

பதிற்றுப்பத்துள் எட்டாவது பத்தைப் பாடிய பெருங்குன்றூர்கிழார்,

"உவலை கூராக் கவலையில் நெஞ்சின்

நனவில் பாடிய நல்லிசைக்

கபிலன் பெற்ற ஊரினும் பலவே"[4]

என்று, கபிலர் பெற்ற இப்பரிசிலைப் புகழ்ந்துள்ளார். அப்பாடலுக்கே 'நாடு காண் நெடுவரை' என்று பெயர்.

சுற்றிலுமுள்ள நாடுகளைப் பார்ப்பதற்கு ஏற்ற 'உயர்ந்த மலை' என்பது இதன் பொருள்.

உவலை கூரா (இழிவு தோன்றாத) நெஞ்சம் என்றமையான் கபிலரின் பண்பாட்டு உயர்வு தெரிகிறது. 'கவலை இல் நெஞ்சம்' என்றது கபிலரின் பற்றற்ற துறவு வாழ்க்கையினால் வந்தது எனலாம். அல்லது,

கம்பருக்கு ஒரு சடையப்ப வள்ளல் கிடைத்தது போல, கபிலருக்கு ஒரு பாரி வள்ளல் கிடைத்தமையால் அவர் கவலையற்ற நெஞ்சினராக வாழ்ந்தார் என்றும் கூறலாம்.

கபிலரது புலமைத் திறத்தைச் சங்க காலத்திலேயே புலவர்களும் அரசர்களும் பொதுமக்களும் அறிந்து போற்றினார்கள். சேரமன்னன் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைப் பொருந்தில் இளங்கீரனார் பாடிய புறநானூற்றுப்பாடல் இதனை நன்கு விளக்குகின்றது.

**இளங்கீரனார் பாடிய புறநானூற்றுப் பாடல்**

". . . . . . . . . . தாழாது

செறுத்த செய்யுள் செய் செந்நாவில்

வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்

இன்றுள னாயின் நன்றுமன் என்றநின்

ஆடுகொள் வரிசைக்கு ஒப்பப்

பாடுவன் மன்னால் பகைவரைக் கடப்பே"[5] (புறம். 53)

என்பதாகும்.

மேற்கூறிய பாடலின் பொருள், 'விரைவாக, பல பொருட் சிறப்புகளை அடங்கிய செய்யுளைப் பாடும் செம்மை வாய்ந்த நாவினை உடையவன்; மிக்க கேள்வி அறிவை உடையவன்; விளங்குகின்ற புகழை உடையவன் கபிலன். அத்தகையான் இன்று இருந்தால் மிக நலமாக இருக்கும்;

அப்பேற்றைப் பெற்றிலேனே என்று கூறி, அரசே நீ வருந்துகின்றனை; நீ பகைவரை வென்றமையை, அச்சிறப்பிற்குப் பொருந்த நானும் பாடுவேன், என்பதாகும். கபிலன் இருந்து தன்னைப் பாடவில்லையே என்ற பொறையனின் வருத்தமும், அப்பெரும்புலவரைப் போலத் தாமும் பாட முயலுவதாகக் கூறும் புலவரின் ஊக்கமும் கபிலரின் வற்றாத புகழையும் வளமான திறமையும் புலம்படுத்துகின்றன.

**மாறோக்கத்து நப்பசலையார் கூறும் கருத்து**

”புலன் அழுக்கற்ற அந்தணாளன்
இரந்துசெல் மாக்கட்கு இனியிடன் இன்றிப்
பரந்திசை நிற்கப் பாடினன்”[6] (புறம் . 126)
“பொய்யா நாவிற் கபிலன்”[7] (புறம். 174)

என்று கபிலரது அகத்தூய்மை, மிகுதியாக்ப் பாடியமை, புகழ், வாய்மை முதலிய சிறப்புகளைப் பாராட்டியுள்ளார்.

பழைய உரையாசிரியர்கள் இவருடைய பாடல்களை மேற்கோளாக எடுத்தாளும் போது ‘கபிலரது பாட்டு’ என்று ஆசிரியர் பெயரால் எடுத்தாளும் முறையே இவருக்குத் தொன்று தொட்டு இருந்து வரும் சிறப்பை விளக்கும்.

**போற்றத்தக்க பெரும் புலவர் கபிலர்**

திருவள்ளுவர், தொல்காப்பியர், இளங்கோ, கம்பரைப் போலக் கற்று உணர்ந்து மகிழ்ந்து கொண்டாடத்தக்க விழாவெடுத்துப் போற்றத்தக்க பெரும் புலவராகக் கபிலர் விளங்குகிறார்.

**கபிலர் – பெயர்க் காரணம்**

இவருக்குக் கபிலர் என்று பெயர் ஏற்பட்டமைக்குக் கீழ்வரும் காரணம் பொருந்துதல் கூடும். புறநானூற்றில் கபிலர் பாட்டு ஒன்றில் கீழ்காணும் வருணனை வருகிறது.

“அகில் விரி கடப்ப நுடங்கித் தண்ணென
அகிலார் நறும்புகை ஐதுசென்று அடங்கிய
கபில நெடுநகர்க் கமழும் நாற்றமொடு
மனைச் செறிந் தனளே”[8] (புறம். 337)

சங்க காலப் பெரும் புலவராகிய கபிலருடைய இயற்பெயர் தெரியவில்லை. அல்லது தெரிந்தும் மறக்கப்பட்டிருக்க வேண்டும். இவருடைய புறநானூற்றுப் பாடலைப் பார்த்த புலவர்கள் இச்சொல்லாட்சி நோக்கிக் கபிலர் என இவரை அழைத்தனர். இச்சிறப்புப் பெயரே நாடறிந்த பெயராக அன்றே வழங்கி நிலைத்து விட்டது.

**பாடலில் தம் பெயரைப் பதித்தவர் – கபிலர்**

பேராசிரியர் டாக்டர் துரை அரங்கசாமி அவர்கள் பிற்காலப் பாகவார்கள் நமது கீர்த்தனைகளில் தம் பெயரை முத்திரையாக வைப்பது போலக் கபிலரும் தம் பெயரைத் தமது பாடலில் வைத்துப் பாடியுள்ளார் என்று கூறுகிறார்கள்.[9] சங்க இலக்கியத்தில் பாடலால் பெயர் பெற்றவர் உண்டே தவிர, பாடலில் தம் பெயரைப் பதித்தவரையாண்டும் காணல் இயலாது.

**கபிலரும் பரணரும்**

கபிலர் காலத்தில் அவரைப் போலச் சீரும் சிறப்பும் பெற்ற பெரும் புலவராகத் திகழ்ந்தவர் பரணர் ஆவார். கபிலரும் பரணரும் சொற்போர் நடத்தியதாகப் பழம் செய்தி ஒன்று கூறுகிறது.[10] இரும்பெரும் சமமான புலவர்களாக, நாட்டு மக்களிடையே புகழோங்கி வாழ்ந்த இவ்விருவரும் கபில பரணர் என்றே அழைக்கப்பட்டனர். அக்கால முறைப்படி அறிவின் மேன்மையையும் கொள்கைச் சிறப்பையும் அறியவும் அறிவுறுத்தவும் சொற்போர் நடத்திய இவர்கள் பின்னாளில் ஒருவர் திறமையை ஒருவர் மதித்து நண்பர்களாகவும் வாழ்ந்திருக்க வேண்டும்.

**பாரிக்காகப் பாடியவர் கபிலர்**

கபிலர் பாரியின் இனிய உயிர் நண்பர். மூவேந்தர்களும் பாரி வள்ளல் மீது பொறாமை கொண்டு போர் தொடுத்த போது, பாரியின் பக்கத்தில் நீங்காத் துணையாக நிழல் போல் நின்றவர் கபிலர். பாரிக்காக அம்மூவேந்தரை எள்ளி இகழ்ந்து பாடியவர். காலத்திற்கு ஏற்ப வேறுபடும் நண்பர்களையுடைய உலகத்தில், நட்புக்காக உயிரையும் கொடுத்த சான்றோர்களைச் சங்க இலக்கியம் நமக்குக் காட்டுகிறது. பாரி இறந்த பிறகு, பறம்பு மலையை விட்டுவிட்டுப் பிரிந்து செல்லும் கபிலர், சிறிது தூரம் சென்ற பிற்பாடும் கண்ணை விட்டு மறையாமல் நிற்கும் அப்பறம்பு மலையை ஒருமுறை திரும்பிப் பார்த்துப் பாடிய பாட்டு, நம் நெஞ்சத்தை இன்றைக்கும் அனலிலிட்ட மெழுகென உருக்கி விடும்.

பாரி மகளிரைத் திருமணம் செய்து வைக்க அவர்பட்ட பாடு சொல்லும் தரத்தன்று; இறுதியாக அவர் பெண்ணையாற்றங்கரையில் வடக்கிருந்து உயிர் நீத்ததாகவும் நெருப்பில் புகுந்து இறந்ததாகவும் கல்வெட்டு ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்."

**கபிலரால் பாடப் பெற்றவர்கள்**

கபிலரால் பாடப் பெற்றவர்கள் செல்வக்கடுங்கோ வாழியாதன், அகுதை, அந்துவன், ஆரிய வரசன், பிரகத்தன், இருங்கோவேள் (புலிகடிமால்) எவ்வி, ஓரி, காரி (மலையன், முள்ளூர் மன்னன்), நள்ளி, பாரி, பாரிமகளிர்,பேகன், விச்சிக்கோன், கழாத்தலையார். பேகன் மனைவி கண்ணகி, பொறையன் என்பவர்கள் ஆவர்.

**கபிலர் இருங்கோவேளிடம் கண்டித்துக் கூறியது**

இருங்கோவேள் பாரி மகளிரை ஏற்க மறுத்து இகழ்ந்து பேசிய போது கபிலர் இதற்கு முன்பு கழாத்தலை என்ற பெரும்புலவரை, இந்த இருங்கோவேளின் முன்னோர் இகழ்ந்தமையால் தான் அரையம் என்னும் செல்வ வளம் மிக்க அவர்களது நகரம் அழிவுற்றது என்று எடுத்துக் காட்டுகிறார். 'எனவே இனியும் அவ்வாறு இகழாது இருப்பாயாக' என்று கண்டித்துக் கூறினார்.

"நுந்தை தாயம் நிறைவுற எய்திய

ஒலியல் கண்ணிப் புலிகடி மாஅல்!

நும்போல் அறிவின் நுமருள் ஒருவன்

புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை

இகழ்ந்ததன் பயனே!”

என்பது கபிலர் வாக்கு.

இதிலிருந்து தம்போலும் புலவரிடத்துக் கபிலர் கொண்டிருந்த பெரும்பற்றும் மரியாதையும் விளங்குகின்றன.

**ஆரியவரசன் பிரகத்தன்**

குறிஞ்சிப் பாட்டின் இறுதியில் காணப்படும் குறிப்பு இது.

“ஆரிய அரசன் பிரகத்தனைத் தமிழ் அறிவித்தற்குக் கபிலர் பாடியது”.

குறிஞ்சிப் பாட்டில் தான் இப்புதுமையான குறிப்பு காணப்படுகிறது. ஆரியவரசன் பிரகத்தனை இதற்குப் பாட்டுடைத் தலைவனாகக் கொள்வதற்கில்லை.

இத்தொடரை வைத்து மூன்று விதமாகப் பொருள் விரிக்க முயலலாம்.

1) தமிழ் அறித்ததற்கு என்பதால் தமிழை அகர வரிசையிலிருந்து எழுதப் படிக்க கற்றுக் கொடுத்தார்.

2) தமிழை இழிவாக மதித்ததால் அதன் பெருமையை அறிவுறுத்துவதற்குப் பாடினார்.

3) தமிழில் உள்ள அகப்பொருளின் சிறப்பை அது ஆகிய முறையாகிய கந்தருவமணத்திலும் வேறுபட்டது என்பதை அறிவிக்கப் பாடினார்.

மூன்றாவதாகக் கூறும் முறைப்படி ‘குறிஞ்சிப்பாட்டை படித்துப் பொருளுணருமளவு ஆரியவரசன் தமிழில் ஆற்றல் பெற்றிருந்தான். பொருளிலக்கணம் பற்றி அவன் கற்ற போது இலக்கண நூல்களால் அவன் முற்றும் தெளிவு அடையவில்லை. தமது நாட்டுக் கந்தருவ மண முறைக்கும் இதற்கும் உள்ள வேறுபாடுகளை அவன் அறிய அவாவினான். இந்நிலையிலே தான் கபிலர் குறிஞ்சிப் பாட்டைப் பாடி, அவனைத் தமிழின் சிறப்பறியச் செய்தார்.

இவ்வாறு, மூன்றாவதாக உள்ள முறைப்படி தமிழிலே உள்ள அகப்பொருளின் சிறப்பை அறிவுறுத்த, குறிஞ்சிப்பாட்டு பாடப்பெற்றது என்பதே உண்மையாகும்.

**கபிலர் அறிவுறுத்திய தமிழ்**

ஈண்டுக் கபிலர் அறிவுறுத்திய தமிழ் என்பது பிற மொழிக்கு இல்லாத அன்பின் ஐந்திணை ஒழுகலாற்றையே குறித்து வழங்கியதாகும். தமிழ் என்னும் சொல்லால் தமிழுக்குகே உரிய அகப்பொருளைக் குறித்து வழங்குதல் தொல்லோர் மரபாகும்.

“தள்ளாப் பொருள் இயல்பின் தண்டமிழ் ஆய்வந்திலா
கொள்ளார் இக்குன்று பயன்”[12]

எனவரும் குன்றம்பூதனார் பரிபாடல் குறிப்பினாலும் இறையனார் களவியல் நுதலிய பொருள் இதுவெனக் குறிப்பிட வந்த உரையாசிரியர் "இந்நூல் என்னுதலிற்றோவெனின் தமிழ் நுதலியதென்பது"[13] என விளக்கிய உரைக் குறிப்பினாலும் இம்மரபு புலனாதல் காணலாம்.

**கபிலர்**

கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய வேள் பாரியின் உயிர் நண்பர் கபிலர். 'புலன் அழுக்கற்ற அந்தணாளன்' என மாறோக்கத்து நப்பசைலையார் கூறிய உரையாலும், 'யானே பரிசிலன், மன்னும் அந்தணர்; எனவும், 'அந்தணன் புலவன் கொண்டு வந்தனனே' எனவும் கூறப்படும் தன் உரையாலும், இவர் அந்தண வருணத்தினர் என அறியாலாம்.

"காதல் உர் பனுவல் பாடும் கபிலனார் பிறந்த மூதூர்"

பாண்டி நாட்டுத் திருவாதவூர் எனத் திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணம் கூறுகின்றது.

பாரி இறந்த பின், அவனுடைய மகளிரை மணம் முடிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்ட கபிலர், விச்சிக்கோன், இருங்கோவேள் என்ற குறுநில மன்னர்களிடம் அப்பெண்களை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினார். அவர்கள் மறுத்தமையால், மனம் வருந்திய கபிலர், அப்பெண்களைப் பார்ப்பார் ஒருவரிடத்து அடைக்கலமாகத் தந்து, பாரியிடம் தான் கொண்ட நட்புரிமையை நினைத்து, பெண்ணையாற்றின் நடுவில் தீப்புகுந்து உயிர் துறந்தார். தமிழ்நாட்டு மூவேந்தரும், பாரியுடன் போருடற்ற வந்த போது அவர்களை

மதியாது உரைத்த மொழிகளும், பாரி இறந்த பின் கலங்கிப் பாடிய கையறு நிலைப் பாடல்களும் இவருடைய அருங்குணங்களைப் புலப்படுத்துவனவாகும்.

கபிலர் பாடியதாக, 279 பாடல்கள் இப்பொழுது கிடைத்துள்ளன. அவற்றில், நற்றிணை - 20, குறுந்தொகை - 29, ஐங்குறுநூறு- 100, பதிற்றுப்பத்தில் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாடி, அம்மன்னன் சிறுபுறம் என நூறாயிரம் காணம் பொன்னும், நன்றா என்ற தன் நாட்டு மலைமேல் ஏறி நின்று தன் கண்ணில் கண்ட நாடெல்லாம் பரிசாகத் தரப் பெற்றார். அப்பாடல்கள் 10; கலித்தொகையில் குறிஞ்சிக்கலிப் பாடல்கள் 29; அகநானூறு 18; புறநானூறு 28; பத்துப்பாட்டு நூல்களில் ஒன்றாகிய குறிஞ்சிப்பாட்டு 1; நெட்டிலை இருப்பை என்ற பாடல் 1; திருவள்ளுவமாலைப் பாடல் 1; பதினென்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகிய இன்னா நாற்பது 41; இவ்வாறு எட்டுதொகை, பத்துப்பாட்டு, பதினென்கீழ்க்கணக்கு என்ற மூன்று தொகை நூல்களிலும் இவருடைய பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

“அரசவை பணிய அறம் புரிந்து வயங்கிய
மறம் புரி கொள்கை, வயங்கு செந்நாவின்
உவமை கூராக் கவலை இல் நெஞ்சின்
நனலிற் பாடிய நல்லிசைக் கபிலன்” (பதிற்றுப்பத்து. 85)

எனப் பெருங்குன்றூர் கிழாரும்,

“செறுத்த செய்யுள் செய் செந்நாவின்
வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்” (புறநானூறு. 53)

எனப் பொருந்தில் இளங்கீரனாரும்,

"புலன் அழுக்கற்ற அந்தணாளன்

இரந்து செல் மாக்கட்கு இனி இடனின்றிப்

பரந்து இசை நிற்கப் பாடினன்"

"பொய்யா நாவிற் கபிலன்" (புறநானூறு. 126-174)

என மாறோக்கத்து நப்பசலையாரும்,

"உலகுடன் திரிதரும் பலர் புகழ் நல்லிசை

வாய் மொழிக் கபிலன்" (அகநானூறு. 78)

என மதுரை நக்கீரனாரும்,

இப்புலவரைப் போற்றியுள்ளனர். கபிலர், புலவர் பாடும் புகழுடையவராக விளங்கியமை இதனால் அறியப்பட்டும், பழைய இலக்கண உரைகளில் உம்மைத் தொகைக்குச் சான்றாகக் காட்டப்படும் கபிலபரணர் என்ற தொடரும், கபிலரது பாட்டு என ஆறாம் வேற்றுமைக்குக் காட்டப்படும் தொடரும் (தொல்காப்பியம். வேற்றுமையியல் 19, சேனா வரையர்) 'முதலிற் கூறும் சினையறி கிளவி' என்ற நூற்பாவின் உரையில் (தொல்காப்பியம், வேற்றுமை மயங்கியல், 31) குறிக்கப்படும் கபிலர் பற்றிய குறிப்பும் இப்புலவர், அக்காலச் சமுதாயத்தில் பெற்றிருந்த ஏற்றத்தைப் புலப்படுத்துவன.

அகுதை, இருங்கோவேள், ஓரி, செல்வக்கடுங்கோ வாழியாதன், சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, நள்ளி, மலையமான், திருமுடிக்காரி, மலையன், விச்சிக்கோன், வேள்பாரி, வையாவிக் கோப்பெரும் பேகன் ஆகிய மன்னர்களை இவர் பாடியுள்ளார்.

கொல்லிமலை, பறம்புநாடு, பறம்புமலை, முள்ளூர்க்கானம், முள்ளூர் மலை, கிடங்கில், கொடு மணம். பந்தர். மதுரை, வாரணவாசி ஆகிய இடங்கள் இவருடைய பாடல்களில் குறிக்கப்பட்டுள்ளன.

இரட்டை மணி மாலை, அந்தாதி போன்ற பிரபந்த நூல்களைப் பாடிய கபிலர் இவரின் வேறாவார்.

குறிஞ்சிப் பாட்டு என்னும் இந்நூல் ஆரியஅரசன் பிரகந்தனைத் தமிழ் அறிவித்தற்குப் பாடப்பட்டதாகக் கூறப்படுகின்றது. தமிழ் அறிவித்தல் – தமிழ் மக்களின் புலன் நெறி வழக்கமாகக் கூறப்பட்ட ஐந்திணைக் காதல் வாழ்வின் சிறப்புகளை அறிவித்தல், குறிஞ்சி நிலத்தின் இயற்கை அழகினையும், அந்நிலத்து மக்களின் வாழ்க்கை நெறிகளையும், அந்நிலத்திற்குரிய புணர்தல் என்ற உரிப்பொருளின் பல்வேறு துறைகளையும் இவருடைய பாடல்கள் இனிதே விளக்குவதால், இவர், ‘குறிஞ்சிக் கபிலர்’ எனப் போற்றப்படுகிறார்.

**தலைவி தலைவன் காதல்**

ஆயத்தோடு விளையாட்டு விருப்பினால் பொழிலகம் புகுந்த தலைவியை எதிர்ப்பட்டு ஒழுகுகின்ற தலைமகன், அவள் புனங்காவற்கு உரியளாய் நின்றது கண்டு, மகிழ்ந்து கூறினான்.

தலைவி தன் தோழியருடன் ஒரு பொழிலில் விளையாடச் சென்ற பொழுது தலைமகன் அவள் மேல் காதல் கொண்டான். அவளும் அவனை

விரும்பினாள். அத்தகையவள் பின்பொரு நாள் தினைப்புனத்தின் கண் நிற்றலைக் கண்டு தலைவன் மகிழ்ந்து சொன்னான். (ஐங்-கிள்ளை. 281)

ஒளிபொருந்திய அணிகளைப் பூண்டவளும், இருண்ட அடர்த்தியான கூந்தலைக் கொண்டவளும் ஆகிய என் காதலியின் கொடிச்சியின் பருத்த தோள்களுக்குத் தினைப்புனக் காவலைத் தந்த கிளிகள், அந்நன்மையை எனக்குச் செய்தமைக்காக வெள்ளம் என்னும் பேரெண் அளவிலான ஊழிகள் பல கழிந்த பின்பும் வாழ்வனவாக!

காண்டற்கு அரியளாகிய உயர்ந்த தலைவியைக் கண்டு காதல் கொள்ளுவதற்கும் பன்னாளும் எளிதிற் கண்டு அளவளாவி மகிழ்தற்கும் உதவினமையின், தன் நன்றிப்பெருக்கு வெளிப்படக் கிளியை வாழ்த்தினான் தலைவன்.

தான் காதலால் பூச்சூடி மகிழவும், மெல்லணையாய்க் கொண்டு தலைவியுடன் இன்றுயில் கொள்ளவும் காரணமாயினமை பற்றி அவள் கூந்தலை ‘இரும்பல் கூந்தல்’ எனப் புகழ்ந்தான், கருமையும் அடர்த்தியும் கூந்தற்கு அழகு.

பெருந்தோள் எனத் தோளைப் பாராட்டினான், அவள் தோள்களை அணைத்து இன்புற்றமை தோன்ற, அன்றியும், கவணும் தட்டையும் தழலும் கொண்டு கிளியோப்பதற்கு ஏற்ற வலிமையுடைமை பற்றி அங்ஙனம் வாழ்த்தினான்.

எம் சுற்றத்தார் தினையைக் கொய்து போன பின்னரும் இக்கிளிகள் தாம் முன்னர் உண்டு களித்த தினைக்கதிர்களையே நினைந்து

இவ்விடத்திலேயே இருந்து வருந்துவது போல, இது வரை இத்தினைப்புனத்தில் நின்னைக் கூடி இன்புற்ற என் தோழியும் எம் சுற்றத்தார் இவளை இல்லத்தே வைத்துக் காத்த போதும் இங்கு அவள் கண்டு இன்புற்ற நினைவுடனேயே நின் வரவினை எதிர் நோக்கியிருப்பாள். (ஐங். கிள்ளை.284)

மலைப் பகுதிக்கு அழகும் நறுமணமும் சேர்ப்பது காந்தளாதலின் 'சிலம்ப கமழ் காந்தள்' என்றான். தலைவியின் சிவந்த கைக்கு உவமை கூறப்பட்டதாதலின், இது வெண்காந்தளினும் வேறான செங்காந்தள் தலைவன் பண்டு பலகாலும் தொட்டறிந்ததாதலின், 'காந்தள் நறுங்குலையன்ன நலம் பெறு கை' எனப் பாராட்டினான். வேறு யார் கைக்கும் இல்லாத சிறப்பு அவள் கைக்குரியது ஆதலின் 'நின்னைக் காணாத போதும் கைகளின் தொடுவுபுணர்ச்சியாலேயே நின் கைகளென்பதை யான் அறியேனோ? என்று வினவினான். என் கண்களைப் புதைத்து விளையாடும் உரிமை நினக்கன்றிப் பிறர் யார்க்குரியது? என்று உரிமைப்படக் கூறினான். 'பாயல் இன் துணையாகிய பணைத்தோள்' என்றது. பல காலம் அவற்றை அணைத்து மகிழ்ந்தமையைச் சுட்டியது. தலைவியின் மயில்தோகை போலும் கூந்தல் பாயலில் படுத்து இன்பம் துய்த்தமை தோன்ற 'தோகை மாட்சிய மடந்தை' என்றான். 'நீயலது உளரோ? என்றான். பிறர் யாரும் இலர் என்பது படக் கூறினான் தலைவன், (ஐங். மஞ்ஞை. 293

தலைவன் தலைவியை மணம் புரியும் நாளில் அவன் தன் காதலியின் கூந்தலில் மலர் சூட்டும் சடங்கினைச் செய்தது கண்டு உவந்து பாராட்டிச் கூறினான்.

சுடர் விட்டெரியும் தீயைப் போன்று ஒளிவிடும் செந்நிற மலர்களையுடைய வேங்கை மரத்தின் மீது அமர்ந்த மயில், பொன்னணிகள் பூண்ட மடந்தையைப் போலத் தோற்றமளிக்கும் மலை நாடனே! என் தோழியின் நல்ல மனையின் (பண்டு களவுக் காலத்தில் பிறர் அறியாவண்ணம் இவள் கூந்தலில் மலர் அணிந்து மகிழ்ந்த நீயே) இன்றுயானும் பிறரும் கண்டு மகிழும் வண்ணம் இவ்வதுவைச் சடங்கிலும் இவளுடைய பின்னப்பட்ட கரிய கூந்தலில் மலர் அணிந்து இனிய செயலொன்றனைச் செய்தாய். (இத்தகு இனிய செயலை செய்த மகனை ஈன்ற) நின் தந்தையார் நீடு வாழ்க!

**தலைவன் மகிழ்ந்து உரைத்தது**

தலைவன் பகற்பொழுதில் தலைவியைக் கண்டு அளவளாவுதற் பொருட்டு முன்னே தீர்மானித்த இடத்திற்கு வந்த பொழுது,அவனறியாது, அவன் பின்னே வந்து தலைவி அவன் கண்களைத் தன் கையால் விளையாட்டு வகையாகப் பொத்தினாள். அப்போது தலைவன் மகிழ்ந்து உரைத்தான்.

மலைப்பக்கம் முழுவதும் இனிய மணம் கமழக் செய்யும் காந்தளின் நறிய பூங்கொத்தினைப் போன்று அழகாற் சிறந்த நின் கைகளினால் என் கண்களைப் பொத்தியவளே! என் நெஞ்சகத்தே என்றென்றும் நீங்காது அமர்ந்திருப்போர், படுக்கையின் கண்ணே இனிய துணையாகிய மூங்கில் போன்ற மென்மை மிக்க தோள்களை உடைய, மயிலின் சாயலைக் கொண்ட நின்னையன்றி, என் கண்களைப் பொத்தி விளையாடும் உரிமை பெற்றார். பிறர் யார் உளர்? எனக் கேட்டான் தலைவன். (ஐங். மஞ்ஞை. 293)

இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கிய நிலைமைக் கண், தலைமகள் ஆய வெள்ளத்தோடு கூடி நிற்கக் கண்ட தலைமகன் மகிழ்ந்த உள்ளத்தனாய்த் தன்னுள்ளே சொல்லிக் கொண்டான்.

தலைவனும் தலைவியும் ஊழ் கூட்ட இயற்கைப் புணர்ச்சியிற் கூடி இன்புற்றனர், இயற்கைப் புணர்ச்சிக்குப் பின், தலைவி வெள்ளம் போன்ற தன் தோழியர் கூட்டத்துடன் நிற்கக் கண்ட தலைவன், அவளுடைய பேரழகை எண்ணி வியந்து தனக்குத் தானே சொல்லி இன்புற்றது.

குன்ற நாடனுடைய மலைச் சாரலின் கண் அமைந்த பசிய சுனையகத்தே விரிந்த வாயை உடையனவாய், அழகிய சிலவாகிய கூந்தலையுடைய, அசைந்த நடையையுடைய கொடிச்சியின் கண்ணைப் போல் குவளை மலர்தலும் அரிது; இவளுடைய சாயலைப் போன்ற சாயலைத்தான் பெறுவது மயிலுக்கும் அரியதாகும்.

குன்ற நாடன் என்றது தலைவியின் தந்தையை, தன் காதலியின் தந்தையும் தன் போல் ஒரு குன்ற நாடுத் தலைவன் என்னும் பெருமிதம் தோன்ற இங்ஙனம் எண்ணி மகிழ்ந்தான். தன் காதலியை 'அம்சில் ஓதி அசை நடைக் கொடிச்சி' என்று சிறப்பித்தான், அவ்வோதியை அணைத்து மகிழ்ந்த குறிப்பும், அவளது மயில் போலும் அசைந்த நடையைக் கண்டு உவந்த குறிப்பும் தோன்றியது.

பைஞ்சுனையில் பூத்த குவளையாயினும், தன் காதலியின் கண்களில் உள்ள குளிர்ச்சி அதற்கு இல்லையென்பது பட 'கொடிச்சி கண்போல்

மலர்தலும் அரிது' என்றான். காதல் ததும்பத் தன்னைப் பார்த்தாள் ஆதலின், பொதுவாகப் பெண்களின் கண்கட்கு உவமை சொல்லப்படும் குவளையும் அவள் கண்களை ஒவ்வா எனப் பாராட்டினான். மயிலின் சாயம் கண்டோர்க்குக் காட்சியின்பம் அளித்தலொன்றே உடையதாக, இவள் சாயல் கண்டோர் உயிரைத் தளிர்க்கச் செய்ய வல்லதாதலின், இவள் சாயலை மயிலின் சாயல் ஒவ்வாது என்றான். இதனால், அவள் மேனியை அணைந்து உற்ற ஊற்றின் பத்தினையும் பாராட்டினான் (ஐங். மஞ்ஞை. 299)

**தலைவியின் அழகு நலன்களைத் தலைவன் தானே சொல்லி இன்புறுதல்**

ஊரிடத்தே வளர்ந்த இளமரக்காவினுள் நீர் ஓடுகின்ற வாய்க்காலிடத்தே நின்ற கொழுவிய நிழலை உடைய ஞாழலினது முதிர்ந்த கொத்துக்களைப் பறித்துக் கொண்டாள்; பூவும் மயிரும் தம்முள் மயங்கும் படி முடித்தாள். வாரி முடித்த கூந்தல் தோளிடத்தே மாலையோடு சிறிது குலைந்து வீழா நின்றது, நிறைந்த மதி, இனிய கதிர்களை விட்டாற்போல முகம் ஒளியுடன் திகழ்ந்தது யான் நிற்கின்ற இவ்விடத்தே வருபவளாகிய இவள் யார் தான்? கொல்லி மலையிலே, கலை வல்லான் ஒருவனால் இயற்றப்பட்ட ஒப்பில்லாத பாவையோ? அன்றி, படைத்தல் தொழில் வல்ல அயனால் நல்ல மகளிருடைய உறுப்புகள் எல்லாவற்றையும் ஒரு சேரக் கொண்டு வடிவமாகப் படைக்கப்பட்டாள் ஒருத்தியோ? அன்றி ஆடவர் மேலுள்ள வெறுப்பினால் தன்னைக் கூற்றம் என்று பிறர் அறியாத படி, மறைந்து பெண் வடிவு கொண்டு

வந்த கூற்றமோ? கொடி போன்ற அசைவினையும், எண் கோவையாகிய மேகலையையும் பூத்தொழில் நிறைந்த ஆடையையும் உடையளாய் இருந்தனள்; இவ்வூரிடத்து, பிள்ளை இன்மையால் வருந்திய செல்வத்தினை உடையாருடைய செல்வ மகள் இவள் காண்; இவளைக் காத்து நின்றவர்கள் இப்பொழுது காவாராகிப் புறப்பட விடுதல் கொடிது என்றான்.

இவளைப் போகாமற்றடுத்து, இவளுடன் சொல்லாடிக் காண்பேன். என்றான், நல்லாய். யான் கூறுகின்றதனைக் கேள்;

கண்டார் காதல் கொள்வதற்குக் காரணமாகிய மான் போலும் நோக்கினையும் மடப்பத்தையும் உடைய நல்லாள்! அழகிய சூட்டு மயிரினை உடைய அன்னம் என்ன, அழகுடைய பெண் மயில் என்ன, கல்லை உண்ணும் அழகிய புறவு என்ன, நடையும் சாயலும் மடப்பமும் ஆகிய நலம் நிறைந்த நின் இவ்வெழில் நலம், நின்னைக் கண்டவர்களை மயக்கமுறுத்தும் என்பதை நீதான் அறிவையோ? அறியாயோ?

வளைந்த முன்கையினையும், வெள்ளிய எயிற்றினையும் உடைய அழகிய நல்லாளே! நிறத்தாலும் திரட்சியாலும் நுண்மையை உடைய மூங்கில் என்ன, மென்மையால் நுண்ணிய துகிலினை உடைய அணை என்ன அமைந்து விளங்குகின்ற பெருமையுடைய மெல்லிய தோள்கள்; இத் தோள்கள்; கண்டார்க்கு வருத்தம் செய்தன என்பதை நீதான் அறிவையோ? அறியாயோ?

அழகிய மயிர் வரிசையையும் வரிகளையும் உடைய முன்கையினையும் மடப்பத்தையும் உடைய நல்லாளே! முற்றின கோங்கமரத்தினது இளைய மொட்டு என்ன, அடி பரந்து கண்ணுக்குப் புலனாகி விளங்கும் குரும்பை என்ன, மழைத்துளி வீழும் போது தோன்றும் குமிழ்கள் என்ன, பெருத்து விளங்குகின்றன நின் இளைய முலைகள். இம்முலைகள்,நின்னைக் கண்டவர்களுடைய உயிரை வாங்கும் என்பதை நீதான் அறிவையோ? அறியாயோ?

என்று யான் கூறா நின்றேன்.

நீ மயக்கம் கொண்டவளைப் போல, பிறர் வருத்தத்தை அறியாதவளாக, கேட்டார்க்கு யாதொன்றும் சொல்லாது, இவ்விடத்தினின்றுக் கழிந்து போகின்றவளே, இப்பொழுது யான் கூறுகின்றவற்றைக் கேள்; நீயும் குற்றம் உடையவள் அல்லள்; நின்னை இப்படிப் புறத்தே போக விட்ட நின்னுடைய சுற்றத்தாரும் குற்றமுடையர் அல்லர்; குற்றம் உடையன் யாவன்? என்னில் மதங்கொண்ட கொல்லும் யானையை நீர்த்துறைக்கு விட்டால் பறை சாற்றிச் செல்லுவார்கள்; அது போல உன்னையும் பறை சாற்றியே செல்லவிட வேண்டும்; பறை சாற்றாது, செல்லாது ஒழிக என்று ஆணை இடாத மன்னனே தவறுடையன் என்று கொள்ள வேண்டும்.

இளமையோளின் எழில் நலமும் தடமென்தோளும் இளமுலையும் கண்டவர்கள் துன்பம் அடைந்தார்களே தவிர, அவள், கண்டவர்களைப்

பொருட்படுத்தினாள் அல்லள்; அதனால் கைக்கிளைப் பாற்பட்டது. இளையாளின் அழகு நலன்களைத் தானே சொல்லி இன்புற்றான்;

அழகிய சிலம்பின் உள்ளிடு பரல்கள் ஒலிக்க, விளங்குகின்ற ஒளியிளை உடைய அணிகள் ஒளிவீச, நுடக்கத்தால் கொடியென, விளக்கத்தான் மின், என கட்புலனா காமையின் வருத்தம் என, நீ தளர்ந்து அசைந்து வருகுவை; யாதொன்றும் தெரியாத, நுண்மையான நின் இடையினிடத்தே என் கண்கள் விரும்பி ஒரு சேர ஓடா நின்றன; செல்வம் நிறைந்த. உயர்ந்த சிறப்புடைய உன் தந்தையின் பழமைச் சிறப்புடைய, அகன்ற பெருநகரிலே, இளமை வேகத்தால், பந்தை எறிந்து விட்டுப் பந்தின் பின்னாகப் புறப்படுதலைச் செய்தவளே. இப்பொழுது யான் கூறுகின்றதனைக் கேள்;

சிலவாகப் பேசும் இயல்பினை உடையாய்! பூவான் அமைந்த குளிர்ந்த மாலையினையும், புலர்ந்த சந்தனத்தையுமுடைய தென்னவனின் உயர்ந்த கூடலிலே, தேன் பாய்ந்து இதழ் விரிக்கும் நீல மலரினும் அலர்வென்று அமைவன நின்மையுண்ட அமர்ந்த கண்கள்; ஏந்தின கோட்டையும் அழகினையுமுடைய யானைப்படை கொண்ட பகைவரை அப்பாண்டியனின் வேல் வருத்துமாறு போலச் சிவந்து வருத்தம் தந்து நின்றன; இது நின் இளமைக்குத் தக்கதோ?

பொன்னாற் செய்த குழையினை உடையாய்! பொழிகின்ற பெயல் போலும் கொடையாளன் பாண்டியன்; அவனது அசோக மரங்கள் கொண்ட குளிர்ந்த பொழிலிடத்தே நின்ற மிக்க அழகினை உடைய இளைய மாந்தளிர்

போன்ற நிறத்தினை உடையாய், அங்ஙனம் வருந்துவதற்கு மேலே, பந்தியிலே நிற்கும். பாய்ந்து செல்லும் குதிரை பூட்டிய தேரிலே சென்று, பாண்டியனாற் செறப்பட்டவர்கள் மார்பிலே பாய்ந்த அம்புகளினும் நின் கண்கள் கொடுமை செய்தல் உலகிற் கொடுமைகளிலும் மிக்க கொடுமை அன்றோ?

வகையாக அமைந்த குளிர்ந்த தாரினை உடையவன் பாண்டியன்; அவனது, சிகரங்கள் உயர்ந்த பொதிய மலையிடத்து அழகினை உடைய, கொத்துக் கொண்ட இளைய வேங்கைப்பூப் போன்ற சுணங்கினை உடையாய், முத்துவடம் தவழ்கின்ற நின்னுடைய இளைய முலைகள், பாண்டியனின் வலி மிகுந்த, மிகுகின்ற மதநீரையும் உடைய, யானையின் கொம்புகளினும் சினமுடையவாய் இரா நின்றன; இக் கொடுமை நின் பருவத்திற்குத் தக்கதோ? என்று, இத்தன்மையானவற்றை யான் நெடிது என்று நினையா நின்று கூறினேன். அதற்கு அவள் ஒன்றும் கூறாதே கவிழ்ந்து நிலத்தையே பார்த்து நின்றாள்; பின்னர் அவ்விடத்தே தோழியரை நினைப்பவள் போல, நினைத்து, துணையாய் அமைந்த தோழியர் மாட்டு அமர்த்த கண்களை உடையளாய், என அறிவைத் தன்னிடத்தே அகப்படுத்திக் கொண்டு, தன் மனையிடத்தே மீண்டு போனாள்.

தலைவன் சின்மொழியாய்! கனங்குழாய்! சுணங்கினாய்! என விளித்துப் பல புகழ்ந்தும் தலைவி யாதொன்றும் கூறினாள் இலள். இஃது ஏமஞ்சாலா இடும்பை எய்தித் தலைவன் கூறியதாகும். இதனால் 57-ம் பாடல் கைக்கிளைப் பொருளது.

கோதுதல் உற்ற கடை குழன்ற கூந்தல்; வளைந்த முன்கை; நெடிய மெல்லிய தோள்; பெரிய அழகுடைய நீலமலர் போன்ற மையுண்ட கண்; மான் பிணையினது அழகுடைய மருண்டு நோக்கும் பார்வை; மழையைப் பெற்ற இளந்தளிரைப் போன்ற நிறம்; ஒளிர்கின்ற அழகிய நெற்றி; விழுந்தெழுந்த கூரிய எயிறு விழுந்தெழாத முகை போலும் வெள்ளிய பல்; கொடி போன்ற நுண்ணிய இடை; இத்துணையும் அமைந்தவளே, காலுக்குப் பொருந்தின சிலம்பின் உள்ளிடு பரல்கள் ஆரவாரிப்ப, நிரைத்த தொடிகள் பூண்ட நின் கைகளை வீசி, நடந்து வந்தாய்; பெறுதற்கரிய என் உயிரையும் கவர்ந்து கொண்டாய்; கைக் கொண்டதனை அறியாதே போகின்றவளே, நான் கூறுகின்றதளைக் கேள்;

யான் சிறிது உயிருடனே இருக்கும் படி, என் உயிரை உண்டு விட்டாய்; வருத்தும் காம நோயோ பெரிதும் அதிகமாகின்றது; நின் இளமைச் செருக்கினால் அறியாமற் போகின்றவளே, நின்னிடத்துத் தவறு இல்லையாயினும், நோய் தீர்ப்பார் இல்லாத நோயைச் செய்யும் நின் அழகை அறிந்து வைத்தும், தம் செல்வச் செருக்கினால் உனக்கு அணிகளும் சூட்டிப் புறம் போக விட்டனர் நின் சுற்றத்தார்; அவரையும் தவறுடையர் அல்லர் என்று கூறலாமாகிற் கூறு; அஃது அரிது.

அறிவு, நிறைவு, ஓர்ப்பு கடைப்பிடி என்னும் ஒழுக்கம் தேய்ந்தேன்; மறத்தலைச் செய்தேன்; நாடோறும் என்னை, நலியச் செய்கின்றது நீ தந்த காம நோய்; நினது மடப்பத்தால் இதனை அறியாமற் செல்கிறவளே; நின்னிடத்துத் தவறு இல்லை என்றாலும், பொறுக்கலாற்றாது இளைக்கும் இடையினை

உடைய நின் உருவத்தை அறிந்து வைத்தும், தம் செல்வச் செருக்கினால் உனக்கு அணிகளும் பூட்டி, புறப்பட விட்டனர் நின் சுற்றத்தார்; அவரையும் தவறுடையர் அல்லர் என்று கூறலாமாகிற் கூறு; அஃது அரிது;

வருத்தம் மிக்கு நெஞ்சழிந்தேன்; அணங்காகி மேலும் மேலும் என்னை வருத்துகின்றனது காம நோய்; இதனைக் குறிப்பான் அறிதலின்றிச் சொல்லிக் காட்டினும் அறியாதவளே; நின்னிடத்துத் தவறு இல்லை என்றாலும், கண் எதிர்ப்பட்ட இளைஞர் உயிரை ஒழுக வாங்காது, விரைந்து வாங்கும் நின் உருவின் கவினை அறிந்து வைத்தும் நின் சுற்றத்தார் நினக்கு அணிகள் பூட்டிச் செல்வச் செருக்கால் புறப்பட விட்டனர்; அவரையும் தவறிலர் என்று கூறலாமாகிற் கூறு; அஃது அரிது; என்றான் தலைவன்;

யான் தண்டிப்பதாயின் புறத்துப் போதவிட்ட நின் சுற்றத்தாரைத் தான் தண்டிக்க வேண்டும்; நின்னையன்று இக்காம நோய் பொறுக்கும் எல்லை கடந்து மிகுமாயின், பொன்னாற் செய்த குழையினை உடையாய், மாறாக, இவ்வூர் மன்றத்திலே மடலூர்ந்து வந்து, நீ விளைவிக்கும் பழியை ஊரறிய நிலை நாட்டுவேன் போல் யான் இரா நின்றேன்; நீ அதனை அறிக என்றான்.

தலைவனின் பாராட்டுக்கும் வேண்டுகோளுக்கும் தலைவி செவி சாய்த்தாள் இல்லை; தலைவன் மாறாக. ஊரார் அறிய மன்றத்தின் கண் மடல் ஊர்ந்து அறிவிப்பேன் போல்வன் என்றான்.

இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர்த் தலைவியின் தமர் திருமணத்திற்கு உடன்படவில்லை எனின் தலைவன் மடலேறுவன் என்றால் அது

ஐந்திணைப்பாற்படும். ஈண்டு, தலைவி இசையாத நிலையில் மடல் ஏறுவேன் என்பது ஒருதலைக் காதலாகிக் கைக்கிளை ஆயிற்று.

முறுக்கு அவிழ்ந்து, நீருக்கு மேலே ஓங்கின பசிய இலை சூழ்ந்த, தாமரை மொட்டுக்களைப் போன்று வடிவமைத்து, முத்தை அழுத்திச் செய்த திரட்சியுடைய, அழகிய, விளங்குகின்ற தொடியையும், பக்க மலைச்சாரல் எல்லாம் அலர்ந்து மணம் நாறும் காந்தள் மலர் போன்ற விரல்களையும், கூரிய அழகுடைத்தாகிய குளிர்ந்த எழுச்சி உடைத்தாகிய வடிவினை உடைய துடுப்புப் போலத் திரண்டு நீண்ட இணை ஒத்த மெல்லிய முன் கைகளையும் உடையாய், ஒளிவிரிந்த வேலைப்பாடமைந்த மரத்தாற் செய்யப்பெற்ற சிறுபானையையும், பொம்மையையும் கொண்டு சிற்றில் கட்டி விளையாடவோ வந்தாய்; உள்ளிடு மணியிட்ட அழகமைந்து பொலிந்த சிலம்புகள் மிகவும் ஆரவாரித்து முழங்கின; சிலம் பொலிக்க அழகினை உடைய சில அடிகளை இட்டு நீ நடந்து வரும் போது, பின்னுதல் செய்து விடப் பெற்ற இருண்ட ஐம்பாலைக் கண்டு என்னிடத் தனவாய் ஆற்றலும் அறிவும் போன்றன என்னை விட்டுப் போகும் படியாகப் போகின்றவளே, யான் கூறுவனவற்றை இப்பொழுது கேட்பாயாக என்று தலைவன் கூறினான்.

யான் உன் அழகிலே மயங்கி, மயக்கம் கொண்டு நிற்கவும், அதுகண்டு இவன் உற்ற நோய் யாது தான் என்று கேட்கும் அருள் இவளிடத்து இல்லை என்பது யான் கூற, அது கேட்டு அயலார் நின்னைப் பழிப்பார்; நின்னைப் பழிக்கும் அளவில், கூரிய எயிற்றினை உடைய நின்னொத்த மகளிர்

சூழ, நீ தைத் திங்களில் நீராடிய தவத்தின் பயன் எல்லாம் பெறுவையோ? பெறாய் காண்;

கூந்தலிற் கிடந்தசையும் தலைப்பாளையை உடையவளே, திடும் என இவன் ஒளிகெடும்படி இவனுக்கு வந்த நோய் யாதென்று கேட்கும் அருள் இவளுக்கு இல்லை என யான் கூற, அது கேட்டு அயலார் நின்னைப் பழிப்பர்; அங்ஙனம் பழிக்குங்கால், விளையாட்டு நினைவு மாறாத தன்மையை உடையளாகப் பிறர் மனைக்கண்ணே சென்று பாடி ஐயம் ஏற்று, கிடைத்ததைப் பலருக்கும் கொடுக்கும் நோன்பின் பயன், நினக்குப் பயன் தருமோ? தாராது.

ஆராய்ந்திட்ட தொடியினை உடையாய், பெருமூச்சு விட்டு இவன் வாடுமாறு இவனுக்கு வந்த நோய் யாதென்று கேட்கும் மனக் கசிவு இவட்கு இல்லை என்று கூற, அது கேட்டு அயலார் நின்னைப் பழிப்பர்; அங்ஙனம் பழிக்குங்கால் சிறிய குடிமகளைப் பேணி வளர்த்து, அவனுக்கு வேறொத்தியுடைய பெண் மகளைக் கோடற்குச் சிறு சோற்றைச் சமைத்து ஆயத்திற்கு இட்டு, நறிய நுதலையுடைய மகளிரோடு மகிழ்ந்த நோன்பின் பயன் நினக்கு வந்து பொருந்துமோ? பொருந்தாது எனத்தலைவன் கூறினான்.

மனம் உளைந்தவனாக இவ்வாறெல்லாம் யான் நினக்குக் கூறினேன்; சேயிழாய், நின்னை விரும்பியோர் மாட்டு, வருந்தும்படி நீ செய்த கொடுமைக்கு நீ ஓர் உதவி செய்தாய் இல்லை; நீ செய்த அத்தீங்கிலுள்ள பயன் நினக்கு உரிய பயனைத் தாராமல் போகாது. அது மட்டுமன்றி, நீ அருள் செய்யாது இல்லையாகும். நல்வினைப் பயன் நினக்கு வாராது ஒழியும் என்றான்.

தலைவியின் அழகு, தலைவனைப் பேதலிக்கச் செய்து விட்டது அவனிடத்து இருந்த நல்ல குணங்கள் எல்லாம் அவனை விட்டுப் போய் விட்டது; தலைவி சிறந்த அரிய பண்புகள் பெற்றவளாக இருந்த பின்பும் தலைவன் மாட்டு அருள் இல்லை; அயலார் பழி தூற்றுவரே என்றும் கருதினாள் இவள்.

**தலைவனுக்கு தோழி கூறியது**

பகற்குறிக்கண் வந்த தலைமகனைத் தோழி, ‘இனிப் புனங் காவற்கு வாரோம் எனக் கூறி வரைவு கடாவுகிறாள்.

தலைவன் தலைவியைச் சந்திக்கப் பகற்பொழுதில் வந்தான். அவனைக் கண்ட தோழி, தாம் இனித் தினைப்புனம் காப்பதற்கு வர இயலாமையைக் கூறி, தலைவியை விரைவில் திருமணத்தில் கொள்ளுமாறு வற்புறுத்தினாள்.

தலைவ! குன்றத்தின்கண் வாழும் குறவனின் அன்பிற்குரிய மடமகளாம் இவள், மென்மையான தோள்களை உடைய கொடிச்சியாவாள், இவளை நீ பெறுவது மிக அரிதாகும். ஏனெனில், இனி இவள் பசிய புறத்தினைக் கொண்ட, தினைப் பயிரின் மேல் படிகின்ற கிளிகளை ஓப்பும் வாய்ப்பு இல்லை. ஏனெனில், புன்செய்க் கண் உழுது புழுதியாக்கிப் பண்படுத்திய புனத்திலே விதைத்த தினை நன்கு முற்றியதாகிறது.

இரவுக்குறி வந்த தலைவன் காலம் தவறி வந்தமையால் தலைவியைக் காணவியலாது திரும்பினான். மறுநாள் இரவு தலைவியின் இல்லத்தருகே வந்து நின்றான். அதனைக் கண்ட தோழி, அவன் முதல் நாள்

அல்ல குறிப்பட்டுத் திரும்பியதனை நன்கறிந்திருந்தும் அவன் வாராதான் போன்று, அங்ஙனம் வாராமைக்குக் காரணம் கற்பித்துக் கூறுகிறாள்.

தலைவன் திருமணம் செய்து கொள்ளாது காலம் தாழ்த்தான். ஒரு நாள் அவன் தலைவியைக் காணப் பகல் வேளையில் வந்தான். அவனைச் சந்தித்த தோழி, தலைவியை விரைவில் மணம் புரிந்து கொள்ளுமாறு வற்புறுத்தினாள்.

இளம்பிறை போன்ற மருப்பினைக் கொண்ட பன்றி களங்கனி போலும் கருநிறம் கொண்ட தன் பிணவினைப் புணர்ந்து இன்புறும். நீர் ஒளிவிட்டு ஒழுகும் மலைநாடனே! உன் அன்பிற்குரிய என் தோழியின் கண்கள் பசப்புற்றமையைக் காண்பாயாக என்று தலைவனுக்குத் தோழி கூறினாள்.

தலைமகள் ஒரு காளையை காதலித்துக் கற்புக்கடம் பூண்டமை அறியாத சிலர் அவளை மகட்பேசி வந்தனர். அதனை அறிந்த தலைவி மனம் வருந்திக் கண்ணீர் உகுத்தாள். இதனைத் தோழி தலைமகன் மனங்கொள்ளுமாறு கூறி விரைவில் தலைவியை மணந்து கொள்ளுமாறு வற்புறுத்தினாள்.

தலைமகள் சிறைப்புறத்தே நிற்பதறிந்து அவன் கேட்கும் வகையில் தோழி சொன்னாள்.

நம் தாயை இழந்த நெருங்கிய வரிகளை உடல்மேல் கொண்ட குருளையோடு சென்று வளப்பம் உடைய மலையில் விளைந்த சிறிய தினையின் கதிர்களை உண்டு, கானவர்கள் வாழும் உயர்ந்த மலையின் உயர்ந்த குவட்டிலே

உறங்குவதற்கு இடனான நல்ல மலை நாட்டின் தலைவன் நம்மைத் தனியே விட்டுப் பிரிந்து செல்வது என்ன பயனைத் தரும்? ஒரு பயனும் தராது.

சின்னாள் சென்று திருமணம் செய்து கொள்வதாக உறுதியளித்து, பிரிவிற்குத் தலைவியின் உடம்பாட்டைப் பெற்றான் தலைவன். அவள் உடம்பட்டமையைத் தோழியிடம் கூறினான் தலைவன். ஆனால் தோழி அஃதாற்றாது வருந்தினாள். அது கண்ட தலைமகள், 'பெண்ணே' நின் தோழியே உடம்பட்டாள், நீ உடம்படாது வருந்துவது ஏன்? என்று வினவினான். அதற்கு விடையாகத் தோழி சொன்னாள்.

மென்மையான தலையைக் கொண்ட மந்தியின் வலிய குட்டி வலிக்கண்ணுள்ள அசோக மரத்தின் பவழம் போன்ற ஒளிமிக்க தளிர்களை விரும்பியுண்ணுவதற்கு இடனான வளப்பம் மிக்க மலை நாடனே! நீ திட்டமிட்டவாறு பிரிந்து செல்குவையெனில். நின்னையே தன்னுயிர்க் காவலனாய் விரும்பி, நம்பிக்கையோடு வாழும் என் தோழி, என்னினும் மிகுதியாகக் கலங்குவாள். (ஐங். குரக். 273)

தலைவன் திருமணத்தை நினையாது தொடர்ந்து களவினை நீட்டித்தான். தொடர்ந்து வருதலின்றி இடையிட்டு வரலானான். இதனால் தோழி அவனைச் சந்தித்து வரைவு கடாவ இயலாதவளாய், ஒரு நாள் அவனைக் குறியிடத்தே கண்டு அப்பொழுது அவன் குறைகளைச் சுட்டிக் காட்டி வரையுமாறு வற்புறுத்தினாள்.

குரங்கின் தலைவனாகிய நிறம் விளங்குகின்ற மயிரையுடைய கடுவன், சிறிய பிரம்பங்கோலைக் கைக்கொண்டு அகன்ற பாறையில் மழையாலுண்டான மொக்குகளை அடிக்கின்ற நாட்டுக்குரிய தலைவ! யாம் நின்னைப் பெரிதும் விரும்புகின்றோம். அப்படி விரும்பிய எம் பிழையால் எம் நலம் இழக்கக் கடவேமாயினும் நீ எமக்கு அருள் செய்தாய் எனில் எம் அழகிய நலம் வாட்டமுறுமோ? எனக் கேட்கிறாள். (ஐங். குரக். 275)

மந்தியின் காதலனாகிய, இளந்தளிர்களை மேய்கின்ற கடுவன், குளிர்ச்சியும் நறுமணமும் கொண்ட நறைக் கொடியைக் கைக்கொண்டு மலைப்பாறையில் திரண்டு படியும் இளமேகத்தினை அடிக்கும் நாடனே! நீ என் தோழி மீது அன்புடைய அல்லையாயினும், அவள் கல்மேல் வளரும் வேங்கையின் முகைகள் மலர்ந்து மணம் பரப்பும் நல்ல மலைநாடனின் மனையாட்டி என்று பிறர் பாராட்டும் வண்ணம் அவளை வரைந்து கொள்வாயாக! எனக் கேட்கிறாள்.

நின் நாட்டகத்து கல்லில் வளரும் வேங்கை கூடப் பருவத்தே அரும்புகளைத் தோற்றுவித்து மலர்களால் மலை முழுவதும் மணம் பரப்புகின்றது. ஆனால் நீயோ, நற்குடியிற் பிறந்து வளர்ந்தனையாயினும், உரிய கடமையை உரிய நேரத்தில் ஆற்றும் வன்மை பெற்றாயல்லை என்று இடித்துரைப்பாளாய், 'கல்முகை வேங்கை மலரும் நல்மலை நாட' என்று விளித்தாள். (ஐங். குரக். 276)

தலைமகன் களவுக் காலத்தை அளவின்றி நீட்டித்தான். ஒரு நாள் அவன் தலைவியைக் கண்டு அளவளாவி நீங்கிய போது அவனை எதிரே கண்ட தோழி, விரைவில் மணம் புரிந்து கொள்ளுமாறு தலைவனுக்கு அறிவுறுத்தினாள்.

குறவர் தம் முற்றத்திடத்தே விலங்குகள் உராய்ந்து தம் உடற்றினவைப் போக்கிக் கொள்ள உதவுமாறு கிடக்கும் குண்டுக் கல்லின் மீது ஏறி, குரங்குச் சாதிக்குரிய அனைத்துப் பண்புகளையும் இயல்பாகவே கொண்ட மந்தி, தன் காதலனாகிய கடுவனோடு துள்ளித் திரியும் மலை நாடனே! நின்னை ஒன்று வினவுவேன். குளத்தில் நன்கு வளரும் தன்மையுடைய குவளை மலர் போன்ற, ஒன்றோடு ஒன்று மாறுபடும் இவள் கண்கள் பசலையுறும் வண்ணம் நீ எப்பொழுதும் இவளைப் பிரிந்து ஏகக் காரணம் யாதோ? எனக் கேட்கிறாள்.

(ஐங். குரக். 277)

பகற்பொழுதில் வந்து தலைவியைக் கண்டு சென்ற தலைமகன் இரவுக்குறி வேண்டினபொழுது, அவன் அங்ஙனம் வருவதிலுள்ள அருமைப்பாட்டைக் கூறித் தோழி குறி மறுத்தாள்.

மலையினைத் தன் வேராற் பற்றிக் கொண்டு வளரும் இற்றி மரத்தினைப் பற்றிக் கொள்ளுவனவாய் பற்றிக் கொண்டு மந்தியும் கடுவனும் காட்டு மல்லிகையின் தளிர்களை மேய்ந்து மலை மீது துள்ளிக் குதித்து விளையாடுவதற்கு இடமான நாடனே! மலைகட்கு இடையே யமைந்த எம்மூர் அலரும் அம்பலும் மொழியும் மாந்தர் வாழும் இடங்களை உடையது. ஆண்டு நீ வருதலரிது. எனக் கூறுகிறாள். (ஐங். குரக். 279)

கரிய விரல்களைக் கொர்ண்ட மந்தியின், இயல்பாகவே ஏறுதல் தொழிலில் வன்மை பெற்ற வலிய குட்டி, பெரிய மூங்கிலின் ஈரமுடைய கோலின் மேல் ஏறி இருந்து. காண்பார்க்கு அது சிறிய கோலைக் கொண்டு வானத்தை

ஊடரும் மதியை அடிப்பது போலத் தோன்றுதற்கு இடமான நாடனே நீ! என் தோழியை முறைப்படி மணந்தனை என்ற இனிய செய்தியை நீ கூறுவதற்கு முன்பே கேள்வியுற்று அப்பொழுதே என் தாய்க்கு உரைத்தேன். (ஐங். குரக். 280)

தலைவன் இரவு நேரத்தில் தலைவியைக் கூட உதவிய தோழி அவன் தலைவியைக் கூடி நீங்கும் பொழுது அவனை எதிர்ப்பட்டு, இரவில் வருதலில் தோன்றும் இடையூறுகளைச் சொல்லி. இரவு வாரற்க என்று அறிவுறுத்தினாள். (ஐங், கிள்ளை. 282)

தினை முற்றியமையால் தலைவியின் உறவினர் அறுவடை முடித்தனர். இனித் தலைவி புனங்காக்க வாய்ப்பில்லை. தலைவனோ காட்சியாசையால் அத்தினைப்புனத்திற்கு வந்து வறுங்கொல்லையை நோக்கி நின்றான். அது கண்ட தோழி, கிளிகளை நோக்கிக் கூறுவாள் போல, அவன் கேட்கும் படி இங்ஙனம் கூறி, அவன் அன்பைத் தலைவி எதிர்பார்த்துள்ளமையை வெளிப்படுத்தினாள்.

களவொழுக்கத்தின் பொழுது சிறிது காலம் பிரிந்து சென்று மீண்டான் தலைமகன். அவன் திரும்பிய பொழுது அவன் தலைமகளைத் தனியே விடுத்துப் பிரிந்தமைப் பற்றித் தோழி கவன்று சொன்னாள்.

பின்னிய கருங் கூந்தலையும் அழகிய நுதலையும் உடைய குறக்குடிப் பெண் மெல்லிய தினையின் மாவை உண்டு, பின்னர்த் தட்டையைப் புடைத்து ஐவன நெல்லை உண்ணவரும் சிறிய கிளிகளை ஓச்சும் மலைநாடனே!

இவளுடைய விம்மிய வளையல்கள் நெகிழ்ந்து ஓடும்படியாகத் தனியே விடுத்துப் பிரிதலை நீ எவ்வாறு வன்கண்மையோடு துணிந்தனையோ? எனக் கேட்டாள்.

(ஐங் கிள்ளை. 285)

தலைவன் தலைவியைக் குறித்ததொரு நாளில் வரைவதாக உறுதி கூறினான்; ஆனால் சொன்னவாறு செய்யவில்லை. ஆனால் மீண்டும் அத்தகைய உறுதிமொழி கூறினான்; அப்போது அவனுக்குத் தோழி கூறினாள்.

நெடுமலை மேல் வாழும் குறிய கால்களையுடைய வருடை மான்களைக் கண்டு அஞ்சி, தினைக்கதிர் மேல் படியும் கிளிகள் அஞ்சி விலகிச் செல்லும் மலைநாடனே! நீ பொய் சொல்வதில் வல்லவன் என்பது தெளிவு. அவ்வாறே பொய்க்கு மாறானவற்றைச் செய்வதில் ஆற்றலுடையாய் அல்லை எனபதும் தெளிவே. (ஐங். கிள்ளை, 287)

தலைவியைத் தமர் இல்லக் காவலில் வைத்தனர். அப்பொழுது தோழி தலைவனைச் சந்தித்து விரைவில் தலைவியை மணக்குமாறு வற்புறுத்தினாள். தலைவி தினைப் புனக்காவல் நீங்கிய பிறகு வரைவதாகக் கூறினான் தலைவன். குறமகளாம் தலைவியின் இனிய குரலைக் கிளிகள் தம்மையொத்த கிளியின் ஓசையெனக் கருதி, மலையடுக்கத்திலே விளைத்த பசிய கதிர்களை உடைய தினைப்புனத்திற்கு வந்து சேரும் என அஞ்சிய எம் உறவினர், இவளைத் தினைப்புனக் காவலில் இருந்தும் நீங்குவர் போலும் எனவே நீ இவளை விரைவில் வரைந்து கொள்வாயாக எனக் கூறினாள்.

(ஐங்.கிள்ளை. 289)

தலைவியின் களவொழுக்கத்தைக் குறிப்பாலுணர்ந்து தமர் அவளை மனையின் கண் செறிந்தனர். அதனால் தோழி இரவுக்குறி மறுத்தாளாதலால் தலைவன் வெறுப்புற்றான். அவன் அவ்வெறுப்புத் தீர்தற் பொருட்டுத் தோழி, மீண்டும் தலைவி தினைப்புனக் காவற்கு வருகிறாள் எனத் தலைவன் கேட்பக் கூறினாள்.

இக்கிளிகள் விளங்கிய பூக்களால் மணம் கமழும் கூந்தலையுடைய கொடிச்சியாகிய என் தோழியால் உவந்து நோக்கப்படுலேயன்றி விரைந்து கடியவும் படுகின்றன. இக்காரணத்தால் இவைஅறநெறியை விரும்பி மேற்கொள்ளும் செங்கோல் அரசனைப் போல மிகவுயர்ந்தவாயின.

(ஐங். கிள்ளை. 290)

ஒருவழித் தணந்து வரைய வேண்டுமென்ற தலைகற்குத் தோழி கூறியது.

களவுக் காலத்தில் சில நாள் பிரிந்து சென்று மீளும் கருத்துடைய தலைவன் அதனைத் தோழிக்கு உரைத்தபோது தோழி அவனுக்குக் கூறியது.

மலர்ந்த பூக்களைக் கொண்ட வேங்கை மரத்தின் பெரிய கிளையில் அமர்ந்துள்ள மயில் அம்மரத்தின் மீது ஏறிப் பூப்பறிக்கும் பெண்போலத் தோற்றமளிக்கும். மலை நாடனே! நீ என் தோழியை மறந்து வாழ்தல் ஒரு கால் நிகழ்வதாயினும், அவள் நின்னொடு கொண்ட நட்பு என்றும் பிரிதற்கு இயலாதது என்பதை அறிந்து கொள்வாயாக.

ஒரு வழித் தணந்து சென்று மீண்டும் வருவதாகக் கூறினான் தலைவனாதலின், நீ இப்பொழுது பிரிந்து செல்வதோடமையாது, அறவே இவளை மறந்து விடும் காலம் தோன்றுதாயினும், தான் உன்னையும் உன்னொடு கொண்ட கேண்மையையும் மறக்க மாட்டாள் என்னும் கருத்தில்‘பிரிவினும் பிரிவது அன்றே’ என்றார். அத்தகைய அவிழ்க்கலாகா நட்பினையுடையாளை விரைந்து மணமுடிப்பாயாக என்னும் குறிப்பில்,வேங்கை மலர்ந்தமையைச் சுட்டி ‘விரிந்த வேங்கை’ எனச் சிறப்பித்தாள். (ஐங். மஞ்ஞை. 297)

தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி தலைமகட்கு உணர்த்தியவழி, அவள் நாணத்தினால் மறைந்து ஒழுகிய அதனைக் கூறக் கேட்ட தலைமகன் சொல்லியது.

தலைமகள் தோழியை நெருங்கித் தன் மனக்குறையைத் தீர்க்குமாறு வேண்டிய பொழுது அதற்கு உடம்பட்ட தோழி, தலைவியைக் கண்டு அவள் உடம்பாடு வேண்டினாள். தலைவி தன் நாணத்தினால் தனக்கும் அவனுக்கும் உள்ள உறவை மறைத்தாளாயினும் குறிப்பினால் உடம்பட்டாள். அதனை அவள் தலைவனுக்கு உணர்த்திய போது தலைவன் இங்ஙனம் கூறினான்.

மயில் மழைமுகில் வருதலையுணர்ந்து களிப்பு மிக்கு ஆடுவதற்கு இடனான பக்க மலைகளை உடைய நல்ல ஊரில் உள்ள அசைந்த நடையினைக் கொண்ட கொடிச்சியான என் காதலி, எமக்கு அருளுதற்கு உடம்படாளாயினும் யாம் அவளை நினைத்தலை ஒரு பொழுதும் மறந்தறியோம்.

மழையைக் கண்டு மகிழ்ந்து ஆரவாரித்து ஆடும் இயல்பினது மயிலாதலின் ‘மழைவரவு அறியா மஞ்ஞை ஆலும்’ என்றான். தன் வரவு கண்டால் மகிழ்ச்சியால் திளைக்கும் காதலியை உடைய ஊரை நல்லூர் என்று சிறப்பித்தான்.

தன் காதலி தன்பால் அன்பு நீங்கப் பெறாதவள் என்பதைத் தோழி கூற்றால் உணர்ந்தவன் ஆதலின், அவளைப் பாராட்டும் வகையில், அவள் அருளுதலை மேற்கொண்டாள் என்பதை அறிந்து மகிழ்கின்றேன். ஒரு வேளை அருளாள் எனினும் யான் அவளை மறவேன்’ என்பான். (ஐங். மஞ்ஞை. 298)

**தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியது**

‘கிளிகள் புனத்தின் கண் படியா நின்றன‘ என்று தலைவியைக் காக்க ஏவிய வழி அதனை அறிந்த தலைமகள் உவந்து தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

தலைவியின் பெற்றோர், தம் தினைப் புனத்தில் கிளிகள் படிந்து மேய்வதனைச் சொல்லி, அதனைக் காக்கத் தலைவியை ஏவினர். இதனை அறிந்த தலைமகன், தான் வந்து அவளைக் கூடி இன்புற நேர்ந்த வாய்ப்பாக எண்ணி உவந்து தன் நெஞ்சுக்குச் சொல்லியது.

என் நெஞ்சமே !அழகிய மென்மையான இயல்பினைக் கொண்ட குறமகள் காவல் புரியும்படி, பலவாகிய கதிர்களையுடைய தினைப் புனத்திலே

கிளிகள் படிகின்றன. இக்கிளிகள் எமக்குச் செய்த உதவி மிக நன்றாகும். இதனை நன்கு உணர்ந்து நாம் எவ்வாறு இவற்றுக்கு நன்றி செய்யவல்லோம்?

தலைமகளை கூடியின்புறுவதற்குரிய வாய்ப்பை எதிர்பார்த்திருந்த தலைமகனுக்குத் தலைவி தினைப்புனத்திற்கு வருதல் பெருவாய்ப்பாயிற்று. அவள் புனத்திற்கு வருவதற்கு காரணம், தினை முதிர்ந்ததும், அதனை உண்ணக் கிளிகள் அங்கு வந்தமையே, கிளிகட்குந்தான் எந்த நன்மையும் செய்தவனல்லன். எனவே, அவை செய்த உதவி என்பதும். பயன் தூக்காது செய்த உதவி என்பதும்,உணர்ந்தவன் தலைவனாதலின் “யாம் எவன் செய்குவ?” என்றான். என்ன உதவி செய்யினும் அது கிளிகள் செய்த உதவிக்கு ஈடாகாது என்பது கருத்தாகும். (ஐங். கிள்ளை. 288)

**தலைவன் தனக்கு தானே சொல்லிக் கொள்வது**

களவுக் காலத்தில், தன் திருமணத்திற்கு வேண்டும் பொருளீட்டுதற் பொருட்டுப் பிரிந்து சென்ற தலைமகன், பொருளீட்டி மீண்டு வருகையில், தன் காதலியை எண்ணித் தன்னுள்ளே சொல்லியது.

மூங்கில் போன்ற தோள்களையும், அழகிய தழைகளால் தொடுத்தமைத்த தழையுடை கிடந்து அசையும் அல்குலையும் உடைய என் காதலி வாழ்கின்ற மிக்க நலத்தாற் சிறந்த ஊர். மயில்கள் மகிழ்ந்து ஆட, அவ்வாட்டத்திற்கு ஏற்பப் பேராந்தைகள் மாறி மாறி அலறுவதற்கு இடனான சிறிய குன்றுகளைக் கொண்ட பக்க மலைகளிடையே அமைந்ததாகும்.

தன் காதலியின் தோள்களைத் தான் அணைத்து மகிழ்ந்ததை எண்ணியும், தான் கொணர்ந்த தழையுடையை அவள் அல்குற்பகுதி அழகு பெற அவள் அணிந்து மகிழ்ந்தமையை நினைவு கூர்ந்தும், 'பணைத்தோள் ஆய்தழை நுடங்கும் அல்குல் காதலி' என்று குறித்தான். தன் காதலி வாழும் ஊராதலின், அவள் மீது தனக்குள்ள பேரன்பை வெளிப்படுத்தும் முகமாக 'நனி நல்லூர்' என்று அதனைச் சிறப்பித்தான்.

அழகிய விறலியல் போல் மயில்கள் தம் தோகை விரித்து ஆடுவதற்கு ஏற்பக் குடிஞை தாள அறுதியோடு முழக்கப்படும் சிறுபறை போல முழங்கிற்று என்பானாய், 'மயில்கள் ஆடக்குடிஞை இரட்டும்' என்றான்,

தேடிய பொருளோடு அவளூர்க்கு மீண்டு தான் அவளை மணந்து இன்புறப் போகும் நினைவு தன் உள்ளத்தே தோன்றியமையால் இங்ஙனம் தன்னுள்ளே கூறி மகிழ்ந்தான். (ஐங். மஞ்ஞை. 291)

## குறிஞ்சிக் கலியில் தலைவியின் காதல்

"காணான் கழிதலும் உண்டு என்று, ஒருநாள் என்
தோள் நெகிழ்பு உற்ற துயரால் துணிதந்து, ஓர்
நாண் இன்மை செய்தேன்; நறுநுதால்! ஏனல்
இனக்களியாம் கடிந்து ஓம்பும் புனத்து அயல்,
ஊசல் ஊர்ந்து ஆட, ஒரு ஞான்று வந்தானை,
'ஐய! சிறிது என்னை ஊக்கி' எனக் கூற,
'தையால் நன்று' என்று அவன் ஊக்க, கைநெகிழ்பு

பொய்யாக வீழ்ந்தேன், அவன் மார்பின்; வாயாச்செத்து,

ஒய்யென ஆங்கே எடுத்தனன் கொண்டான்; மேல்

மெய் அறியாதேன் போல் கிடந்தேன் மன்; ஆயிடை

மெய் அறிந்து ஏற்று எழுவேனாயின், மற்று ஒய்யென,

'ஒண்குழாய்! செல்க' எனக் கூறி, விடும் பண்பின்

அங்கண் உடையன் அவன்" (கலித்தொகை. 37)

தினைப் புனத்திலே இனமாகிய கிளியை ஓட்டியாம் காவல் புரிந்த தினைப்புனத்துக்கு அயலே, ஊசலில் அமர்ந்து, ஆடினோம். ஒரு நாள் ஒரு ஆடவன் வந்தான். வந்தவனைப் பார்த்து சிறிது என்னை ஊக்கி விடுக எனக் கூறினாள் தையால்! நீ கூறியது நன்று என்று கூறி, அவனும் ஊசலை ஊக்கினான்; பொய்யாகக் கை நெகழ்வது போலச் காட்டி அவன் மார்பில் வீழ்ந்தாள்; அவனும் அதனை உண்மை என்றே நினைத்து விட்டான்; விரைந்து அவளை எடுத்து அணைத்துக் கொண்டான்; உண்மை அறியாதவள் போல் அவன் மார்பின் மேலேயே வீழ்ந்து கிடந்தாள்; அவ்விடத்தே அவன் மார்பிற் கிடக்கிறோமே என்ற உண்மையை அறிந்து அவள் எழுந்திருந்தாள். விரைவாக, 'ஒண் குழலாய்! செல்க' எனக் கூறி விடும் பண்புடன் இவர்களிடத்தில் அவனும் கண்ணோட்டம் உடையனாகக் காணப்பட்டான்.

உணர்ச்சி வசப்படும் போது அறிவு செயல்படாது என்ற உண்மை இங்கு நன்கு விளங்குகிறது.

தலைவி தலைவனை விரும்பியமை,அவன் உற்ற காம நோயால் தோள்கள் நெகிழ்ந்தன என்று கூறுவதாலும், தலைவியைத் தலைவன் விரும்பினமை 'நன்று' என்று அவன் உடன்பட்டு செயற்பட்டமையாலும் நுண்மையாகக் காட்டியுள்ளார் கபிலர்.

மேற்கோள்:

1. "கயமலர் உண் கண்ணாய்" – "கயமலர் உண்கண்ணாய்

   காணாய் நின் ஐயர்" (சிலம்பு. 12)

2. "கண்ணின்று கூறுதலாற்றான்" – "கண்ணின்று

   கண்ணறச் சொல்லினும்" (குறள். 184)

3. "ஐய சிறிதென்னை ஊக்கி" – தானூக்கினன்

   அவ்வூசலை வந்தே" (கலி. 31)

4. "ஏற்றெழுவேன்" – 'மெய்யுணர்ந்து ஏற்றெழு வேனாயின்"

பூண் ஆகம் மெல்லியற் புல்லினையாகவப் பொய்யை மெய்யாப் பேணா மகிழ்ந்து பெருந்துயில் ஏற்றவள் பின்னை அவனைக் காணாமல் கலங்கினாள்.

"ஆர்இடை என்னாய் நீ அரவு அஞ்சாய் வந்தக்கால்,
நீர் அற்ற புலமே போல் புல்லென்றாள், வைகறை,
கார் பெற்ற புலமே போல், கவின் பெறும்; அக்கவின்
தீராமல் காப்பது ஓர்திறன் உண்டேல், உரைத்தைக் காண்.

இருள் இடை என்னாய் நீ இரவு அஞ்சாய் வந்தக்கால்,
பொருளில்லான் இளமைபோல் புல்லென்றான், வைகறை
அருள் வல்லான் ஆக்கம் போல் அணி பெறு ம்; அவ் அணி
தெருளாமல் காப்பது ஓர் திறன் உண்டேல், உரைத்தைக் காண்

மறம் திருந்தார் என்னாய் நீ மலையிடை வந்தக்கால்,
அறம் சாரான் மூப்பே போல் அழிதக்காள். வைகறை.
திறம் சேர்ந்தான் ஆக்கம் போல் திருத்தகும்; அத்திருப்
புறங்கூற்றுத் தீர்ப்பது ஓர் பொருள் உண்டேல்; உரைத்தைக்காண்."

(கலி. 38)

தலைவனின் அளி பெறாமையினால் நீர் அற்ற நிலத்தில் பயிர் போலப் பொலிவிழந்து காணப்பட்டாள் தலைவி. தலைவன் வருவதற்கு அரிய இடம் என்று கருதாமல், ஆண்டுள்ள பாம்பையும் கண்டு அஞ்சாதவனாய் வந்த போது, விடியற்காலத்தே மழை பெய்ய, அந்நிலத்துப் பயிர்போல அழகு பெறத் திகழ்ந்தாள் தலைவி, இங்ஙனம் பெற்ற அழகு இனி இவை விட்டு நீங்காவண்ணம், நிலைபெற்று, நிற்கும் படி காப்பதற்குரிய திறப்பாடு உண்டானால் அதனை எங்களுக்குத் தெரிவித்துக் கொள்ள வேண்டும்.

நின் அளி பெறாமையின், கைப்பொருள் இல்லாதவன் இளமை போலப் பொலிவு அழிந்தாள், நீ, இருளிடத்து, இரவென்றும் கருதாமல், அங்கு வரும் ஏதத்திற்கு அஞ்சாமல் வந்த போது, விடியற்காலத்தே அருள் பெற்றவன்

ஆக்கம் போல, அழகு பெற்றுத் திகழ்ந்தாள். இங்ஙனம் பெற்ற அழகைப் புறங்கூறும் மாக்களிடமிருந்து காப்பதற்குரிய ஒரு பொருள் உண்டானால் அதனை எங்களுக்குத் தெரிவித்துக் கொள்வாயாக.

"காமர் கடும்புனல் கலந்து எம்மோடு ஆடுவாள்,
தாமரைக் கண் புதைத்து, அஞ்சித்தளர்ந்து, அதனோடு ஒழுகலான்,
நீள்நாக நறுந்தண்தார் தயங்கப் பாய்ந்து, அருளினால்,
பூண் அகம் உயத்தழீஇப் போத்தந்தான் அகன் அகலம்
வருமுலை புணர்ந்தன என்பதனால், என் தோழி
அருமழை தரல் வேண்டின் தருகிற்கும் பெருமையளே"

(குறிஞ். கலி. 39)

விரும்பத்தக்க, விரைந்து வரும் நீரிலே தோழியும், தலைவியும் நீராடச் சென்றனர். கால் தளர்ந்து, அஞ்சி, தாமரை போன்ற கண்களைப் புதைத்துக் கொண்டு நீரோடு போனாள் தலைவி. அங்கு வந்த ஒருவன், அருளினால், நீண்ட மணமுடைய குளிர்ந்த புன்னை மாலை அசையும் படி நீரிலே பாய்ந்தான்.

பூண் அணிந்த இவள் மார்பகங்கள் தன் மார்பிலே இறுக்கம் உறும்படி தழுவி, அணைத்துக் கொண்டே வந்து கரையிலே சேர்ந்தான். அவனுடைய அகன்ற மார்பை, இவளுடைய எழுகின்ற முலைகள் கூடின எனப் பிறர் கூறினர். அதனால் அவனே இவளுடைய காதலன் ஆயினான்.

கலித்தொகையில் 39-ம் செய்யுளில் தலைவன் தலைவி முதற்புணர்ச்சி புனல் தரும் புணர்ச்சியாகும். நீரால் அடித்துச் செல்லப்பட்ட தலைவியைத் தலைவன் காப்பாற்றிக் கரை சேர்த்தான்.

“தயங்கப் பாய்ந்து அருளினாற்

பூணாக முறத் தழீஇ போதந் தான்”

என வருகிறது.

மேற்கோள்:

1. “அருமழை தரல் வேண்டில் தருகிற்கும் பெருமையள்”

 “வான்தரும் கற்பினாள்” (கலி. 16)

2. “பெய்யெனப் பெய்யும் மழை” (குறள். 55)

3. “பொழி மழை தரூஉம் அரும் பெறல்

 மரபிற் பத்தினிப் பெண்டிரும்” (மணி.16)

நின் அடியிலே யான் உறைதற்கு நீ அருளாதிருத்தல் நினக்குப் பொருந்துவரோ என வேண்டினான். பொன்னாற் செய்த மகர மீன் வாயினது வடிவில் அமைந்த தலைக்கோலம், நரந்நம் பூவின் மணம் நாறும் கரிய கூந்தலை விழுங்கிக் கிடந்தது. அக்கூந்தலின் முடியை ஒழியாமல் மிகவும் பற்றினான். அதிலே நன்மை பெறும்படி, கட்டின பற்றமைந்த மாலையை விரலாலே முறையாகச் சுற்றி அதனை மோந்து பார்த்தான். அது மட்டுமின்றி, நரவம் பூ மலர்ந்தாற் போன்ற, என் மெல்லிய விரல்களை உடைய கையைத் தாங்கிக் கொண்டு, கொல்லன் உலை மூக்கு வெவ்விதாய் உயிர்ப்பது போல

நெட்டுயிர்ப்பும் செய்தான். தொய்யில் எழுதிய என்இளமுலைகளை இனிதாகத் தடவினான். தொய்யில் கொணர்ந்த தன் அழகிய அகன்ற கையால், தன் பிடியை மையல் கொண்டு தழுவும் களிறுபோல, என் மேனி முழுவதும் தடவினான். என்னை அவன் வசமாக்கி மயக்கியும் விட்டான். அச்செயலாலே தோழி, யான் காம வதையால் துன்பத்தைப் போக்கினான். தோழி, நீயும் நான் விரும்பியவாறு மணம் நிகழ தாய் இடத்து கூற வேண்டும். நின் மகள் நம் குடிக்கு வடுவாகாமல் கற்புக் கடம் பூண்டாள். நம் மனைக் கண் நிகழும் அரிய மணம் பிறன் ஒருவன்றி, அவனோடே நிகழுமாறு, அறத்தொடு நின்று வகையாற் கூறின் அது நமக்கு நல்லது என்று கருதி, உன்னோடு கலந்து பேசுவேன். நீ இங்ஙனம் கூறி உதவினால் "இன்னது செய்தாள் இவள்" என்ற புகழ் நிலை நில்லாத உலகத்திலே நிலைத்து நிற்கும் புகழ் நமக்குப் பொருந்தும். இதனை எண்ணுவாயாக என்றாள் தலைவி.

தலைவி, தலைவன் கையகப்பட்டு எய்திய புணர்ச்சி நிகழ்ந்தமையைத் தோழி மாட்டுக் கூறினாள்; மேலும் வேற்றுமணம் நிகழாதவாறு தாய்க்கு அறத்தொடு நிற்குமாறும் வேண்டினாள்.

ஒளிர்கின்ற மின்னினது அறுதிகள் – கொடி மின்னல்கள் இடையே பிளந்தோடும் மேகங்கள் போல, பொன்னைக் கூறுபடுத்தின. அழகுடைய, தலைக்கோலம், வகைப்படுத்திய நெறித்த கூந்தலிலே அழகுறச் சூட்டப் பெற்றுள்ளது; தாழம்பூவை வகிர்ந்து இடையிலே இட்டு முடிந்த நாறுகின்ற பூ

மாலையினையும், இனிய நகையினையும். விளங்குகின்ற எயிற்றினையும், இனிய மொழிகளையும், பவளம் போற் சிவந்த வாயினையும் நன்றாகிய நுதலினையும் உடையாய்! நினக்கு ஒரு வார்த்தை கூறுவன்; அதனை இப்பொழுது கேட்பாயாக!

வழியே சென்ற என்னை வந்து, 'நீ போகாதே நில்' என்று நிறுத்தினான் தலைவன்; யான் நிற்கவும் அணுக வந்து, நுதலையும், முகத்தையும். தோளையும், கண்ணையும். சாயலையும், சொல்லையும், நோக்கா நின்றான்; நோக்கி உவமை கூற நினைந்து, நின்நுதல் கண்டார் வியக்குமாறு தேய்ந்தது; ஆயினும் பிறையும் அன்று; நின் முகம் மறுவற்றுளது; ஆயினும் மதியும் அன்று; நின்தோள் மூங்கில் போன்றுள்ளது ஆயினும் நீ அது பிறக்கும் மலையுமன்று; நின் கண் மலர் போன்று உள்ளது; ஆயினும் நீ அது பிறக்கும் சுனையுமன்று நின் சாயல் மெல்லென அசைவதே ஆயினும் நீ மயிலுமன்று; நின் சொற்கள் சொல்லுக்குச சொல் தளரும் ஆயினும் நீ கிளியுமன்று என ஒவ்வோர் உறுப்பையும் பார்த்துப் பார்த்து எண்ணி எண்ணி இவ்வாறு எல்லாம் என்னைப் பலபடப் பாராட்டினான்; வலையர் விலங்குகளின் சோர்வைப் பார்க்குமாறு போல, யான் மயங்கிச் சோர்ந்திருக்கும் நிலையை உணர்ந்து. அகப்படுத்த எண்ணினன்; என் நெஞ்சு அழிந்த செவ்வியைப் பார்த்துப் புலையர் நோக்குமாறு

போல வருத்தம் உண்டாக நோக்கி என்னைத் தொழவும் செய்தான்; தீண்டவும் செய்தான்; மதத்தால் அறிவு கெட்டுப் பரிக்கோலுக்கும் அடங்காது, நிலையில்லாத கடிய களிற்றை ஒப்பான் பலமுறையும் தொழுதலைச் செய்தான்; தீண்டுவதும் செய்தான்; ஆதலின் தோழி, அவன் நிலையில் எவ்வித ஏழ்மைத் தன்மையோ – அறியாமையாகிய குணமோ இல்லை என்றாள் தலைவி.

தலைவனுடைய தொழுதல் முதலிய செயல்கள் அறிவிலியின் செயல்கள் போன்றிருப்பினும் அவன் அறிவிலி அல்லன் என்றாள் தலைவி; அறிவுமிக்க காதலன் த்ன்னைக் காதலிப்பாள் இடத்துச் செய்யும் அன்புச் செயல்களே அவை; இத்துணை செய்தும் யான் நாணும் மடனும் நீங்காது நின்றேன் என்று தலைவி தன் பெருமை சான்ற இயல்பு கூறினாள்.

**தலைவிக்குத் தோழி கூறியது**

தலைவன் தலைவியைத் திருமணத்திற் கொள்ளுதலில் கருத்தின்றிப் பன்னாள் வாராதிருந்தமையால் தலைவி உடல் மெலிந்தாள். அவளைத் தேற்ற விரும்பிய தோழி, தலைவன் அவள் மீது பேரன்புடையனாக இருப்பவும் மெலிவது பொருளற்றது என்றாள்.

களவின் பத்தில் ஈடுபாடு மிகக் கொண்ட தலைமகன் தலைமகளை விரைவில் மணந்து கொள்வதாகப் பொய்ம் மொழிகளால் தெளிவித்தான்.

ஆனால் தொடர்ந்து களவின்பம் ஒன்றையே நாடினான். ஒரு நாள் அவன் சிறைப்புறத்தே காத்து நிற்பது அறிந்த தோழி, அவன் கேட்டுத் திருந்தும் வண்ணம் தலை மகளிடம் கூறினாள்.

களவுக் காலத்தில் தலைமகளைக் கூட்டுவிக்குமாறு தோழியை வேண்டினான் தலைவன். அவளும் அதற்கு உடன்பட்டு அவளைத் தலைவளோடு கூட்டுவித்தாள், ஆனால் தலைவன் அதற்குப்பின் ஒழுங்காக வாராது இடையிட்டு வருதலை மேற்கொண்டான். ஒரு நாள் அவன் தலைவி வீட்டருகே நிற்பதைத் தான் அறியாதாள் போல, அவன் செவிப்படும் வண்ணம் தலைவிக்குச் சொல்லுகிறாள்.

நேரிய வளையல்களையும் ஒன்றற்கொன்று இணையாக அமைந்த நெய்யுடைய கூந்தலையும் உடையாய்! பன்றி உழுதமையால் ஓங்கியெழுந்த கோரை பற்கள்,அவை உள்ள இடத்திற்கு நெல்வயல் போன்ற தோற்றத்தைக் கொடுத்தற்கு இடனான நாட்டின் தலைவன், நீ துயருற்று அழுமாறு ஈங்கு வாராது தான் சென்ற இடத்திலேயே நீடித்து உறைவாவென்றால், யான் என் அறியாமை காரணமாக நினக்குத் தோழியாயிருக்கும் பேற்றினை இழப்பேன் என்று கூறினாள்.

## தலைவி தோழிக்குத் கூறியது

திருமணத்திற்கு வேண்டும் பொருள் ஈட்டக் கருதிப் பிரிந்த தலைவன் வரத் தாமதித்ததால் தலைவி மேனிவாடிப் பொலிவிழந்தாள். அவன்

மீண்ட போது அழகும் அவள் மீண்டது. இங்ஙனம் மீண்டதற்குரிய காரணம் அறியாள் போல வினவிய தோழிக்குத் தலைவி கூறிய விளக்கமாகும்.

தலைவியைக் காணக் குறியிடம் வந்த தலைவன், குறி தவறியமையின் வருந்தி நீங்கினான். மறுநாள் அவன் வந்து வீட்டருகே நின்றான். அவன் முதல் நாள் இரவு வந்து ஏமாற்றமுற்றதற்கு அவனுடைய அறியாமையே காரணமன்றித் தான் தவறுடையாள் அல்லள் என்பதை அவன் உணரும் வண்ணம் தோழிக்குச் சொல்லுவாளாய் முதல் நாள் நடந்தவற்றைச் சொன்னாள்.

தோழியே! கரிய விரல்களைக் கொண்ட மந்தியினது, முயன்று கல்லாமல் இயல்பாகவே தன் தாயைப் பற்றிக் கொள்ளும் வன்மை கொண்ட இளங்குட்டி, ஏறற்கு அரிதான மலையில் இழைக்கப் பெற்ற தேன் இறாலின் கண்ணுள்ள தேனைப் பருகிட எண்ணி அதிலுள்ள தேனீக்களைக் கலைத்து எழுப்பி விட்டுப் பின்னர் அயலே உள்ள அச்சந்தரும் நெடிய கிளையின் மேலே பாய்ந்தற்கு இடமான மலை கிழவன் இராப்பொழுதில் வருதலை அறியான். இவ்வாறிருப்பவும் நம் தாயோ அவன் வரும் வரும் என்று அடிக்கடி கூறா நிற்பாள்.

தலைவியைக் காணக் குறியிடம் வந்த தலைவன், குறி தவறியமையின் வருந்தி நீங்கினான். மறுநாள் அவன் வந்து வீட்டருகே நின்றான். அவன் முதல் நாள் இரவு வந்து ஏமாற்றமுற்றதற்கு அவனுடைய அறியாமையே காரணமின்றித் தான் தவறுடையாள் அல்லள் என்பதனை அவன்

உணரும் வண்ணம் தோழிக்குச் சொல்லுவாளாய் முதல் நாள் நடந்தவற்றைச் சொன்னாள். (ஐங்.குரக்குபத்து. 272)

தோழியே நீ வாழ மந்தியின் கணவனான, இயல்பாகவே குரங்குச் சாதிக்குரிய திறன்கள் யாவும் படைத்த ஆண்குரங்கு, ஒள்ளிய நிறம் படைத்த வலிமை சான்ற புலி முழங்குதலால், மிக வரைந்து உயர்ந்த மலைப்பக்கத்திற்குத் தப்பிச் செல்லுதற்கு இடனான மலைநாடன் என்னைத் தனிவிடுத்துச் சென்றான். அவ்வாறு செல்கையில் என் மெல்லிய தோள்களின் அழகையும் என் உறக்கத்தையும் உடன் கொண்டு போனான். யான் என்ன செய்வேன்?

(ஐங். குரக். 274)

தலைவியே மணத்திற்கொள்ளக் கருதாத தொடர்ந்து களவினை நீட்டித்த தலைவன், ஒரு நாள் அவன் வந்து தலைவியின் இல்லத் தருகே மறைந்து நின்றபோது தலைவி, தன் தோழியை நோக்கி, அவன் கேட்கும் வகையிற் சொன்னாள்.

தோழி! மலையின் கண் உள்ள மூங்கிலின் கணுக்களிலிருந்து வெடித்து வளர்ந்த கோல், அதன் மீதிருந்த குரங்கினது வலிமையுடைய குட்டி, அக்கோலை விடுத்து வேறுகோலிலே பாய்ந்த அளவில், நீர் நிலையின்கண் மீனை எறிகின்ற தூண்டில்கோல் சட்டென நிமிர்வதுபோல் உயர்வதற்கு இடமான நாட்டையுடைய நம் காதலன், தன்னொடு நட்புற்றோர் என்றும் மறக்க முடியாத பெருந்துன்பத்தை நமக்குத் தந்து, அதற்கு ஈடாக, ஒரு கால் கண்டோர் மீண்டும் மீண்டும் காண விழையும் நம் பேரழகைத் தான் கொண்டேகினான்.

(ஐங். குரக். 278)

தலைவியை உடன் கொண்டு ஏக முடிவு செய்திருந்த தலைவன் பின் தன் முடிவை மாற்றிக் கொண்டு, தானே சிறிது நாள் கழித்துப் பொருளீட்டி வந்து மணக்க விரும்பினான். அதனை உணர்ந்த தலைமகள் தோழிக்குச் சொன்னாள். தலைமகன் வரைதற்கு வேண்டும் பொருள் கொணர்ந்து பின் வரைவதாகச் சொன்னதனைத் தலைவி தோழிக்கு அறிவித்தாள்.

சிறிய தினைத் தானியம் கொண்ட கதிர்களைக் குறவர் அறுவடை செய்த பின்னர் நின்ற வெள்ளிய இருவிகளின் மேல் படர்ந்து காய்த்த அவரையின் மேல் வந்து படிகின்ற கிளிகளை ஓட்டுவதற்கு இடனான புதிய வருவாய்கள் உண்டாகும் வளமலை நாடன் இன்று குற்றமுடைய ஒற்றனைச் செய்ய விரும்பினான் போலும். இதன் விளைவாக என் மாமையாகிய கவினை அவன் கவர்வது உறுதியாகும். (ஐங். கிள்ளை. 286)

**தோழி தலைவிக்குக் கூறியது**

தலைமகன் தானே வரைவு வேண்டிவிட, சுற்றத்தார் கொடை நேர்ந்தமை தலைமகட்குத் தோழி சொன்னாள்.

தலைமகன், தன் சுற்றத்தார் வழியே மகட்கொடை வேண்டின்னாக, அதற்கு உடம்பட்ட தலைவிக்கு உறவினர் அவர் வேண்டுகோளுக்கு இசைந்தனர். அச்செய்தியைத் தோழி தலைவிக்கு இங்ஙனம் மகிழ்வுடன் தெரிவித்தாள்.

அழகும் இனிமையும் கொண்ட சொற்களை உடைய தோழியே குறிஞ்சிநிலக் குறப் பெண்ணின் கூந்தலைப் போல மயில் தன் அழகிய தோகை

விரிப்பதற்கு இடமான பெரிய மலைகளை உடைய நாட்டின் தலைவன் மகட்பேசி வந்தனர். நம் சுற்றாத்தாரும் அவன் வேண்டுகோளுக்கு இணங்கி நின்னை அவனுக்குக் கொடுக்க உடம்பட்டனர். இனி நின் சிறப்பு மேலும் பொலிவு பெறுமாக. (ஐங். மஞ்ஞை. 300)

பிறர் தாம் விரும்பிய பெருநன்மையை, ஒருவர் செய்தால் அந்நிலையில் அவரைப் போற்றாதவர் உளரோ இல்வாழ்க்கையில் தலைவனுக்குத் தலைவி ஆற்றும் இரு நன்மைகளில், அறம் என்ற ஒன்று மட்டும் உடையவளாக இருந்தாலும். விரும்புதல் சிறந்து, இவள் தன்னையே நொந்து கொள்ளும் நிலை நீங்கப் பேணுவாயாக. உதிர்ந்த இலைகளைப் பற்றி உண்டு, அசைகின்ற மூங்கில்கள் வளர்ந்துள்ள குளிர்ச்சியும், நறுமணமும் உடைய மலைப்பக்கத்தில், மெல்லிய நடையையுடைய மரைமான், தங்கி வாழ்வதற்கு இடமான நல்ல மலைநாடனே, நீ இவளை அளிப்பாயாக அளிப்பதற்கு நின்னைத் தவிர வேறு ஒன்றையும் தன் நெஞ்சில் கொள்ளாதவள் இவள்.

(குறு. 115)

**தலைவன் வரும் வழியின் அருமை**

இரவில் கடுமையான வழியில் வரும் தலைவனிடம் தோழி இரவுக்குறி மறுத்து மணம் புரியுமாறு வற்புறுத்த எண்ணினாள். அவள் இரவுக் குறியில் வந்த தலைவனிடம், “இரவில் நேரும் துன்பத்திற்கு அஞ்சாது வருகிறாய். நீ வருவது கண்டு யான் அஞ்சுகிறேன். எனவே சிறிய வழியில் வர வேண்டாம்” என மறுத்துரைக்கிறாள்.

"பிணர்ச் சுவற் பன்றி தோல்முலைப் பிணவொடு

கணைக் கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்,

கல் அதர் அரும் புழை அல்கி, கானவன்,

வில்லின் தந்த வெண் கோட்டு ஏற்றை,

புனை இருங் கதுப்பின் மனையோள் கெண்டி,

குடி முறை பகுக்கும் நெடு மலை நாட!

உரவுச் சின வேழம் உறு புலி பார்க்கும்

இரவின் அஞ்சாய் ;அஞ்சுவல் - அரவின்

ஈர் அவளைப் புற்றம், கார் என முற்றி,

இரை தேர் எண்கினம் அகழும்

வரை சேர் சிறு நெறி வராதீமே! (நற்றி. 336)

வலிமையான சினம் பெருக, யானை - புலி வருவதை நோக்கியிருக்கும் இரவுப் பொழுதில் எம்மைக் கருதி வருவதற்கு அஞ்ச மாட்டாய். ஆயினும் நீ வருவது கண்டு நான் அஞ்சுகிறேன். பாம்பு உறைகின்றது, ஈரமான துளையுடையதுமான புற்றினை மேகம் சூழுமாறு போலச் சூழ்ந்து இரைதேடும் கரடியினம் அகழ்ந்து பெயர்க்கும். எனவே. இத்தகைய மலையிடத்துப் பொருந்திய சிறிய வழியிலே இனி வருதல் வேண்டாம் எனக் கூறினாள்.

தலைவியைக் கருதிய அன்பால் தலைவன் கொடிய வழியில் நள்ளிரவில் அஞ்சாது வருகிறான். தலைவனிடம் பேரன்புடைய தலைவி அவன் இரவில் வருவதால் ஏதும் நேரும் என்றஞ்சியே இறந்து படவும் கூடும். எனவே

வருதல் வேண்டா என மறுத்தாள் . அங்ஙனமே உடன்பட்டு இரவுக்குறியில் வராதபோது தலைவியுடனான கூட்டம் தடைப்படும். அதனால் பின்னும் தலைவி வருந்துவாள். எனவே உடன் மணம் புரிதலே சிறந்ததெனக் குறிப்பில் உணர்த்தினாள்.

தலைவன் கொடிய வழியில் வருவதுகண்டு தலைவி அஞ்சும் இயல்பை,

1. "மாரி நின்ற ஆரிருள் நடுநாள்
அருவி அடுக்கத்து ஒருவேல் ஏந்தி.
மின்னுவசி விளக்கத்து வரும் எனின்
என்னோ, தோழி நம் இன் உயிர் நிலையே?" (நற். 334 6-9)

2. "சாரல் நாட; நடு நாள்
வாரல் வாழியோ வருந்துதும் யாமே" (குறும் 69; 5-6)

3. "ஆள் இல் பெண்டிர் நாளின் செய்த
நுணங்கு நுண் பனுவல் போல, கணம் கொள.
ஆடு மழை தவரும் கோடு உயர் நெடு வரை.
முட முதிர் பலவின் குடம் மருள் பெரும் பழம்
கல் கெழு குறவர் காதல் மடமகள்
கரு விரல் மந்திக்கு வரு விருந்து அயரும்,
வான் தோய் வெற்ப சான்றோய் அல்லை - எம்
காமம் கனிவது ஆயினும, யாமத்து

இரும் புலி தொலைத்த பெருங் கை யானை

வெஞ் சின உருமின் உரறும்

அஞ்சுவரு சிறு நெறி வருதலானே” (நற். 353)

களவின் வழி வந்தொழுகும் தலைவன். இரவின் கண்ணே வருதலால் சால்புடையவன் அல்லன் எனத் தோழி கூறினாள்.

இரவில் கரிய புலியைக் கொன்ற சினத்தால் யானை இடி போல முழங்கும். அத்தகைய அச்சம் தரும் யாமத்தில் எம்பால் உள்ள காமத்தின் காரணமாக யாரும் வருவதற்கு அஞ்சும் சிறிய கொடிய வழியில் வருதலால் நீ சால்புடையில்லை எனவே இவ்வாறு வருதலை, நீக்கி வேறு தக்க செயலினைச் செய்வாயாக என வேண்டுகிறாள். களிறு புலியைத் தாக்கும் சாரல் என்பது.

மேற்கோள்:

1. “சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கித்

தொன் முரண்சோரும் முன்னருஞ்சாரல்” (குறுந். 88; 2-3)

2. “தலைவன் சான்றோன் அல்லன்” (நற். 283) (குறுந். 102; 4)

தலைவன் வரும் வழியை மின்னலின் ஒளியினால் உணர்ந்து, இடியென்றும் கருதாமல் மழை என்றும் கருதாமல் இத்தகைய அரிய ஏதம் மிக்க வழியில் இவண் நீ வருகின்ற நிலைமை எமக்கு இன்னாது என்று தோழி கூறினாள்.

மணம் நாறுகின்ற மார்பினை உடையையாய், மேகம் சூழ்கின்ற பக்க மலைகளின் இடையே, சூரரமகளிரை உடைய அரிய வழியிலே இவண் நீ வருகின்ற நிலைமை எமக்கு இன்னாது;

ஒளி விடுகின்ற வேலை வலக்கையிலே எடுத்து, யான் ஒருவன் என்று எண்ணாது யானை உலவுகின்ற அரிய வழியிலே இவ்விடத்தே நீ வருகின்ற நிலைமை எமக்கு இன்னாது.

**தோழி வழியருமை கூறி வருந்துதல்**

இரவுக் குறி வருகின்ற தலைமகற்கு, தோழி ஆற்றாமை கூறி மறுத்தாள்.

தலைவன் தன் காதல் மிகுதியால் நள்ளிரவில் நேரத்தக்க இடையூறுகளையும் பொருட்படுத்தாது வருதல் கண்டு, அவ்விடையூறுகட்கு அஞ்சியும், விரைவில் திருமணம் செய்து கொள்ள வற்புறுத்தவும், தோழி வழியருமை கூறி இரவுக்குறி மறுத்து கூறினாள்.

குறமகள் காத்து நிற்கும் பெரிய கதிர்களைக் கொண்ட தினையைப் பக்க மலையிற் வாழும் மயிலினம் கள்ளத் தனமாகக் கவர்ந்து உண்ணுதற்கு இடமான மலைநாட்டுத் தலைவ! நீ உயிருக்கு ஏதம் விளைக்கத் தக்க நடுயாமப் பொழுதிலும் இவளைக் காண வருகின்றனை. அங்ஙனம் வரும் போது காட்டு விலங்குகள் நின்னைத் தாக்கினால், அதன் பின் விளைவுகளைச் சொல்லவும் யான் அறியேன். (ஐங். மஞ்ஞை. 296)

**தலைவி தன் நெஞ்சிற்குத் கூறியது**

தலைமகள் வரைவிடை வைத்துப் பிரிந்து நீட்டித்துழி, உடன் சென்ற நெஞ்சினைத் தலைமகள் நினைந்து கூறினாள்.

தலைவன் திருமணத்திற்கு வேண்டுவன செய்தற்பொருட்டுப் பிரிந்து தன்னூர்க்குச் சென்றான். அப்பொழுது அவனுடன் சென்ற தன் நெஞ்சினைப் பற்றித் தலைவி ஐயுற்றுக் கூறினாள்.

வேடர்கள் காட்டின் கண் கொளுத்திய கொள்ளியை அஞ்சித் தம் புகலிடங்களான கூடுகளுக்குச் செல்லும் மயில்கள், கதிர்கள் கொய்யப்பெற்ற அரிதாளில் தங்கியிருந்த குருவிகள் எழுவதும் விழுவதுமாய் வருந்திடத் தம் சிறகை விரித்துப் பந்தாடு மகளிர் போல அசைந்து ஆடிச் செல்லுவதற்கு இடமான மலைகள் சூழ்ந்த நாடனொடு சென்றுவிட்ட என் உள்ளம் மீண்டும் என்னிடம் வருமா அன்றி வாராது அவன் வாழும் இடத்திலேயே தானும் இருத்தலை விரும்பி அவ்விடத்திலேயே தங்கி விடுமா என்பதறியேன். அங்ஙனம் தங்கினால் யான என்னாகுவேன்?

**தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியது**

நம்மிடத்து காதலையுடையவள், இரு வேறுபட்ட ஒழுகலாற்றை அறிந்த கள்ளத் தன்மையுடையவள், செறிந்த இருளையுடைய இரவின்கண், மூவருள் ஒருவற்குத் துணை வலியாய் அமைந்து, பிறரிடம் மாறுபாடு கொண்ட , செவ்விய வேற்படையை உடைய மலையமான் திருமுடிக் காரியின், முள்ளூர் மலைக் காட்டின் மணம் போன்ற இயற்கை மணம் நாறத் தோற்றப் பொலிவுடன்

குறிக்கண் நம்பால் எய்தி, நம்மோடு ஒரு தன்மையள் ஆவள். வைகறைப் பொழுதில், நாம் கூந்தலில் சூட்டிய பல்வேறு மலர்களைத் தமர் அறியாமல் உதிர்ந்தது, கங்குல் புணர்ச்சியால் கலைந்த நறிய மயிரினை, மயிர்ச் சாந்தும் எண்ணெயும் தடவி, நம்மை முகத்தால் விரும்பாதவள் ஆகித் தம் உறவினர்களுக்கு முகத்தால் அமர்ந்த ஒரு தன்மையள் ஆவள்.

தலைவி, தன்னுடைய தோற்றப் பொலிவினைத், தமர்க்கு ஏதின்மை பட அவர்முன் மறைத்தலும், தனக்குத் காதன்மைபட நம்முன் வெளிப்படுத்தலும் ஆகிய இரு நிலைகளையும் அறிந்தவளாய் விளங்குவதாகவும் பொருள் உரைக்கப்படும். தலைவியின் இயற்கை மணம் முள்ளூர்க் கானத்தின் மணத்தோடு உவமிக்கப்பட்டது. நன்மகளிர் உடலில், செண்பகமணம் இயல்பாகவே கமழும் என்பர். கங்குலின் தலைவியைக் கூடிய தலைவன், பகலில் தலைவியின் இல்லத்தில் விருந்தாகப் புக்க போது, அவளுடைய அமரா(விரும்பாத) முகத்தின் இயல்பு அறிந்தான். (குறுந். 312)

**தோழியின் செயல்**

தலைமகன் வரைதலில் விருப்பம் கொள்ளாது தொடர்ந்து வந்து தலைவியொடு அளவளாவி மகிழ்தலில் ஆர்வம் காட்டி வந்தது கண்ட தோழி, ஒரு நாள் தலைவனை எதிர்பட்டு, அவன் விரைவில் தலைமகளை மணம் செய்து கொள்ள வேண்டும் என வற்புறுத்தினாள்.

**தலைவியின் தன்மையை தலைவன் நண்பனுக்குக் கூறுதல்**

நண்பா! என்னாற் காதலிக்கப்பட்ட பெண் குன்றத்தின் கண் வாழும் குறவனின் அன்பிற்குரிய இளமகள். அவள் மலையில் இயங்கும் தெய்வப்பெண்டிரை யொத்த சாயலுடையாள்; அழகுடையவள்; அரும்பு போலும் முலையினள்; சிவந்த வாயினாள்; தன் மார்பில் தேமலையுடையவள்.

**குறிப்புக்கருத்து**

சங்க இலக்கியத்தில் பெண்மகவு அளிக்குமாறு இறைவனை வேண்டுவதாக அமைந்த செய்யுள் ஐங்குறுநூற்றில் மூன்றாவது பத்தில் உள்ள குன்றக்குறவன் பத்தில் 257-வது செய்யுள் மட்டும் தான்.

**தலைவியின் தன்மையை தலைவன் தோழிக்குத் கூறியது**

பெண்ணே! நின் தோழி குன்றக் குறவனின் அன்புக்குரிய இளமகளாவாள்; வண்டுகள் மொய்க்கும் மலரணிந்த கூந்தலுடையாள்; குளிர்ந்த தழையுடைய பூண்ட கொடிச்சியாவாள்; வளையல் அணிந்த கையினள் நாணல் முளை போலும் வெள்ளிய பற்களையுடையவள்; வயதில் இளையளே எனினும் எனக்கு உய்தற்கு அரிய துயரைத் தருபவளாகும்.

**முருகனை வேண்டி பெற்ற மகள் தலைவி**

குன்றத்தின் கண் வாழும் குறவன்தன் குடிதெய்வமாம் முருகனை வழிபட்டு, குறையிரந்து பெற்ற ஒள்ளிய வளைகளை அணிந்த இளமகள்

இத்தலைவி ஐய நீ இவளுடைய அழகிய அரிபரந்த நெடிய கண்கள் கலங்கி நீர் உகுக்குமாறு பிரிந்து செல்ல விரும்பும் நாடு மிகச் சேய்மைக்கண் உள்ளது. உன் பிரிவை இவள் எங்ஙனம் ஆற்றியிருப்பாள்?

**தோழி தலைவி நிலை பற்றிக் கூறுதல்**

நிரைத்த வளையல் அணிந்த முன்கையை உடைய என் தோழியைக் காமக்குறிப்பு அவள் மாட்டு நிகழும் வண்ணம் காமுற்று நோக்கினை; தினைப்புனத்திலே படிகின்ற கிளிகள், பரவிக் கிடக்கும் பசிய கதிர்களை உண்ணா நின்றன; அவள் நின் நினைவால் அக்கிளிகளை ஓட்டுதலையும் ஒரு படிப்பட மறக்கச் செய்தனை, நீ அவளை நின்வயத்தளாக்கி மறக்கும் படி செய்தாய்; இனி நீ இவளை இடைவிடாது நெடிது நினைத்தாலும், பாதுகாத்தலும் வேண்டும்; பல குலைகளை உடைய பலவினது பிசினை உடைய இடத்தே, இனிய பழங்கள் பாறைகளிடத்தே வீழ்ந்து கிடக்கும். அவற்றைக் கொண்டு உண்ணும் உணவினையும் பெருஞ்சோற்றுத் திரளையும் உண்பர் கானகக் குறவர். அவர் தம் சிறிய குடியில் குழந்தை இன்மையான் வருந்திப் பெற்ற செல்லவமுடையாருடைய மகள் இவள்; ஆதலின் நின்னைப் பிரிதல் ஆற்றாள்; அவளிடத்தினின்றும் நீ பிரிவையாயின் மேகலை அணிந்த அல்குலை உடைய என் தோழியது கவினும் நீங்கும்.

தலைவி நல் கூர்ந்தார் செல்வமகள்; மகப்பேறின்றி வருந்திய குடும்பத்திற்குப் பிறந்த ஒரே செல்ல மகள்; அவளது குடும்பத்து சிறப்பை வளமையைக் கனிந்து கிடக்கும் பலாப் பழத்தின் மூலம் காட்டுகின்றார்.

தலைமக்கள் பல்லாற்றானும் ஒப்புமை உடையர். தலைவியை, வருடை நன்மான் குழவி போலப் பாராட்டிப் பேண வேண்டும் என்று தோழி தலைவனிடத்துக் கூறினாள்; நீ பிரிந்தால் தலைவியின் அழகும் கவினும் பிரியும் என்றாள்.

அயலிலுள்ளார் அலர் தூற்றுதலின் இவள் தம் கண்கள் ஆராய்ந்த தம் நலத்தை இழந்தன; அவ்வளவில் நில்லாதே, பின்னர்க் கண்கள், மீன்கள் நீரினை உண்டு உமிழுமாறு போல, நீரினை உமிழா நின்றன; நீர் விழாத காலத்துக் களவிடத்துக் கூடி, மருவுதல் அறும்படி நீ அருமை செய்து அயர்த்தனை; இதனால் முன்கையிற் கிடந்த வளைகள் நெகிழ்ந்து கழன்றன; அவ்வருத்தத்தை ஏற்றுக் கொள்ளுதலும் பொருந்தும்; அதனால் பெற்றதென்? அக்கண்கள் அதற்கு இயைகின்றன இல்லையே;

ஊரிலுள்ளார் அலர் தூற்றுதலின் இவளது நறிய நுதல் ஒளி ஓடி மறைந்தது; பீர்க்கம் பூவினது அழகைக் கொண்டு, பிறைநுதல் அழகை இழந்து நின்றது; அழகை இழவாத காலத்து, இயற்கைப் புணர்ச்சியின் போது இனிய செய்தனை; பின்னர் இவளைப் பிரிந்து இன்னாதாம்படி, நீ அருமை செய்து அயர்த்தனை; இதனால் இவள் வருத்தம் தெய்வத்தால் வந்ததொரு நடுக்கம் என்று தெய்வத்திற்குப் பரவுதலைப் பூண்டிலர் அதுவும் பொருந்தும்; அதனாற் பெற்றதென்? அந்நறுநுதல் ஆற்றறுறுதல் அதற்கு இயைகின்றது இல்லையே.

தலைவி அழகு கெடும்படி வந்து, நலிவைத் தந்து நடுங்குவதற்குக் காரணமான வருத்தம், கனவினால் சற்றே மறைந்தாலும், இரவெல்லாம் இவளை வருத்தமுறச் செய்தது. இவள் ஆற்றாளாயினள். இயற்கைப் புணர்ச்சிக் கண்

அஞ்சல் என்று கூறினாய். பின்னர், அகன்று, அருளாது துறந்தனை; அதனால் நெஞ்சழிந்து துயர் அட வருந்தினள். இறந்துபடாது, உயிரைப் போக்காமல் நிறுத்துதலும் பொருந்தும்; அதனாற் பெற்றதென்? அக்கனவின் ஆற்றல் அதற்கு இயைகின்றது இல்லையே.

என்று யான் கூறும்படியாக, தீராத காதல் நோயினால் வருந்தி வாடுகின்றாள் என் தோழி; உன்னுடைய மலை இடத்து வறட்சியால் வருந்திய முளைக்கும் பருவத்துச் சிறுதினை, மழையைப் பெற்றதும் அழகு பெற்றாற் போல, இவளது ஆய்நுதற் கவின் நின் அளியைப் பெற அழகு பெறும்; அழகும் பெருகும்.

நெடிய மலைக்கண் உள்ள தோட்டங்கள் பொருந்திய தலைவனின் ஊரிலிருந்து விரைந்து ஓடிவரும் அருவியைக் கண்டாலும் தலைவி கண்கலங்கி அழுகின்றாள்.

காதலன் நாட்டு மலையைக் காண்டலும், அவன் மலையிலிருந்து வரும் அருவியில் திளைத்தலும் பிறவும் காதலிக்கு இன்பமூட்டுவன.

ஆனால், தலைவன் அளவினை விஞ்சிக் களவினை நீட்டித்தலால் உண்டான வெறுப்பு மிகுதியால், அவன் ஊர் அருவியைக் கண்டாலேயே அழுகிறாள்.

**தலைவி தோழிக்குக் கூறியது**

ஒளி பொருந்திய வளையினை உடையாய், ஈதொன்றைக் கேளாய்! தெருவிடத்தே நாம் சிற்றில் இழைத்து உணவு சமைத்து விளையாடும் போது,

மணலாற் செய்த சிற்றிலைக் காலால் சிதைத்தும், கூந்தலிலே சூட்டிய மாலையை அறுத்தும் வரியினை உடைய பந்தை எடுத்துக் கொண்டு ஓடியும் நாம் நோவத்தக்க செயல்களைச் செய்தனன் சிறியனாகிய காவலின்றி வளர்ந்தவன்.

முன்னர் ஒருநாள், அன்னையும் யானும் வீட்டில் இருந்தோம்; அப்பொழுது, இல்லத்தோரே, உண்ணும் நீர் விரும்பி வந்துள்ளேன் எனச் சொல்லி வந்தான்; அன்னையும், சுடரிழாய், பொன்னாற் செய்த கரத்தால் உண்ணுதற்கான நீரை வார்த்து, நீர் உண்ணச் செய்து வருவாய் என்று சொன்னாள். யானும் சிறுபட்டியாகிய அவன் என்று அறியாதே சென்றேன்; நீர் உண்பிக்கச் சென்ற போது அவன் என்னுடைய வளையலணிந்த முன் கையைப் பிடித்து என்னை நலிவித்தனன்; யான் மருண்டு, ‘அன்னாய் இவன் ஒருவன் செய்த ஒரு செயலைப் பாராய் என்றேன்; தாயும் அலறித் துடித்து வந்தனள்; அவன் செய்ததை மறைத்து, யான் உண்ணுநீர் விக்கி வருந்தினன் என்று பொய் கூறினேன். தாயும் அவன் தன் முதுகைப் பலகால் அழித்தழித்துத் தடவினாள்; பின்னர் என்னைத் தன் கடைக்கண்ணால் கொல்வான் போலே பார்த்துத் தன் மனமகிழ்ச்சியைத் தரும் கூட்டத்தை அக்கள்வனாகிய மகன் செய்தான். இது காண் நிகழ்ந்தது என்று தலைவி தோழியிடத்து கூறினாள்.

குறிஞ்சி கலி 51-ம் பாடல்.

தலைவன் கையகப் பட்ட பின்பு என் செய்தோம். ஆயினோம் எனத் தலைவி, தோழியிடத்துக் கூறினாள்; நொதுமலர் திருமணத்தின் பொருட்டு மண முரசு இயம்பினர்; இது கேட்ட தலைவி, தோழிக்கு இவ்வாறு கூட்டம்

நிகழ்ந்தது எனக் கூறினள்; இதனைத் தமரிடத்து அறிவிக்க வேண்டும் என்றும் தலைவனிடத்து நம் வருத்தம் அறியக் கூறுதல் வேண்டும் என்றும் தலைவி கூறினாள்.

**தலைவி தோழிக்குக் கூறியது**

தோழி! மேல்படிந்துள்ள புழுதி நீங்கும்படி பாகனால் கழுவப்பெற்ற யானையைப் போல பெருமழையினால் தாக்கப்பட்ட சருச்சரையையுடைய பெரிய துறுகல்லின் குளிர்ச்சியையுடைய ஒருபுறத்தே நம்முடன் தங்கிய நாடன், நம்மை நீங்கிப் பிரிவுத் துயரைத் தந்தனன். அதனால் குவளை போன்ற நம் கண்களில் பசலை படர்ந்தது. (குறு. 13)

தோழி, தலைவன், என்னைக் களவில் மணந்த காலத்தில் சான்றாவார் ஒருவரும் இலர். தலைவனாகிய கள்வன் ஒருவன் தான் இருந்தனன். அவன், களவுக் காலத்தில் செய்த சூளுறவினின்றும், தப்புவானாயின், யான் யாது செய்ய வல்லேன். ஓடுகின்ற நீரில் செல்லும் ஆரல்மீனின் வருகையை, உண்பதற்காகப் பார்த்திருக்கும், தினையின் அடியைப் போன்ற, சிறிய, பசிய, கால்களையுடைய நாரையும் இருந்தது. (குறு. 25)

காட்டில் உள்ள மயிலானது, பாறையில் ஈன்ற முட்டைகளைக் கருங்குரங்கின் விளையாடும் குட்டிகள், உருட்டிவிளையாடுவதற்கு இடனாகிய குன்ற நாடனின் நட்பு, அவள் பிரிவினால், மை தீட்டப் பெற்ற கண்களின்றும் பெருகும் நீரொடு, என்றும் ஒரே நிலையில், அப்பிரிவை நினைத்து வருந்தாமல் பொறுத்துக் கொள்ளும் வலிமையுடையோர்க்கு எஞ்ஞான்றும் மிகவும் நன்மையுடையதாய் விளங்கும். (குறுந். 38)

தோழி நீ வாழ்வாயாக. புல்லிய வெண்ணிற விழுதுகளைக் கொண்ட, கல்லில் படரும் இற்றி மரத்தின் வேர்கள், மலையிலிருந்து வழிகின்ற அருவியைப் போலத் தோன்றும், இத்தகைய நாட்டின் தலைவனின் குற்றமில்லாத உள்ளத்திலிருந்து வெளிப்பட்ட சொல், நம்மிடம் தூதாக வந்தது. யாமும் நெய் பெய்யப்பட்ட தீ, கிளர்ந்து எழுந்து அதனை ஏற்றுக் கொள்வது போல, அத்தூதினை ஏற்றுக்கொண்டு அவன், நம்மை மணந்த நாளின் தன்மையம் எனத் தூதுவிடுவோம்.

நெஞ்சின் மிக்கது வாய் சோர்ந்து சொல்லாக வெளிப்படும் ஆதலின், தலைவன் தன்பால் உண்மையிலேயே அன்புடையவன் என்பதை அவன் தூதரை கொண்டு உணர்ந்தனள். தூது உரைப்பானைக் கூறாமல், தூது உரையைக் கூறினாள். அதுவே தான் விரும்புவதாகலின். (குறுந். 106)

தோழி! தலைவன் இப்பொழுது வந்துள்ளான் எனக் கூறுதல் உண்மையோ? நீ வாழ்க. முன்பு, மலைப்பக்கத்தில் மைபட்டது போன்ற கரிய முகத்தையுடைய ஆண்குரங்கு, மரக்கொம்பு தன்னுடைய சுமையைத் தாங்கும்படியுள்ளதா என அறிந்து பாயாத தவற்றினால், அக்குரங்கினை ஏற்றுக் கொண்ட மரக்கொம்பு, முறிந்து அக்குரங்குடன் வீழ்ந்தது. இத்தகைய நாட்டைச் சார்ந்த தலைவன், தன்னுடைய குறியிடத்தை வாய்ப்பதாகச் செய்யாத தவற்றின் பொருட்டு, என்னுடைய பருத்த, மெல்லிய தோள்கள் பசலையை அடைந்தன.

முன்பெல்லாம் குன்றின் கண் வாழும் கூகை, தன்னுடைய பெடையைக் கூறியழைத்தாலும், முன்றிலில் உள்ள பலா மரத்தின் பெரிய கிளைகளில் ஆண்குரங்கு தாவி விளையாடினாலும், என் நெஞ்சு அச்சத்தை அடையும். இனி, இக்களவுக் காலத்தில், செல்லுதற்கு அரிய இருளையுடைய

இரவில், மலைச்சாரலில் உள்ள நெடுவழியில் அவருடன் துணையாகச் செல்லுதலை நெடுநாட்களாக ஒழியாது. அது இரங்கத் தக்கது.

என் நெஞ்சு அளிக்கும் இயல்புடையது ஆதலின், அவருடன் களவுக்காலத்தில் செலவு நீங்காததாய் உள்ளது, எனத் தலைவி கூறினாள். பொழுது மறைவதற்கு முன் தலைவியின் நெஞ்சு அஞ்ச வேண்டாததற்கெல்லாம் அஞ்சிற்று. கங்குல் பொழுதில் இடையூறுகள் மிகுந்த மலைச்சாரல் வழியாகத் தலைவன் வரும்போதும், மீண்டு செல்லும் போதும், அவளைக் காத்துச் செல்வதற்காகத் துணையாக உடன் சென்றது. நீண்ட வழியாதலானும் மலைச்சாரலில் புலி, யானை, பாம்பு முதலிய விலங்களின் அச்சத்தாலும், தலைவன் இரவுக் குறியில் வரும் ஏதம் குறித்துத் தலைவி அஞ்சினாள். இரவுக் குறி வாராமை வேண்டுதல் இதன் பயனாகும். (குறுந். 13)

தோழி, செவ்விதாக உயர்ந்து விளங்கும் மலைப் பக்கத்தில் தங்குதலையுடைய வருடைமானின் குட்டி, தன் தாயின் மடிபொழிந்த இனிய பாலை, வயிறு நிறையக் குடித்து, பெரிய மலைப்பக்கத்தில் உள்ள நிழலில் துள்ளி விளையாடும். இத்தகைய நாட்டின் தலைவன், கல்லைக் காட்டினும் வலியவன் என்று நினையாமல், என்னுடைய நெஞ்சம், அவன் திறத்து மெலிவடைவதாயிற்று.

தலைவன் வலியன் ஆதலால் பொருள் பெற்றல்லது திரும்பான் எனவும், தன் நாட்டில் வருடைமானின் அன்போடு இயைந்த வாழ்க்கையைக் கண்டு தன்னை நாடி வருவான் எனவும் தலைவி நினைத்தாள். அவன் கல்லினும் வலியன் என அறியாது மெலியும் தானே அறியாமையுடையவள் எனக் கருதித் தலைவன் திறத்துக் குற்றமின்மை நினைந்தாள்.

வருடையின் கன்று, பாலை நிறையக் குடித்து, மலையின் நிழலில் துயில்வது போலத் தலைவனும், பொருள் மிகுதியாகப் பெற்று தன்னுடன் இல்லறம் நிகழ்த்துவான் எனத் தோழிக்கு உணர்த்தினாள். (குறுந். 187)

தோழி, நாடனொடு, வரைவில் கூட மாட்டாதயான், ஒரு காரணத்தால், உயிரோடு ஒன்றியிராதவளாய் ஆகேன். உயிரோடு ஒன்றியிருப்பேன். குன்றத்தின்கண், தம்முள் மோதிக் கொண்ட யானைகள் மிதித்தலால், நெரிந்த அடிமரத்தையுடைய வேங்கைமரம், குறவர் குலப் பெண்கள், தங்கள் கூந்தலில் பெய்தற் பொருட்டு, அம்மகளிர் ஏறிப் பறித்தல் வேண்டாது, எளிதில் நின்றவாறே கொய்வதற்கு ஏற்பத் தாழ்ந்து மலரும். இத்தகைய நாட்டையுடைய தலைவனொடு பொருந்தேன்.

நொதுமலர் வரைவொடு புகுந்தவழி, தலைவி, தலைவன் செலவு நீட்டித்தலால் ஆற்றாளாயினாள், பொருத களிறு, மிதித்தலால் வேங்கைமரம் சாய்ந்து, மகளிர் ஏறாமலேயே மலர் பறித்தற்கு ஏதுவாயிற்று, மகளிர் வேங்கை மரத்தின் மேல் ஏறிப்பறித்தலும் உண்டு. மகளிர் வேங்கை மலர்களைச் சூடுவதும் உண்டு. (குறுந். 208)

தோழி, அவரால் காம இன்பம் துய்த்த யாம், அவர் பிரிவினால் உண்டாகிய காமநோயைப் பொறுத்துக் கொண்ட போதிலும், குன்றுகளையுடைய நாட்டின் அத்தலைவரைக் கண்ட எம் கண்கள், தமக்கு எம்பாலுள்ள மிக்க உரிமையினால் அழுதன. மேய்த்த கன்றுகளைத் தம்முடைய தாயரிடத்து வழிப்படுத்திய, புல்லிய தலைமையுடைய சிறுவர்கள், ஊர்

மன்றத்தின் கண் வளர்ந்துள்ள வேங்கைமரம், மலர்ந்துள்ள செவ்வியை நோக்கி, அம்மரத்தின் மேல் ஏறாமல், ஒலித்திட்ட மயக்கத்தையுடைய புலி, புலி என்னும் ஆரவாரம், வானத்தைத் தீண்டும் மலைப் பிளவுகளிடையே பட்டு எதிரொலியை உண்டாக்கும்.

கன்றுகளை மேய்த்த சிறுவர்கள், வேங்கையின் மலர்ச்சி கண்டு, புலிபுலி என்று கூறிய ஆரவார ஒலி, ஊர் மக்களிடையே, ஆகொள் வயப்புலியோ என்ற ஓர் அச்சத்தை ஏற்படுத்தியது. (குறுந். 241)

தோழி, ஆணும் பெண்ணுமாய்த் துணையுடன் வாழும் மயில்கள் மகிழ்ந்து கூவுகின்ற, மரங்கள் செறிந்த காட்டின்கண் முகத்தின்கண் நரை மயிரினையுடைய கருங்குரங்கு, தன் குட்டிகளுடன் குளிரால் நடுங்குமாறு, மேகங்கள் பெரிய மழையைப் பொழிந்த மலைச்சாரலையுடைய அத்தலைவரது நாட்டின் கண் உள்ள குன்றத்தைப் பார்த்தேன். அவ்வளவில், ஒளியிழந்து பசலை ஊர்ந்த என் நெற்றி, தன்னுடைய பண்டைய நிலையை அடைந்ததோ? காண்பாயாக.

மயில், துணையொடு மகிழ்ந்து அகவுவதற்குக் காரணமாகிய மழை, கருங்குரங்கு குட்டிகளுடன் குளிரால் நடுங்குவதற்கும் காரணமாயிற்று. களவில் புணர்ச்சி இன்பத்தைத் தருவதாயினும், வரைதல் இல்லையேல் துன்பத்தைத் தருவதே யாம் என்பது, இதனால் உணர்த்தப்பட்டது.

தலைவன் நாட்டுக் குன்றத்தை நோக்கிய அளவில் அவனைக் கண்டாற் போன்ற மகிழ்ச்சி தலைவி உள்ளத்தில் தோன்றுவதாயிற்று. அதனால்

உடல் பூரித்தது. நெற்றியில் இருந்த பசலை நீங்கிற்று. தலைவனைப் பிரிவதற்கு முன் அவன் ஓதியும், நுதலும் நீவித் தலையளி செய்தபோது பொலிவு பெற்றாள். (குறுந். 249)

ஆரவாரத்தை உடைய மழை பொருந்துவதால், பெருகிவரும் காட்டாற்றின் இடிந்த கரையின் கண், தழைத்த நீண்ட தோகை அசைய நடந்து வந்து ஆடுகின்ற மயில், தன் இனத்தைக் கூவி நட்பு, அவன் பிரிவினால் நாமே பசந்த இடத்தும், அப்பசலையைப் பொறுத்துக் கொள்வதில்லை.

மயில், காட்டாற்றின் கரையில் இருந்து, தன் இனத்தைக் கூவி அழைப்பதைக் காணும் தலைவன், தன் பொருட்டு விரைவில் வருவான் எனத் தலைவி ஆற்றியிருந்தனள். தலைவன் பிரிவு எண்ணித் தன்மேனி பசந்த வழியும், அவன் தன்னை நெஞ்சத்தால் பிரியாமையின், அவ்வுறவு, தன்னுடைய பசலைக்கு உடன்படாது எனவும், அதனைப் போக்கவே முயலும் எனவும் தலைவி கூறினாள். தலைவியின் மேனி, பசலை பாய்ந்தமையைத் தலைவன் காணின், அது தன்னால் நேர்ந்தது எனப் பெரிதும் துயருறுவான் என நினைத்தனள். கேண்மையுடையார், பிறர் துயர் கண்டு பிரிவு கொள்வர். ஆதலின், தலைவனும் தன்னை விரைவில் வந்து மணம் முடிப்பான் எனக்கருதினாள். மேனி பசந்தாலும், கேண்மை மெலிவின்றி, உறுதியாகவே உள்ளது எனக் கூறி, தான் ஆற்றியுள்ளமையைத் தலைவி, தோழிக்கு உணர்த்தினாள். (குறுந். 264)

**தலைவனும் தலைவியும் உறழ்ந்து கூறுதல்**

கலித்தொகையில், ஏஎ, இவன் ஒருவன், நாணம் இல்லாதவன்; தன்னோடும் சேரமாட்டேன் என்று கூறிப் புணர்ச்சிக் குறிப்பின்றி நிற்பதையும் தான் புணர்ச்சிக் குறிப்புடையனாய் வலிந்து கைப்பற்றித் தழுவினான்; எனத் தலைவி கூறினாள்.

**தலைவன் பதிலும் தலைவி வேட்கை மறுத்து உரைத்தலும்**

தழுவுதலும், தழுவாது விடுதலும் எல்லாம் நீ அறிவாய்; நான் யாதொன்றும் அறியாதவன்; பூக்கள் நெருங்கின மெல்லிய கொத்து நீங்காத கொடி போன்றவளே, நின்மேனி புல்லுதற்கு இனிதாய் இருக்கையினாலே உன்னை நான் புல்லினேன் என்றான்.

ஏடா? தமக்கு இனிதாய் இருக்கின்றது என்று கருதிப் பிறருக்கு இன்னாதவற்றை வலிதிற் செய்வது இன்பத்தைத் தருமோ என தலைவி கேட்டாள்.

**மகளிரை வலிதிற் புணர்தலும் அறநூல் வழக்கு, என தலைவன் மொழிதல்**

சுடர்த்தொடீ, வலிதிற் புணர்ந்ததை ஏன் நினைக்கின்றாய்; வருத்தத்தை விட்டு விடு; உன் பெரிய அறிவைப் போற்றாதே கைவிடு; நான் கூறுவனவற்றைப் போற்றிக்கொள்; நீர் உண்போர், நீர் வேட்கையுடைய தமக்கு இனிது என்று தானே நீர் உண்பர்; அந்நீர்க்கு இனிதாய் இருக்கும் என்றா உண்கின்றனர்? அப்படி உண்ணமாட்டார்கள்.

ஐந்து வாயினை உடைய பாம்பினது பார்வையிலே அகப்பட்டு, வருத்தம் வந்து மேற்செய்யும் காரியம் அறியாது நின்றேன்; இனியாது செய்வேன் சொல் என நெஞ்சொடு சினந்து நின்றான்; மாசற்ற முழுமதிபோல விளங்கும் முகத்தினை உடைய மகளிரை வலிதிற் பற்றிப் புணர்தலும்அறத்தொடு பட்டது மணநூல் கண்டது எனத் துணிந்து கூறினான்.

### புணர்ச்சிக்கு உடம்பட்டு, தலைவி நெஞ்சொடு கூறுதல்

மணநூலும் உயர்ந்த மணத்தைக் கூற, உலக ஒழுக்கமும் அத்தன்மையதாய் இருக்கும். அவனும் நான் மறுத்துக் கூறியும் கேளாது, திறனின்றி நலியும்; அவையேயன்றி, முற்பிறப்பில் நாம் வேறல்லேம், உறவுடையோம் என்றொரு நிலை அவன் மனத்திடத்து உண்டாகி உள்ளது. நெஞ்சே, அவனோடு உறவாட நமக்கு ஏதேனும் மாறுபாடு உண்டோ? எனப்புணர்ச்சிக்கு உடன்பட்டுக் கூறினாள். (கலித். 62)

இளம்பூரணர் இப்பாடலைக் கைக்கிளை என்பர்.

### இலக்கிய மேற்கோள்

1. பிறர்க்கின்னா செய்வது

   ”பிறர்க்கின்னா முற்பகல் செய்யின்” (குறள். 319)

2. ஐவாய் அரவின் இடைப்பட்டு - ஐவாய் அரவுற்று தன்ன இன்னா இடர் ஆற்றி என் போல் எவ்வாறு இருந்தீர்.

   “மையின் மதியின் விளங்குமுகத்தாரை

   அவிர் மதிக்கப் போல மறுவுண்டோ மாதர்முகத்து” (குறள். 1117)

3. பண்டு நாம் வேறல்லம் என்பதொன்று உண்டால்
நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉம்
மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம்
பண்டும் பண்டும் பல்பிறப்பு உளவாற்
கண்ட பிறவியே அல்ல காரிகை" (மணி. 21 : 29-32)

**தலைவன் தலைவியைப் புகழ்ந்து கூறுதல்**

நினது அழகிய முகம் மதியை ஒத்துளது; மணிகள் விளங்கும் நின் பின்னின கூந்தல், அம்முகத்துக்கு ஒப்பாகிய மதியை மிகவும் பொருந்தும் கருமையுடைய மழையை ஒத்திருந்தது; அப்பின்னின கூந்தலிடத்தே நீ சூடியிருக்கும் பூவோ, நுண்ணிய நூலால் கட்டப்பட்டு தேனால் ஈரமான இதழைக் கொண்டிருந்தது; கரும்பாம்பிடத்தே கிடந்து அதன் கரிய நிறத்தோடு மாறுபடுகின்ற ஆரல் மீனினது அழகை ஒப்ப, பின்னிய கூந்தலிலே கட்டிய பூ திகழ்ந்தது; கண்டவர்க்கு அரிய வருத்தத்தைச் செய்து போகின்ற பரந்த தழைத்த கூந்தலை உடையாய்! என்னை எள்ளும் நிலைமையை நீ கைவிட்டு, யான் கூறுகின்றதனை ஆராய்ந்து பார்; எமக்குப் பண்டு புதைக்கப்பட்டுக் கிடைத்த பெரும் பொன் புதையலைப் போன்றவள் நீ எனத் தலைவன் தலைவியைப் புகழ்ந்தான்.

வண்டுகள் ஒலிக்கும் பூவாற் செய்த பூங்கோதையுடன் விளங்கும் அழகினை உடைய நல்லாய்! நீ உழுதாய்; களவொழுக்கத்திலும் திருத்திய இழையை உடைய நின் மென்தோளில் யான் என் கைப்பட எழுதிய கரும்பின்

தோற்றப் பொலிவெல்லாம், நின் முலைகள் இடைவிடாது புணர்ந்ததனால் உண்டான பயனல்லவோ? மாசற்ற, ஒளியுடைய முகத்திற்கு ஒப்பச் சிவப்பாகிக் குவளையொடு மலர்ந்த நின் நீல விழிகளும் என்னைத் தழுவியதன் பயனன்றோ? முல்லை முகையொடு மாறுபாடு கொள்ளும் எயிற்றினை உடையாய், இத்தோற்றப் பொலிவுகள் அன்றி வேறே தோற்றம் பொலிவு உண்டாக நீ புணர்வாய் என்றான்.

எம்மைப் பெரிதும் வருத்தியவள் மலையை வாழிடமாகக் கொண்ட குறவனின் அன்புக்குரிய இளமகள். அவள் ஊர் மன்றத்திடத்தே நிற்கிற வேங்கை மரத்தின் சில மலர்களைப் பறித்து, அவற்றைத் தூவி, மலையை உறைவிடமாகக் கொண்டவளும், தம் குடித்தெய்வமும் ஆன முருகவேளுக்குத் தேனாகிய பலியைக் கொடுத்து, வழிபட்டமையால் நறுமணமும் ஈரமும் கொண்ட கையையும், மலர்ந்த காந்தள் மலரின் மணம் கமழும் உடம்பையும், நீர் சொரியும் கண்களையும் உடையவளாவாள்.

## தலைவியின் அழகு

சுணங்கு அணிந்த அழகிய முலையினையும், ஒளிவீசும் பிறை போன்ற நறிய நுதலினையும், நறிய மணங்கமழும் மாலை சூட்டி, மழை மேகம் போன்று விளங்கும் கரிய கூந்தலையும், நுண்மையான அழகினையும், நோக்கினார் உளதோ இலையோ என நுழைந்து பார்க்கும் மிக நுண்ணிய, பிறர்க்கு அறியாமையைக் கொடுக்கும் இடையினையும், வளையல் அணிந்த

வளைந்த முன்கையினையும், ஒள்ளிய தித்தியாகிய வரி நிறைந்த அல்குலையும் உடையவள் தலைவி.

### இலக்கிய மேற்கோள்

1. 'அணங்கணி வனமுலை' - 'சுணங்கணி யாகத்து
   ஈர்க்கிடை போகா ஏரிள வனமுலை' (பொருந. 35)
2. 'மாரிவீழிருங் கூந்தல்' - 'மாரி வீழிருங் கூந்தல்' (கலி. 14)

குறிஞ்சிக்கலி 54-ம் பாடலில் - கொடிப்பூவும் கோட்டுப் பூவும் நீர் இன்றியே அழகு பெற்றன போல, பொடியுடைய நெருப்பிலே இட்டுச் செய்த, பூவாத பூக்களைக் கொண்ட, பொன்னாலாகிய கோதையினையும்; தொடி செறிந்த கட்டு வடங்களை அணிந்த அழகிய முன்கையினையும் அணைபோலும் மெல்லிய தோளையும் உடையவள் தலைவி.

மூங்கில் என்னும் படி திரண்ட தோள்களையும் ஐந்து வகையாகப் பிரித்துப் பின்னிய மணங்கமழும் கூந்தலினையும், மான் நோக்கினை வென்ற மடப்பத்தை உடைய நோக்கினையும், மயில் போன்ற சாயலினையும் உடையாய்! அழகிய சிலம்பின் உள்ளிடு பரல்கள் ஒலிக்க, விளங்குகின்ற ஒளியினை உடைய அணிகள் ஒளிவீச, நுடக்கத்தால் கொடியென, விளக்கத்தான் மின் என கட்புலனாகாமையின் வருத்தம் என, நீ தளர்ந்து அசைந்து வருகுவை;

கோதுதல் உற்ற கடை குழன்ற கூந்தல்; வளைந்த முன்கை; நெடிய மெல்லியத் தோள்; பெரிய அழகுடைய நீலமலர் போன்ற மையுண்ட கண்; மான் பிணையினது அழகுடைய மருண்டு நோக்கும் பார்வை; மழையைப்

பெற்ற இளந்தளிரைப் போன்ற நிறம்; ஒளிர்கின்ற அழகிய நெற்றி; விழுந்தெழுந்த கூரிய எயிறு; விழுந்தெழாத முகை போலும் வெள்ளிய பல்; கொடி போன்ற நுண்ணிய இடை; இத்துணையும் அமைந்தவளே தலைவி.

முறுக்கு அவிழ்ந்து, நீருக்கு மேலே ஓங்கின பசிய இலை சூழ்ந்த, தாமரை மொட்டுக்களைப் போன்று வடிவமைத்து, முத்தை அழுத்திச் செய்த திரட்சியுடைய, அழகிய, விளங்குகின்ற தொடியையும், பக்க மலைச்சாரல் எல்லாம் அலர்ந்து மணம் நாறும் காந்தள் மலர் போன்ற விரல்களையும், கூரிய அழகுடைத்தாகிய குளிர்ந்த எழுச்சி உடைத்தாகிய வடிவினை உடைய துடுப்புப் போலத் திரண்ட நீண்ட இணை ஒத்த மெல்லிய முன் கைகளையும் உடையவள் தலைவி.

**தலைவனின் தன்மை**

தோழியை நோக்கி, உலகத்தின் கண் நிறைந்த அழகுடைய மகளிரைக் கண்டவர்க்குக் கதுமென உள் நின்ற காமநோய் மிகுமானால், உயிர் போய்விடும்; அத்துயரைச் செய்தல் அம்மகளிர்க்குப் பெண்தன்மை என்று கூறிக் கண்ணும் உருகநின்று நடுங்கினன்; நடுங்கி, இவன் ஒருத்தன், தன்னிடமுள்ள வொரு களிறு போன்ற தன்மை கெட்டு, மனமுடைந்து, உள்ளே உருகுவான் போலே இரா நின்றான்; இவன் ஈண்டு வந்து என்ன காரியம் செய்தான்.

தலைவியின் பூண் தவழும் மார்பைத் தழுவுதலை விரும்பி இரவிலும் துயில் கொள்ளானாய்க் காத்திருந்தான்.

தலைவன் கூற்றை அப்படியே தோழி கூறியதாகக் கொள்ள வேண்டும். இவற்றைத் தோழி கூறிய சொற்களாக நச்சர் கொண்டது பொருத்தமின்று என்பர் பெருமழைப்புலவர்.

மூண்டு வரும் போரிலே பகைவரைக் கொன்ற களிறு போன்றவன் தலைவன்.

## இலக்கிய மேற்கோள்

1. "யான் நோக்குங்காலை நிலனோக்கும் நோக்காக்கால்
   தான் நோக்கிமெல்ல நகும்" (குறள். 1094)
2. "மண்டமர் அட்ட களிறன்னான் - மண்டமர்
   மருக்கும் களிறனையார்க்குப் பெண்டிர் கூறும்
   பேரறிவுண்டோ" (மணி. 18 : 140)
3. "பல்லார் நக்கு எள்ளப்படும் மடன்மா ஏறி - மாவென
   மடலும் ஊர்ப், பூவெனக் குவிமுகிழ் எருக்கம்
   கண்ணியும் சூடுப, மறுகின் ஆர்க்கவும் படுப
   பிறிதுமாகுப காமஞ்காழ் கொளினே" (குறுந். 17)

தலைவியிடத்து வந்து ஏதோ ஒரு காரியத்தை இரந்து வேண்டுபவனைப் போலே, தன்னை மிகவும் எளிமை உடையவன் போலக் காட்டிச் சில சொல்லா நிற்பன. குறையிரந்து நிற்பினும் உலகத்தையே காப்பான் போல்வதோர் வலிமையும் உடையன்; மெய்ப்பொருள் வல்லாரை வழிபட்டு நின்று அப்பொருளை அறிந்தவன் போலத் தோன்றுவன்; நல்லவர்களிடம்

தோன்றும் மன அடக்கமும் உடையன்; வறியோர்களின் வறுமையைக் கொடையினால் போக்க வல்லவன் போல வளமையும் உடையவன்; அத்தன்மையை உடையான் ஒரு தலைவன்.

நறிய நுதலினை உடையாள், அவன் நின்னை இன்றி யான் உயிர் வாழேன் என்று கூறாநிற்பன்.

யான் வருந்துகின்றேன்; என் வருத்தத்தை நீ அறியாயோ என்று அவன் கூறாநிற்பன்.

நீ அருளாதொழியின் யான் உயிர் வாழேன் என்பான்.

பாம்பினது படத்திலே தோன்றும் பொறி போன்ற புள்ளிகளையும், பகைவரை வருத்தும் ஆற்றலினையும் உடைய வில்லின் மேல் வைத்த கையனாக விளங்குகின்றான், தலைவன்.

காற்றினும் விரைந்து செல்லும் மிக்க தேரினையும் களிற்றையும், நின்பால் வந்த புலவோர்க்கு, மழையினும் அருள் சிறந்து மகிழ்வுடன் வழங்குவை, வழங்குவதில் கை ஒழியாதவன். சுரப்புன்னை வளர்ந்துள்ள மலைச் சாரலில் திரியும் வருடையாகிய நல்ல மானினது குட்டியை வளர்ப்பாரைப் போல, பிரியாது வாழும் தன்மையுடையவன் தலைவன்.

தலைவன் வீரப்பண்பினன் மட்டும் அல்லன், புலவோர்க்கு வாரி வழங்கும் வள்ளலும் ஆவான்.

தாமரையினாலாகிய கண்ணியைச் சூடியுள்ளாய்; குளிர்ந்த மணம் வீசும் சந்தனத்தைப் பூசியுள்ளாய்; ஒத்த இதழாற் கட்டின கோதையை

உடையாள் செய்த குறியிடத்தே நீவந்தனை; நீ வருங்கால் மணம் கமழும் மலைக்கண்ணே நின்று, தாங்கள் தரும் பலியை ஏற்றுக்கொள்ளும் அணங்குதானோ நீ என்று கருதிச் சிறு குடியில் உள்ளோர் அஞ்சுவர்.

பகற்காலத்தே நீராடுதற்கேற்ற ஈரத்தினால் தண்ணிதாகிய ஆடையைச் சூடினை; இராக்காலத்தே புணர்ச்சிக் கேற்றன அணிபெற அணிந்து வரும் இயல்பினை உடையை; மயிர்கள் கன்னங்களிலே அழகாகக் கிடந்து புரளும் வள் செய்த இரவுக் குறியிடத்தே நீ வந்தனை; நீ வருங்கால், மரக்கிளைகள் தழைகளின் அசைவுகால், யானைதான் வந்ததோ எனத் தினைப்புனம் காத்திருப்போர், ஒளிவிளங்குகின்ற தீப்பந்தங்களுடன், கல்லெறியும் கவணையும், வில்லையும் உடையராய் ஆர்ப்பரிப்பர்.

ஆரம் சூடிய மார்பினை உடையை; தலைமை உடையை, அருளுடையை; மெல்லிதாய் அகன்ற அல்குலை உடையாள் செய்த குறியிடத்தே வந்தனை; நீ வருங்கால், நின்னைக் கண்டு விலங்கு முதலிய அஞ்சி ஓட, அவ்வோசையாலே மிளகு வளர்ந்த மலையிடத்தே உலாவுகின்ற புலிதான் வந்து விட்டதோ என்று செருக்குப் பொருந்தின ஊரார் ஓர்ந்து நிற்பார்கள்.

பலரும் பாராட்டும் சிறந்த அறிவினை உடையவளே, ஊரார் வேறாகக் கருதாராய், மெய்யென்று உணர்வராயின், களவொழுக்கம் அறிந்தார் என்று இவள் உயிர் வாழ்ந்திருக்க மாட்டாள்; இவளை இழந்து யானும் உயிர் வாழேன்; அதனால், மலர்கள் அலர்கின்ற விடியற் காலத்தே வந்து, நின் காரியத்தினைப் பலருக்கும் கூறி, இவளை மணந்து கொள்ளுதலை விரும்பா

நின்றேன். வேண்டினேன்; புதியவனைப் போல நீ வரும் காட்சியினையும், திருமணக் கோலத்தில் நாணால் இவள் ஒடுங்கி இருக்கும் காட்சியினையும் யான் காண்பேன் ஆகுவள், என்றாள் தோழி.

**குறிஞ்சிக்கலியில் தலைவன் இயல்பு**

வறுமையால் வாடியோர் வந்து தன் இல்லாமையை அவனிடம் கூறினால் அவர் தம் இல்லாமையைப் போக்கி அவரை நிறைவுடையவராக ஆக்குவன்; அங்ஙனம் நிறைத்தல் ஆற்றாதபொழுது தன் உடலையே துறக்கும் இயல்புடையவன் அவன்; அவனது இந்த மலையில் கொடிய கண்களை உடைய புலியின் பாதம் போல, வாழையினது வளைந்த காய்குலைகள் தோறும் தொங்கும்.

**தலைவன் பண்பு**

'பிறர் குற்றம் கூறுதல் தேற்றாதோன்' 'ஆற்றாக்கால் தன் மெய் அறப்பான்' என்று தலைவனது பண்புகள் கூறப்படுகிறது.

**காதலியர் இயல்பு**

அடுக்காக உள்ள மலைகளையுடைய அவ்விடத்தில் மிளகுக் கொடியில் வளர்ந்துள்ள தளிர்களை அருந்தக் குரங்குகள் ஒருங்கு கூடித் தங்கியுள்ள பெரிய மலைநாட்டின் தலைவன், புணர்ந்துழியும் பிரிந்துழியும் ஒத்து இனிமையுடையவன் ஆவன். ஆதலால், எம்மோடு ஒப்புமையுடைய

துன்பத்திலும் துன்பம் இல்லாது, இன்பத்தில் மட்டும் ஒப்பதாய் இனிதாக விளங்கும் தேவர் உலகம் இனிதாகுமோ?

தேவர் உலகம், துன்பமில்லாது இன்பமே உடையதாகக் கூறப்படுவது, தலைவியோடு கூடி வாழும் இல்லற வாழ்க்கை இன்பமும் துன்பமும் ஒருங்கே உடையது. இவ்வுலக வாழ்க்கையில் தலைவனோடு இன்பத்தில் இன்பம் நுகர்கலேயன்றித் துன்பத்திலும் பங்கேற்பவளாய்த் தலைவி விளங்குவாள்; ஆனால் தேவர் உலகில், துன்பம் இல்லாமையால், இன்பத்தில் மட்டும் கூடி உறையும் நிலை ஏற்படும். தலைவனோடு கூடி வாழும் வாழ்க்கை, அவள் பிரிவினும், அவன் பிரிவினும். அவன் நினைவினால் வாழ்ந்து கொண்டிருந்தலால், துன்பமாயினும் இன்பமாகவே உள்ளது. பிரிவுத் துயரம் இருவர்க்கும் ஒப்ப இருத்தலால், தலைவன் தன்மாட்டு அன்பிலனாய் எங்ஙனம் இருத்தல் கூடும் என்றாள்.

குரங்குகள், இனிய கனியை உண்ணும் சமையம் தம் கிளையுடன் ஒருங்கு கூடி இருத்தல் போல, இன்னாதகாரமுடைய மிளகின் தளிர்களை உண்ணும் போதும் கிளையுடன் ஒருங்கு கூடி இருக்கும். தலைவி சிறு சோறாயினும், பெருஞ்சோறாயினும், அவனோடு கூடி உண்டலே தனக்கு இன்பம் தருவது எனத் துணிந்தனள். (குறுந்தொகை. 288)

தோழி, இது கேட்பாயாக மாலையில் அவர் மலையில் மழை பெய்தலான், மணம் கமழ்கின்ற யாற்றில் விடியற்காலத்து வந்த முழுக் கிழங்குடன் கூடிய காந்தளை, மெல்லிய இலைகள் குழையும்படி மார்பால்

அணைத்தலையும், மனையின் கண் கொண்டு வந்து நட்டுவளர்த்தலையும் விலக்காதவள் ஆதலால் நம் தாய்க்கு எல்லாப் பேற்றினும் உயர்ந்த, நிலைத்த உலகமான வீடு பேறும் சிறிது கைம்மாறாக அமையும்.

தன்னுடைய காதலன் நாட்டு மலையிலிருந்து ஒழுகிய ஆற்று வெள்ளத்தில் அடித்து வரப்பட்ட காந்தள் கிழங்கு, போற்றி நடுவதற்கு ஏற்றவாறு, வேருடன் இருந்தது. இயற்கைப் புணர்ச்சிக் கண் முதன் முதலில் தலைவன் தலைவிக்குக் காந்தள் பூவினைத் தந்தமையால், அவள் அதன் மீது அன்பு பாராட்டுவாளாயினள். இச்செயல் பூத்தரு புணர்ச்சி என்று கூறப்பெறும். காந்தளைத் தலைவி முயங்கியமையும். இல்லில் நட்டமையும், தலைவன் வரைவு மலிந்தமைக்குப் பின்னர் ஆதலால் தலைவியின் செயல்களுக்கு அவளுடையத் தாய் மறுப்புத் தெரிவித்திலள், உடன்பட்டனள். தலைவியின் செயல்கள் யாவற்றினும் தவறுகண்டு கடியும் அன்னை தலைவன் வரைவு ஏற்றுக் கொண்டமையால், அவள் செயல்களைத் தடுத்திலள். தம் தலைவரோடு தொடர்புடைய பொருள்களைக் கண்டவழி உவத்தலும், நுகர்தலும், பாராட்டுதலும் காதலியர் இயல்புகளாகும். (குறுந். 361)

**உடன் போக்கு நிகழ்ந்தமை**

தலைவனும் தலைவியும் உடன் போயினர். தலைவன் தன்னூரின் முறைப்படி அவளை மணச்சடங்கு இயற்றி மணந்து கொண்டு திரும்பினான். தோழி அவனை எதிர்பட்ட போது, தான் தலைவியை மணந்து கொண்ட

செய்தியைச் சொல்லி, இச்செய்தியைத் தலைவியின் உறவினரிடம் தெரிவிக்குமாறு வேண்டினபோது, தோழி அவனுக்குச் சொல்வதாக இச்செய்யுள் அமைந்துள்ளது. (ஐங்.குரக். 280)

**நற்றிணையில் உள்ளுறை**

“உடும்பு கொலீஇ, வரி நுணல் அகழ்ந்து,
நெடுங்கோட்டுப் புறத்து ஈயல் கொண்டி,
எல்லு முயல் எறிந்த வேட்டுவன் சுவல
பல் வேறு பண்டத் தொடை மறந்து, இல்லத்து,
இரு மடைக் கள்ளின் இன் களி செருக்கும்
வன் புலக் காட்டு நாட்டதுவே” (நற். 59, முல்லைத்திணை)

உடும்பு முதலியவற்றை வேட்டுவன் கொணர்ந்து, வீட்டின் கண்ணே வைத்த மனநிறைவால் கள்ளுண்டு செருக்கி, மயங்கிக் கிடத்தல் தலைவன் பொருள் பெரிதும் ஈட்டி வந்து அந்நிறைவோடு தலைவியோடு இன்பம் துய்த்துக் காமக் களிப்பெய்துவான் என்பதை உள்ளுறுத்தி நின்றது.

2. “புலியொடு பொருத புண் கூர் யானை
நற் கோடு நயந்த அன்பு இல் கானவர்
விற் சுழிப்பட்ட நாமப் பூசல்
உருமிடைக் கடிஇடி கரையும்
பெருமலை நாடனை ‘வரூஉம்’ என்றோளே” (நற். 65)

புலியுடன் போரிட்டதால் புண்மிக்க யானை மீது வேடர் அம்பெய்தினர் என்றது காமநோய் பெருகுதலால் வருந்திய தலைவியை ஏதிலாட்டியர் அவளுயிர்க்கு ஊறு விளையும் வண்ணம் அலர்மொழி கூறினர் என்பதை உள்ளுறுத்திற்று. அம்பு பட்ட யானை பூசலிடுவதால் அவ்வோசை மலையிற் சென்று மோதும் என்றது அலரைப் பொறுத்திராது தலைவி வருந்திட அவ்வருத்தம் தலைவனும் உணர்ந்தான் என்பதை உணர்த்திற்று. தலைவனும் தலைவியின் நிலை அறிந்தமையால் விரைந்து வருவான் என்பது குறிப்பாகும்.

3. “இசைபட வாழ்பவர் செல்வம் போலக்
காண் தொறும் பொலியும், கதழ்வாய் வேழம்,
இருங் கேழ் வயப் புலி வெரீஇ அயலது
கருங் கால் வேங்கை ஊறுபட மறலி,
பெருஞ் சினந் தணியும் குன்ற நாடன்
நனி பெரிது இனியன் ஆயினும், துனி படர்ந்து
ஊடல் உறுவேன் - தோழி!” (நற். 217)

ஆண்யானை, தன்னிடம் புலி அஞ்சி ஓடியதால், தன் சினத்தை அயலிலுள்ள வேங்கை மரத்தில் மோதித் தணித்துக் கொள்ளும் என்றது, தலைவி கொண்ட புலவிக்குத் தலைவன் அஞ்சி அகலுதலாலே அவன் கொண்ட பரத்தமையை இகழ்ந்து கூறிச் சினம் தணிவள் என்பதனை உள்ளுறுத்தியது.

4. “வாழை ஓங்கிய வழை அமை சிலம்பில்,
துஞ்சு பிடி மருங்கின் மஞ்சுபட, காணாது,

பெருங் களிறு பிளிறும் சோலை அவர்

சேண் நெடுங் குன்றம் காணிய நீயே? (நற். 222)

மேகம் பிடி யானையை மறைப்பதால் தன் துணையைக் காணாது களிறு பிளிறும் என்றது, தலைவி, இற்செறிப்பில் காவலுட்பட்டதால் தலைவன் குறியிடத்தில் காணாது வருந்துவான் என்பதனை உள்ளுறுத்தி நிற்கும்.

5. "நீர் பெயர்ந்து மாறிய செறி சேற்று அள்ளல்

நெய்த் தலைக் கொழு மீன் அருந்த, இனக்குருகு

குப்பை வெண் மணல் ஏறி, அரைசர்

ஒண் படைத் தொகுதியின் இலங்கித் தோன்றும்

தண் பெரும் பௌவ நீர்த் துறைவற்கு, நீயும்,

கண்டாங்கு உரையாய்; கொண்மோ - பாண!" (நற். 291 (நெய்தல்)

குருகுகள் கூட்டமாக இருத்தல் போலத் தலைவனிடம் பயன்கொள்ள வேண்டிப் பாணர் விறலியர் கூட்டமாக உண்மை உள்ளுறுத்துப் பெற்றது. குருகுகள் கூட்டமாக இருப்பினும் படையாகாவாறு நீவிரும் வாயில்கள் ஆக மாட்டீர் என்றாள்.

குருகு, நாரை ஆகியன சேற்றிடத்து மீன் தேர்ந்து கொள்ளலை "நடுங்களுர் அள்ளல், கவிரிதழன்ன தூவிச் செவ்வாய், இரைதேர் நாரை" (குறுந். 103 : 1-3) என்பதால் அறியலாம். கண்டாங்கு உரை என்றது "காமம் செப்பாது கண்டது மொழிமோ" (குறுந். 2 : 2) என்றதால் அறியலாம்.

6. “. . . . . . . . . . . . . வாழைக்

கொழு மடல் அகல் இலைத் தளி தலைக் கலாவும்,

பெருமலை நாடன் கேண்மை நமக்கே” (நற். 309)

நீர் வாழை மடலில் தங்கிக் கலக்கும் என்றது தலைவனின் உள்ளத்தில் தலைவன் எப்போதும் கலந்து தங்கியிருப்பான் என்பது உணர்த்தலாகும்.

7. “பிணர்ச் சுவற் பன்றி தோல்முலைப் பிணவொடு

கணைக் கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்

கல் அதர் அரும் புழை அல்கி, கானவன்,

வில்லின் தந்த வெண் கோட்டு ஏற்றை,

புனை இருங் கதுப்பின் மனையோள் கெண்டி,

குடி முறை பகுக்கும் நெடு மலை நாட!” (நற். 336)

தினையைத் தின்ற பன்றியைக் கானவன் அம்பினால் கொன்று, கொணர்ந்து தர, அவன் மனையோள் குடிமுறை பகுக்கும் என்றது, தலைவன் தலைவியை மணந்து இல்லறம் நிகழ்த்துகையில், பகைப்புலம் சென்று அடங்காத பகைவரை வென்று பொருளீட்டித் தலைவியிடம் தர அவளும் தெய்வம், விருந்து, சுற்றம் என முறையே பகிர்ந்து தந்தின்புறுமாறு செய்தல் வேண்டும் என்தனை உள்ளுறுத்தியது.

8. “கல் கெழு குறவர் காதல் மடமகள்

கரு விரல் மந்திக்கு வரு விருந்து அயரும்” (நற். 353)

குறவர் மடமகள் பலாச்சுளை கொண்டு குரங்கிற்கு விருந்தயரும் என்றது தலைவன் வரைதல் வேட்கையாய் வரின் தமர் உன்னை ஏற்பர் என்பதை உணர்த்தியது.

9. "சிலம்பின் மேய்ந்த சிறு கோட்டு சேதா
அலங்கு குலைக் காந்தள் தீண்டி, தாது உக,
கன்று தாய் மருளும் குன்ற நாடன்" (நற். 359)

தாது உகப் பெற்ற கன்று மருளும் என்றது, தலைவி இத்தழையுடை கொணரக் கண்டு நாணம் மிக மயங்கினாள்.

மகளிர் தழையுடை பேணல் "அம்பகை நெறித்தழை அணி பெறத் தைஇ" (நற். 96 : 8) என்பதால் அறியலாம்.

10. "கோழிலை வாழைக் கோள் முதிர் பெருங்குலை
ஊழுறு தீம் கனி, உண்ணுநர்த் தடுத்த
சாரற் பலவின் சுளையொடு, ஊழ்படு
பாறை நெடுஞ் சுனை, விளைந்த தேறல்
அறியாது உண்ட கடுவன் அயலது
கறி வளர் சாந்தம் ஏறல் செல்லாது,
நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும்
குறியா இன்பம், எளிதின், நின் மலைப்
பல்வேறு விலங்கும், எய்தும் நாட!" (அக. களிற். 2)

குரங்கு தேனை அறியாதே உண்டு தன் தொழிலாகிய மரம் ஏறுதலும் செய்யாது வேறிடத்திற்குச் செல்லவுமாட்டாது அருகிருந்த சந்தன மரத்தின் நிழலில் மலர்பரப்பில் உறங்கினாற் போல, நீயும் இக்களவொழுக்கமாகிய இன்பம் நுகர்ந்து நின் தொழிலாகிய அறஞ் செய்தலையும் விடுத்து, இக்களவினை நீக்கித் தலைவியை மணக்கவுமாட்டாது இக்கள வொழுக்கமாகிய இன்பத்தில் ஊறித் திளைத்து மயங்கிக் கிடந்தாய் என்பதாகும்.

11. "குறவர் ஊன்றிய குரம்பை புதைய,
வேங்கை தாஅய தேம் பாய் தோற்றம்
புலி செத்த, வெரீஇய புகர்முக வேழம்,
மழை படு சிலம்பில் கழைபட, பெயரும்
நல் வரை நாட!" (அகம். 12)

யானையானது வெருவத் தகாத குரம்பையை வெருவத்தக்க புலியென்று கருதித் தனக்கு உணவாகிய கழை முறியப் பாய்ந்தார் போல வெருவத்தகாத எங்கள் தமரை வெருவி வரைய முயலாது திரியலே, நாங்கள் இறந்து படும்படியாயிற்று என்பது இதன் உள்ளுறை என்பார் பழைய உரையாசிரியர்.

12. "அடுபுலி வழங்கும் ஆர்இருள் நடுநாள்
தனியை வருதல் அதனினும் அஞ்சுதும்,
என்ஆ குவள்கொல் தானே? பல்நாள்

புணர்குறி செய்த புலர்குரல் ஏனல்

கிளிகடி பாடலும் ஒழிந்தனள்;

அளியள் தான்நின் அளிஅலது இலளே!" (அகம். 118)

அடு புலியே ஆனாலும் யானையைக் கொள்ளும் முயற்சியில் பிழைத்து, அதனை எங்கும் இயங்கவிடாது ஓரிடத்தே இருக்கும்படி செய்தது போன்று, நீயும் அறிவாற்றல் உடையவன் ஆயினும் தலைவியை மணந்து கொள்ளும் முறையில் பிழைத்தமையால் அவனை எங்குமே செல்ல விடாமல் இற்செறிப்புக்கு உள்ளாக்கினாள் என்பது இப்பாடலில் அமைந்துள்ள உள்ளுறை ஆகும்.

13. "வேட்டம் போகிய குறவன் காட்ட

குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர

முளவுமாத் தொலைச்சும் குன்ற நாட!" (அகம். 182)

குறவன் புதரில் மறைந்திருக்கும் முளவு மாவைக் கொல்லப்புதர் குருதிக் கறையுடன் அசைந்து தோன்றியது என்பது, தலைவன் தலைவியொடு களவொழுக்கத்தில் ஒழுக, அவ்வொழுக்கம் 'பசலை படர்தல்' போன்ற தலைவியின் மேனி வேறுபாட்டால் தாய் முதலியோர்க்குப் புலனாகும்.

**நற்றிணையில் இறைச்சி**

"வேங்கை வீ உகும் ஓங்கு மலைக் கட்சி

மயில் அறிபு அறியாமன்னோ

பயில் குரல் கவரும் பைம் புறக்கிளியே" (நற். 13)

வேங்கை மலர்கள் உதிர்ந்த கூட்டிலிருக்கும் மயில், தினைக் கதிர்களைக் கிளிகள் கொண்டு போவதனை அறிந்திருக்கும். "நாம் கொய்து கொண்டு போவதனை அம்மயில் அறியா" என்று கிளிகள் கருதியதைப் போல 'உன் களவொழுக்கத்தை நான் அறிந்து வைத்தும் நான் அறிய மாட்டேன் என்று நீ கருதி மறைந்தாய்' என்று தோழி இறைச்சிப் பொருள் நயப்பக் கூறினள்,

2. " . . . . . . . . . . . . ஞாழல்

மணம் கமழ் நறு வீ வரிக்கும் துறைவன்

தன்னொடு புணர்த்த இன் அமர் கானல்,

தனியே வருதல் நனி புலம்பு உடைத்து என,

வாரேன் மன் யான், வந்தனென் தெய்ய," (னற். 267 (நெய்தல்)

ஞாழல் மரத்தின் பூவை நண்டுகள் வரிக்கும் என்றது, தலைவனிடம் சேராது பிரிந்த இல்வயிற் செறிக்கப்பட்ட தலைவியை அயலார் அலர் கூறி வருத்துவர் என்பதைக் குறித்தது.

ஞாழல் மலர் தினைபோன்றது என்பதை "நனைமுதிர் ஞாழல் சினைமருள் திரள்வீ' (குறுந். 397; 1) என்றமையாலும் அறியலாம்.

"வான் தோய் வெற்ப! சான்றோய் அல்லை" (நற். 353)

சான்றோன் அல்லாத நின்மனையின் கண் மேகங்கள் தவழ்கின்றனவே இஃது என்ன வியப்பாக இருக்கிறது.

**குறிஞ்சி நில மக்கள் மரபு**

குறிஞ்சி நில மக்கள் வேங்கை மலரும் காலத்தை திருமணம் செய்யும் மரபினைக் கொண்டிருந்தனர்.

தலைவனைப் பாடுங்கால், அவனது மலையையும் வாழ்த்திப் பாடுதல் மரபு. அம்முறையில் தோழி பயமலை ஏத்திப் பாடுவோம் என்றாள்.

மலைநாட்டின் சிறப்பு அரமகளிர். கீழிறங்கி அருவியாடினர் என்பதால் பெறப்படுகிறது.

குறிஞ்சி நில மக்கள் முருகனை ஏத்துதல் மரபு கலித்தொகை குறிஞ்சிக் கலியில் 43-ம் பாடல் 'ஐயனை ஏத்துவாம் போலப் பாடுவாம்' என்று தோழி கூறுவதால் அப்பாடல் முழுவதும் முருகற்கு அன்றித் தலைவற்குப் பயன்பட்டு நின்றவாறு உணரப்படுகிறது.

இரு யானைகளுக்கிடையே திருமகள் விளங்கும் காட்சி, திருக்கோவில், வளமனை முதலியவற்றின் மேற்படியில் கல், மரச் சிற்பங்களாக அமைக்கப்படும் மரபு இன்றும் உள்ளது.

நிலை உயர்தல் வேண்டிக் கடவுளை வழிபடும் முறை முன்னால் இருந்தது. (குறிஞ்சிக் கலி)

"நிலையுயர் கடவுட்குக் கடம்பூண்டு" என்பதனால் அறியப்படும்.

**குறிஞ்சி நில மக்கள் பண்பாடு**

தினைப்புனத்தைக் காவல் காக்கும் கடமை பகலில் மட்டுமின்றி, இரவிலும் உண்டு; ஆசினிப் பலவின் மீது நின்று காவல் புரிவர். பகற்

காவலுக்கு மகளிரும், இரவுக் காவலுக்கு ஆடவரும் செல்வது மரபு; அதனால் தான் கானவன் கவண் கல் வீசினான்.

திருமணம் பேசி உடன்படும் போது நல்ல இடமும் நல்ல நாளும் பார்ப்பது வழக்கம். "மன்றல் வேங்கைக் கீழிருந்து மண நயந்தனன்" குறிஞ்சி நில மக்கள் வேங்கை மரத்தின் கீழிருந்து திருமண முடிவு செய்வர். வேங்கை பூக்கும் காலம், திருமணம் நடத்தற்குரிய காலம்,இவை குறிஞ்சி நில மக்களின் மரபாக இருந்தது.

## உலக இயல்பு

தலைவியும் தலைவனும் விதி வசத்தால் ஒருவரையொருவர் எதிர்பட்டுழி, வீரம் நிமிர்ந்து நிற்கின்றது. நாணம் தலை கவிழ்ந்து நிற்கின்றது. காதலால் வீரம் விளைகின்றது; வீரத்தால் காதல் தோன்றுகின்றது; இது உலக இயல்பு ஆகும்.

தலைவி தலைவனை விரும்பியமை, அவள் உற்ற காம நோயால் தோள்கள் நெகிழ்ந்தன என்று கூறுதலானும்; தலைவியைத் தலைவன் விரும்பினமை 'நன்று' என்று அவன் உடன்பட்டு செயற்பட்டமையையும் நுண்மையாகக் காட்டியுள்ளார் கபிலர்.

## கொடைப் பண்பு

குறிஞ்சிக் கலியில் 50-வது பாடலில் பாடாண் திணைக் கொடைப்பண்பு சுட்டப் பெற்றுள்ளது. தலைவன் புலவர்கட்குத் தேரும் களிறும் வாரி வழங்குவதில் கை ஒழியாதவன் என்றுபாராட்டப் பெற்றான்.

## தொகுப்புரை

கபிலர் பாடல்களில் 197 பாடல்கள் அகத்திணைப் பாடல்கள் அதில் 183 பாடல்கள் களவு மணம் பற்றியன.

அகக்கருத்துக்களைப் பற்றி பார்க்கும் போது தலைவன் தலைவி இயற்கைப் புணர்ச்சி இடந்தலைப்பாடு போன்றவை இயல்பாகவே அமைந்துள்ளன. களிறு தருபுணர்ச்சி அறத்தொடு நிற்றல், தலைவன் வரும் வழியின் அருமை போன்றவை விளக்கமாகக் கூறுகிறார்.

கபிலர் ஐந்திணையும் பாடிய புலவர் என்று போற்றப்படுகிறார்.

தலைவி வருந்துவதாகவும், அவள் உடல் மெலிவதாகவும் கூறி வேலனுக்கு வெறியாட்டு போன்றவை நிகழ்த்துகிறார்கள். ஆனால் தோழியோ எதிர்பட்டு, தலைவி ஒரு காளையை களவு மணத்தில் கொண்டதாகவும் அவனையே அவளுக்கு திருமணம் செய்து வைக்க வேண்டும் என்றும் கூறினாள். ஆனால் தமர் மறுக்கின்றனர் என்றாலும் அத்தலைவனுக்கே திருமணம் செய்து கொடுக்க நினைக்கும் கருத்துக்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

தலைவன் - தலைவி

குறிஞ்சிப் பாட்டின் தனிச்சிறப்புகள்

குறிஞ்சிப்பாட்டு அமைப்பும் அழகும் தோழியின் கூற்று

தோழியின் சிறப்பு

குறிஞ்சிப்பாட்டின் இடைப்பகுதி

முன்னுரைப் பகுதியில் வருபவை

குறிஞ்சிப்பாட்டில் வாழ்வும் நாகரிகமும்

பழக்க வழக்கம்

தோழிக்கு தலைமகன் கூறியது

தோழி தலைவனுக்குக் குறிப்பால் உணர்த்தியது

தலைவன் பாங்கனுக்குக் கூறியது.

வல்வில் ஓரி

தோழி தலைவனுக்குக் கூறியது

தலைவனுக்கு தோழி நொந்து கூறியது

தலைமகன் வாயில் மறுத்தல்

தோழி தலைவனிடம் வரைவு கடாவியது

தோழி தலைவன் கேட்கும் வண்ணம் தலைவிக்குக் கூறியது

தலைவியை மணம் முடிக்க அடைந்த அயலாரை தோழி நகையாடிக் கூறியது.

தலைவி தெய்வத்திற்கு பராஅயது

தலைவி தூதுவர்க்குக் கூறியது

தலைவன் வரும் வழியின் அருமை

தலைவியை இற்செறித்தல்

சிறைப்புறம் (நெய்தல்)

தலைவன் தலைவியை மணந்து கொள்ள தேரூர்ந்து வருதல்

அறத்தொடு நிற்றல்

செவிலிக்குத் தோழி அறத்தொடு நிற்றல்

குறிஞ்சிக் கலியில் அறத்தொடு நின்றமை

குறிஞ்சிப் பாட்டில் அறத்தொடு நின்றமை

தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றமை

தோழி தாய்க்கு கூறியது

தொகுப்புரை

**தலைவன் - தலைவி**

தமிழர் 'களவுமணம்' பின்னால் ஏற்படும் திருமணத்திற்குத் தோற்றுவாயாகும். தலைவன் தலைவியர் ஆவரேயன்றி கணவன் மனைவியர் ஆகார். "நேர் இறை முன் கை பற்றி" நாடறி நன்மணம் புணர்ந்ததற்குப் பிற்பாடு தான் கணவன் மனைவியர் ஆவர்.

களவு, கற்பு, என்பன நாணயத்தின் இருபுறம் போன்றவை. தமிழ்ப் பண்பின் படி, இவற்றுள் பின்னதாகிய கற்பு இல்லையானால், முன்னதாகிய களவும் இல்லை.

கபிலர் குறிஞ்சிப் பாட்டை 'அறத்தொடு நிற்றல்' என்ற துறையமையப் பாடியுள்ளார். 'களவாக இருந்த காதலைக் கற்பாக' மாற்றும் துறை இது, தலைவியின் காதலைப் பெற்றோர் அறியச் செய்து, முறைப்படி மணம் நடக்க வழி செய்வது. இதில் இயற்கைப் புணர்ச்சி கூறப்படுகிறது.

அஃதாவது முதன் முதல் இருவரும் ஊழ்வயத்தால், தாமே எதிர்ப்பட்டுக் கூடுவது. பிறகு அடிக்கடி சந்தித்து அளவளாவ முடியாமையைக் கூறுகிறார். தலைவியின் மெலிவைக் கூறுகிறார். 'நோய்' போல காதல் துன்புறுத்துவதைக் விளக்குகிறார்.

இருவரும் திருமணம் நடைபெறுவது என்றோ என்று ஏங்குகின்றனர். தொட்டவனையே கட்டிக் கொள்ள வேண்டும் என்று துடிக்கின்றாள், தலைவி. அவனையே திருமணம் புரிந்துகொள்ளாவிட்டால் உயிர்விடுவது என்றும் மறு உலகிலாயினும் அவனையே அடைவது என்றும் பேசுகின்றாள், அவள்.

இவை குறிஞ்சிப் பாட்டில் வரும் பகுதிகளாகும், இவ்வாறு கற்பின் தொடக்கமே களவு என்றும், கற்பு இன்றேல் அக்களவு, அன்புக்களவு ஆகாது என்றும் விளக்கி, கந்தருவ மணத்திலிருந்து எந்த எந்தக் கருத்துக்களில் இக்களவுக்கூட்டம் வேறுபடுகிறது என்பதை 'அறத்தொடு நிலை'யாம் இத்துறை விளக்குகிறது. களவைப்பாடாது, களவைக் கற்பாக்கும் இடைநிலை பகுதியைக் கபிலர் பாடியமை ஒன்றே கந்தருவமணம், களவுக் கூட்டத்திடையே உள்ள வேறுபாடுகளை உய்த்துணர வைப்பதற்காகத் தான் என்பதை விளக்குகின்றது.

**குறிஞ்சிப் பாட்டின் தனிச்சிறப்புகள்**

இக்குறிஞ்சிப் பாட்டு ஏனைய குறிஞ்சிப்பாடல்கள் அனைத்திலும் பெரியது. இதனால் 'பெருங்குறிஞ்சி' என சிறப்புடன் அழைக்கப்படுவது.

'ஓர் ஆரிய வரசனுக்குத் தமிழ் அறிவிப்பதற்காக இது பாடப்பட்டது என்பதும் பிற தமிழ் நூல்கள் எவற்றுக்கும் இல்லாத தனிச்சிறப்பாகும். பிற நாட்டு மக்கள், பிற மொழியாளர் தமிழை ஊன்றிக் கற்றனர் என்பதற்கு இது தக்கதொரு சான்றாகும்.

மேலும் பொருளிலக்கணம் தமிழுக்கே உரிய சிறப்புடைய பகுதி என அன்றே நன்கு உணர்ந்திருந்தனர் என்பதையும் அதனால் தான் இப்பொருளை எடுத்துச் சிறப்பாக அறிவிப்பதற்குக் கபிலர் விரும்பினார் என்பதையும் இந்நூல் விளக்குகின்றது.

குறிஞ்சித் திணையிலே தனி வன்மையுடைய கபிலரால் பாடப்பெற்ற குறிஞ்சித் திணைப்பாட்டு இது.

ஏறத்தாழ 1440 சொற்களையுடைய இதில் 'பிரசம்' என்ற ஒரு சொல்லே முழுதும் வடசொல் எனத்தக்க நிலையில் கலந்து வந்திருக்கிறது. இது முப்பத்துமூன்று உவமைகளையும் இரண்டு உள்ளுறை உவமைகளையும் உடையது, நாற்பதுக்கு மேற்பட்ட நாகரிகக் குறிப்புக்களையுடையது.

இச்சிறு காவியத்திற்கு இடையே கபிலர் 99மலர்வகைகளை வரிசையாக அடுக்கி நடையழகால் சோர்வு தட்டாமல் செய்து, பாமாலையைச் சூடி அமைத்ததொரு வாடாத பூமாலையைத் தந்திருப்பது இந்நூலுக்கே தனிச்சிறப்பாகும்.

அக்கால மகளிரின் ஒப்பனையும் ஆடவரின் முடி ஒப்பனையும் இந்நூலில் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

வேட்டை நாய்கள் பாய்கின்ற வேகம், மதயானைகள் காட்டை அழிக்கின்ற காட்சி, கோடைக்காலத்தில் மழைபொழியும் ஓவியம், மாலைப்பொழுது விரைந்து வரும் அழகு, இரவு நேரத்தில் வழியில் ஏற்படும் துன்பங்கள் கொடுமை போன்றவை பல இந்நூலில் தனிச்சிறப்புடன் வருணிக்கப்பட்டுள்ளன.

தோழியின் நாவன்மைக்கு குறிஞ்சிப்பாட்டு சிறந்ததோர் உதாரணம்.

பழங்காலப் பழக்க வழக்கங்களையும், திருமண முறைகளையும், விருந்தோம்பும் விதத்தையும், காதல் மணக்காட்சிகளையும் தொகுத்துத் தருகின்ற நாகரிகப் பேழையாகவும் இக்குறிஞ்சிப்பாட்டுத் திகழ்கிறது.

## குறிஞ்சிப்பாட்டு அமைப்பும் அழகும் தோழியின் கூற்று

குறிஞ்சிப்பாட்டு முழுவதும் தோழி செவிலித் தாயிடம் கூறுவதாக அமைந்துள்ளன. கவிக் கூற்றாக ஒரு வரி கூட வரவில்லை.

சங்கப் பாடல்களில் அகத்திணை பற்றியன அனைத்தும் தலைவி, தோழி, தலைவன் முதலிய உறுப்பினர்கள் தாமே பேசும் முறையிலோ தலைவனும் தலைவியும் ஆடிப்பாடிக் களித்ததையெல்லாம் தலைவி கூறுவாள், தலைவன் கூறுவான், அல்லது தலைவியுடன் பிரித்து அறிய முடியாத தோழி கூறுவாள்.

இவ்வாறு பாப் புனைவரேயன்றிக் கவிஞர்கள் தாமே கூறுவதாக அமைக்கமாட்டார்கள். பிற்காலத்தில் கவிஞரே கூறுவதாகக் காவியங்களிலும், உலா போன்றவற்றிலும் அமைத்தனர். முழுதும் நாடகக் காப்பிய நூலாகிய சிலப்பதிகாரம் இவ்விரு திறங்களும் கலந்து வந்துள்ளன.

அகத்துறைப் பாடல்கள் தாமே அனுபவித்து உள்ளத்து உணர்வார் அனுபவிக்கும் இன்பம் பற்றியன. எனவே அவரவர்களே கூறுவதாக அமைக்கும் முறை தான் நாகரிகமானது, சிறப்புடையது, புறப்பாடல்களோ, ஆசிரியர் கூற்றாக வரத்தக்கன.

இன்று புனைகதைகள், சிறுகதைகள் எழுதுவோர் அனைவரும் அந்த அந்த உறுப்பினரே உணர்ந்து கூறுவதாகத் தம் எழுத்தோவியங்களை அமைக்கின்றனர். இவற்றை நாம் வியந்து, சுவைத்து மகிழ்கின்றோம்.

உறுப்பினர்களே பேசும் இவ் 'உத்தி' உள்ளதை உள்ளவாறு உணர்த்தப்பயன்படுகிறது, உணர்ச்சி நிலைகளை அப்படியே படம் பிடிக்க உதவுகிறது.

உளநூல் முறைப்படி படிப்பவர் மனத்துள் கதையில் வருபவர்களை உறவாட வைக்கிறது.

இம்முறையே சிறந்த அமைப்பு முறை என்பர் இருபதாம் நூற்றாண்டுத் திறனாய்வாளர். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே இம்முறையை ஆயிரக்கணக்கான அகப்பாடல்களில் கையாண்டு நம் புலவர் பெருமக்கள் வெற்றி கண்டனர்.

இது சங்க இலக்கியத்திற்கு உரிய தனிச் சிறப்புகளில் ஒன்றாகும்.

## தோழியின் சிறப்பு

சங்க இலக்கியத்தில் தோழி மிகவும் சிறப்புடையவள். தெருக்கூத்து பார்ப்பவர்கள் 'தோழி'யைப் பற்றிக் கொள்ளும் நினைவு வேறு, சங்க இலக்கியத்தில் வரும் தனிச்சிறப்புடை தோழியின் ஓவியம் வேறு.

செவிலியும் தோழியும் தாழ்ந்த குடியினர் என்பது பிற்காலத்தாரின் பிழைபட்ட கருத்து எல்லா வகையாலும் நற்றாய் பெற்றதாய் அளவு செவிலியும் சிறப்புடையவள்.

தலைவி அளவு தோழியும் சிறப்புடையவள். இன்னும் இலக்கியத்தைப் பொறுத்தமட்டிலும் எல்லா வகையாலும் செவிலிக்கும் தோழிக்கும் தான் மிகுதியான இடம் உண்டு. சிறப்பும் உண்டு.

தொல்காப்பியரும் 'தாங்கரும் சிறப்பின் தோழி' என்று புகழ்கின்றார். பிறர் துன்பம் துடைக்கும் தோழிக்கும் நெஞ்சுரம் வேண்டும் என விளக்குகின்றார்.

இலக்கியத்தில் தோழி என்ற பாத்திரமே அறிவுநிலை புனைவுநிலை, தகுதிநிலை போன்றவற்றால் புலவர் நிலைக்கு உயர்ந்து விளங்குகிறது.

தோழி தலைவியுடன் பிரித்தறிய முடியாத தன்மை உடையவளாதலின் தலைவி உணர்வதைத் தானும் உணர்ந்து கூற இயலும். தோழி தலைவியின் வேறுபட்டவளென்பது உண்மையாதலின் பிரிந்து நின்று - மூன்றாவது ஆளாக நின்று திருத்தவும் இயலும். தலைவி, தலைவன், தாயார் போன்றோரின் குற்ற நற்றங்களைத் திறன் ஆய்வு முறையில் எடுத்துக் கூறவும் அவளால் இயலும்.

இத்தோழி தலைவன் தலைவியர் உறவையும் அறிவாள். அது பற்றிய ஊரார் வாயையும் உற்றுக்கேட்டு அறிவாள், இதனால் தலைவன் தலைவியரை நல்வழிப்படுத்தவும் தீங்கு வராமல் காக்கவும் அவளால் முடியும்.

தோழி நாவண்மை மிக்கவள். இக்குறிஞ்சிப் பாட்டில் அவள் கூற்று, அன்றாடப் பேச்சு முறையைப் பின்பற்றி அமைக்கப்பட்டுள்ளது. தோழி பேசும் போது இடையிடையே செவிலித்தாய் மறித்துக் கேட்க, அதற்குத் தோழி தக்கவாறு விடை கூறுவதாக இந்நூல் முழு நாடக முறையில் அமையவில்லை. ஆயினும், செவிலி இடையே கேள்விகள் கேட்டால் அவற்றுக்குத் தோழி

எம்முறையில் விடை கூறுவாளோ, அவ்விடைகள் அனைத்தையும் தொகுத்துக்கூறும் முறையில் பாட்டின் பொருட்போக்கு உளது.

"முடிவு செய்த திருமணம் இதுவென்று தாய்க்கு அறிவித்தால் பழி உண்டாகுமா?" என்று தலைவி கேட்பதாகத் தோழி கூறுகிறாள். இந்தப் பிறப்பில் அவனுக்குத் தன்னைக் கொடுக்காவிட்டால், சாகும் வரை-வேறு எவரையும் மணம் புரியாது பொறுத்திருப்பாளாம். அவ்வாறு பொறுத்திருந்தால் அடுத்த பிறப்பிலாவது அவனையே அடையப் பெறுவாளாம். 'இப்படியெல்லாம் சொல்லித் தலைவி கண் கலங்கித் தேம்பி அழுகின்றாள் அம்மா' என்று தோழி அறிவித்துத்தான் நல்லவளாகிக் கொள்கிறாள்.

மேலும், 'இரண்டு வேந்தரைச் சமாதானம் செய்து வைக்க முயலும் சான்றோர் அஞ்சுவது போல நானும் உங்கள் இருவருக்குமிடையே அஞ்சுகிறேன். அவள், தான் விரும்பியவனையே அடைய வேண்டும் என்றும், இதைப் பெற்றோருக்கு வெளிப்படுத்த வேண்டும் என்றும் துணிந்த பிறகு தான் என்ன செய்வது? பெரியோர் பல பொருத்தங்களைப் பார்த்து இத்தகைய மணவினைகளை முடிவு செய்வர். இவளோ ஒருவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள நேர்ந்து விட்டது. இனி கற்பை இழந்து காதலித்தவனை மறந்து இவள் வாழமாட்டாள். எனவே இவள் உயிருக்குப் பாதுகாப்பான செயல் இம்மணவினைக்கு இசைவது தான் என்று சிந்தித்து நானும் இதற்கு உடன்பட்டேன் அம்மா! இது திட்டமிட்டுச் செய்த முயற்சி அன்று, எதிர்பாராமல்

தானே நடந்து விட்ட நிகழ்ச்சி இதனை நிகழ்ந்த படி நீ அறியச் சொல்லுவேன். கேட்டு எங்கள் மீது கோபம் கொள்ளாதிருப்பாயாக!' என்று தோழி கூறுகிறாள்.

34 வரிகள் வரை முன்னுரை போன்றதாக அமைந்துள்ளது.

'எய்யா மையலை நீயும் வருந்துதி' குறிஞ்சிப்பாட்டு 8-வது வரி

நோயின் உண்மைக் காரணத்தை அறிய மாட்டாத மனக்குழப்பத்தினால் நீயும் வருந்துகிறாய்.

'மான் அமர் நோக்கம் கலங்கிக் கையற்று
ஆனாச் சிறுமையள் இவளும் தேம்பும்' (குறி.பா. 25-26)

மான்போலும் விரும்பத்தக்க பார்வையில், கண்ணீர் கலங்கி நிற்கச் செயலற்றுத் தீராத துன்பத்தால் இவளும் தேம்பி அழுகின்றாள்.

'இருபேர் அச்சமொடு யானும் ஆற்றலென்' (குறி.பா. 29)

ஒருபுறம் உன் சீற்றம், மறுபுறம் அவள் ஆற்றாமை என இரண்டுக்கு மிடையே நானும் அஞ்சி வருந்தலானேன்.

இவ்வாறு 'நீயும் வருந்துகிறாய். இவளும் அழுகிறாள், எனக்கும் இது துன்பமாக இருக்கிறது' என வரும் இத்தோற்றுவாய் அமைப்பும் பேசும் நடையில் இருக்கிறது. எந்நிலையிலும் எதிர் எதிரான இருசாராரிடையே சமாதானம் செய்து வைக்க முயலுவோர், பேசத் தொடங்கும் முறை இதுதான்.

'அன்னாய், வாழி, வேண்டு!அன்னை!!'

தாயே, வாழ்வாயாக! நான் சொல்லப் போவதை விரும்பிக் கேட்பாயாக அம்மா! - என்று மிக எளிமையுடன் தொடங்குகிறாள் தோழி.

சேக்ஷ்பியரது நாடகங்களின் தொடக்கக் காட்சியை, தொடக்கப் பேச்சை, தொடக்க வரிகளைப் பலவாறு திறனாய்ந்து மகிழும் பெருமக்கள் இவ்வரியையும் அவற்றுடன் ஒப்பிட்டுப் படித்து இன்புற வேண்டும். தோழி இருமுறை 'அம்மா, அம்மா!' என்று அழைப்பது ஏன்? சொல்லப் போகும் செய்தி அவ்வளவு பெரியது, அச்சத்திற்குரியது, தாய்க்குக் கேட்டதும் சினமூட்டக் கூடியது, பெருங்குற்றமெனக் கருதக் கூடியது என்பதே இத்தொடக்கமே நம் நெஞ்சில் நிழலாட விடுகிறது.

'தாயே! நீயும் வருந்துகிறாயே! இவளது நோயைத் தீர்க்க வெறியாட்டு எடுத்தும் கடவுளை, வணங்கியும் வேறு பலரையும் வினாவியும் என்னென்னவோ துன்பப்படுகிறாயே என்று அடுத்துத் தோழி தாய் மீது பின்னர் உண்மையைக் கேட்டதும் தாய் காய்ந்து விழக் கூடாதே என்று தான் இவ்வாறு கரைந்து உருவி முதலிலேயே தாயின் இரக்கத்தைத் தேவைக்கு அதிகமாகச் சேமித்து வைத்துக் கொள்கிறாள்!.

தோழி நாவண்மை மிக்கவள் - செப்பல்வன்மை உடையவள் என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டு

அடுத்ததாக தலைவி ஒருவனைக் காதலித்துள்ளாள் என்றும், அவனையே அவள் மணந்தால் தான் அவளது கற்பும் உயிரும் காக்கப்படுமென்றும் தோழி எடுத்த எடுப்பிலேயே உண்மையை அறிவித்து விடுகிறாள்.

**குறிஞ்சிப்பாட்டின் இடைப்பகுதி**

35-ஆம் அடி முதல் 237ஆம் அடிவரையுள்ள 203 அடிகளில் ஒரு நாள் நிகழ்ச்சி மட்டும் விவரிக்கப்படுகின்றது. இறுதியில் 24அடிகள் முடிவுரை போல உள்ளன. இவ்வாறு 261 அடிகள் கொண்ட இந்நெடும் பாட்டில் முன்னுள்ள 34 அடிகளும் பின்னுள்ள 24அடிகளும் ஆக 58 அடிகள் நீங்க, இடைநின்ற 203 அடிகளில் வரும் ஒரு நாள் நிகழ்ச்சியாவது,

தலைவன் தலைவியை முதல்முதலில் எதிர்பாராமல் ஊழால் எதிர்ப்பட்டுக் காதல் கொண்டு நெஞ்சங் கலந்து மகிழ்ந்த 'இயற்கைப்புணர்ச்சி' பற்றிய செய்திதான் இவ்வளவு விரிவாகக் காரணகாரியத் தொடர்போடு விரிந்து உரைக்கப்படுகிறது.

**முன்னுரைப் பகுதியில் வருபவை**

"நெடுந்தேர் எந்தை அருங்கடி நீவி
இருவேம் ஆய்ந்த மன்றல் இதுவென
நாம் அறிவுறாலின் பழியும் உண்டோ?" குறி.பா.(20-22)

என்று 'பெரிய தேரையுடைய என் தந்தையின் அரிய காவலைக் கடந்து நானும் தலைவனுமாக முடிவு செய்த மணவினை இதுவென்று நாம் தாய்க்கு அறிவுறுத்தினாள் அதனால் நமக்குப்பழி உண்டாகுமோ?" என்று தலைவி கேட்டதாக வருகின்றது, இதைக் கேட்டதும் தாய்க்கு "மகள் என்ன செய்தாளோ? குடிப்பிறப்புக்கு மாசு வருமாறு நடந்து கொண்டாளோ? யாரை மணமகனாக ஏற்றுக் கொண்டாளோ? அவளது வாழ்வு மலருமோ, சிதையுமோ? அந்தோ

எனக்கும் தெரியாமல் இவள் என்ன தவறு செய்தனளோ?" என்றெல்லாம் பெரிய தொரு சிக்கல் மனத்தில் எழும்.

நடந்ததை அறியும் பேரார்வம் சினத்தை அடக்கிக் கொண்டு முன்தோன்றும்.

நாடக முறைப்படி முதலில் ஒரு சிக்கலை உண்டாக்கி வைப்பதை ஐயப்பொருள் அல்லது மறைபொருள் என்பர். அச்சிக்கலை முறுக்கேற்றுவதை உச்சநிலை என்பர்.

## குறிஞ்சிப்பாட்டில் வாழ்வும் நாகரிகமும்

குறிஞ்சிப்பாட்டின் கண் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் வாழ்ந்த தமிழ் மக்களின் நாகரிகம் பற்றிய பல சான்றுகள் உள்ளன. அக்கால மக்களின் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் காணக்கிடக்கின்றன. மலைமீது மழை பொதிந்து ஓய்ந்த பின்னர்த் தலைவியும் தோழியும் ஆங்காங்கு மலர்ந்து, கலந்து கிடந்த 'வண்ண வண்ண மலர்களைத் தேடிக் தொகுத்தது போல நாமும் இந்நாகரிகக் குறிப்புகளைத் தேடித் தொகுப்பதிலே ஒரு தனியின்பம் இருக்கிறது. நம் முன்னோர்களின் வாழ்வியல் முறைகளை அறிந்து கொள்வதன் மூலம், நம்முடைய வாழ்வைச் செம்மைப்படுத்திக் கொள்வதாகிய பயனும் இருக்கிறது.

## பழக்க வழக்கம்

'விறல் இழை நெகிழ்த்த வீவு அரும்கடும் நோய்' (குறி.பா. 3)

என்பதற்குச் சிறப்புடைய அணிகளை நெகிழ வைத்த எதனாலும் தீராத கடிய நோய்' என்று தான் இதுவரை பலரும் பொருள் சொல்லியுள்ளார்கள்.

'இழை' என்பது அணிகலன்களுக்கெல்லாம் பொதுப்பெயராயினும் நெகிழ்ந்து விழும்படி செய்த நோய் எனப்பின்னர் வருவதால் அது கைவளையல்களையே இங்குக்குறிக்கும்.

'விறல்' என்பது இவ்வளையல் தனிச் சிறப்புடையது. மங்கலமுடையது - புனிதமானது எனச் சுட்டுகிறது.

தாலிக்கு இன்று எவ்வளவு மதிப்பு உண்டோ, அவ்வளவு மதிப்பு அன்று வளையல்களுக்கு இருந்தது.

இன்று கணவனை இழந்ததற்கு அடையாளமாகத் தாலி கழற்றப்படுவது போல, அன்று கைவளையல்கள் கழற்றப்பட்டன.

கணவனை இழந்த கண்ணகி, தொடியினை (வளையல்) உடைத்த செய்தியைச் சிலப்பதிகாரம் அறிவிக்கிறது.

தலைவனைப் பிரிந்த தலைவியின் வாட்டத்தைக் காட்டுவதற்கும் 'வளை நெகிழ மெலிந்து விட்டாள்' என்று கூறவதே இலக்கியப்பெருவழக்காகும்.

தலைவியின் அழகைச் சிறப்பிக்கும் போதும், நலிவைக் கூறும் போதும் முதலில் இடம் பெறுவன இவ் 'வளையல்கள்' தான்.

பெரிய தேரையுடைய தன் தந்தையின் அரிய காவலைக் கடந்து,

"நெடுந்தேர் எந்தை அருங்கடி நீவி" (குறி.பா.20)

தான் காதல் கொண்டதாகத் தலைவி கூறுகிறாள்.

இது பூப்பெய்திய பெண்களை மணங்காணும் வரை நம் முன்னோர் கண்ணை இமை காப்பது போல் காத்து வந்தனர் என்பதையே நினைப்பூட்டுகிறது.

அன்று 'காதல் மணம்' எவ்வளவு இருந்ததோ அதை விட ஒருபடி அதிகமாகவே இக்காவல் நிலையும் இருந்தது. இரண்டும் போதுமான அளவில் இருந்தமையால் தான் இந்நாட்டில் 'கற்புச்' சிறப்புற்றது.

'இருவேம் ஆய்ந்த மன்றல்' (குறி.பா. 21)

என்று தலைவி தானும் தலைவனும் இக்காதல் மணத்தை முடிவு செய்ததாகக் கூறுகிறாள். பிறகு தோழியும் இதற்கு ஒப்புக்கொள்கிறாள். இதனை அத்தோழி

"கொடுப்பின் நன்கு உடைமையும், குடி நிரல் உடைமையும்
வண்ணமுந் துணையும் பொரீஇ எண்ணாது
எமியேந் துணிந்த ஏமஞ்சால் அருவினை" (குறி.பா. 30-32)

திருமணம் என்று கூறுகிறாள்.

பல பொருத்தங்களையும் பெரியோர்களைக் கொண்டு ஒப்பிட்டுப் பாராமல் நாங்களாக இத்திருமணத்தை முடிவு செய்துவிட்டோம். என்கிறாள்.

இதிலிருந்து அன்று, காதல் திருமணங்கள் நிகழ்வுற்றனவெனினும் அதே நேரத்தில் 'பெரியோர்கள் கூடி உறுதி செய்யும் திருமணங்களும்' பெரிதும் நடைபெற்றன என அறிகின்றோம்.

**தோழிக்கு தலைமகன் கூறியது**

நள்ளிருளில் துயில்கொள்ளும் யானையைப் போல, பெருமூச்சுவிட்டு என் உள்ளம் புணர்தற்கு முன்னரேயன்றிப் புணர்ந்த பின்னரும் தன்னிடம் இருப்பதை, சுனையில் மலர்ந்த பூக்களைப் பறித்து, அவற்றை மாலையாகக் கட்டி, தினைப்புனத்தில் கதிரை உண்ணவரும் கிளிகளை ஓட்டுகின்ற பூப்போன்ற கண்களையுடைய பேதையாகிய தலைவி, அறிந்தனளோ, அறிந்திலளோ?

தன்னுடைய உள்ளம், தலைவியிடம் உள்ளது என்பதைப் புணர்தற்கு முன் புகுமுகம் புரிதலால் அறிந்தவன் ஆதலின், புணர்ந்த பின்னரும் அவ்வாறு இருத்தலை அறிந்தனளோ, அறிந்திலளோ, எனக் கவன்றாள். தலைவி, புணர்ந்த பின்னரும் முன்புபோல் குற்றத்தையும், கடிந்தும் ஒழுகுதலான் தன்மை அவள் நினையாமை குறித்தான். தான் அவளைப் போல ஒருவினையும் செய்யாமையால், தன் உள்ளம் அவளிடமே உள்ளதாகக் கூறினான். அழகிய கண்களால் தன்னை பேதைமையுறச் செய்தமையால், அவளைப் பேதை என்றான். (குறுந். 142)

**தோழி தலைவனுக்குக் குறிப்பால் உணர்த்தியது**

வரைவிடை வைத்துப்பிரிவாற்குத் தோழி சொல்லியது. யானைக்கன்று, தன் தாயின் பாலையுடைய முலைகுடித்து நிற்ப, வீட்டின் முன்றிலில் வளர்ந்துள்ள தினைப்பயிரை அப்பெண்யானை உண்ணுதற்கு இடனாகிய, பெரிய மலைகளையுடைய நாட்டின் தலைவனை, தான் கேடு

எய்திய காலத்தில் பெற்று மகிழ்ந்த உதவியை அரசு கட்டிலில் அமரும் சிறப்புப்பெற்று பின் மறந்த அரசனைப்போல, நீ, யாம் இத்தலைவியினுடைய, மெல்லிய அழகினையுடைய, ஒலித்தலையுடைய மயிலின் பீலியைப் போன்ற, தழைத்த மெல்லிய கூந்தல் பகுதிகள் நினக்கே உரிமையுடையனவாகும்.

பெண் யானை, முன்றிலில் வளர்ந்த தினைப்பயிரை உண்ணுதல் தலைவியைக் களவில் பெற்று மகிழ்வதைக் குறிப்பதாகும். கன்று பிடியிடம் பால் உண்ணுதல், தலைவியை வரைந்து கொண்டு சுற்றமாக்காமை குறித்தது. தோழி, தலைவனிடம், களவில் பூச்சூடிய நினக்கே, இவள் கூந்தல் உரிய என்றாள்.

கூந்தல் உரிய என்ற தொடர், மணம் முடித்து இவளொடு இல்லறம் நடத்த உரிமையுடைமையை உணர்த்தும். தலைவன் வரைவொடு வாரானாயின் இவள் இறந்துபடுவாள் என்பதையும் தோழி குறிப்பால் உணர்த்தினாள்.

குறுந். 225)

**தலைவன் பாங்கனுக்குக் கூறியது.**

பெரிய மலையிடத்திலிருந்து, தூய வெண்மை நிறத்தையுடைய அருவிகள் விழும். அவை, பாறைகளின் வெடிப்புகளில் பட்டு ஒலிக்கின்ற, பலமலர்களையுடைய மலைச்சாரலில் உள்ள சிற்றூரில் வாழ்கின்ற குறவனுடைய பெரிய தோளையுடைய சிறுமியின், நீரோடு ஒரு தன்மைத்தாய் விளங்கும் என்னுடைய வலிமையை மாய்த்தது.

தலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தன்மையைக் கூறுகிறான். (குறு.95)

தலைவன் அல்ல குறிப்பட்டு மீள்கின்றான். காந்தளை இயற்கை வேலியாக உடைய இச்சிறுகுடியில் வாழ்பவர், அருவியை உடைய பரந்த நிலத்தில் மலை நெல்லை விதைப்பர். அவற்றிடையே களையாக வளர்ந்துள்ள பருத்த இலையையுடைய காட்டு மல்லிகையையும், பசிய மலரையும் பறித்து எறிவர். தாங்கள் உணவின்றிப் பசிப்பாராயின், வன்கண்மையையுடைய யானையின் கொம்பை விற்று, அதன் விலையால் பெறப்படும் உணவை உண்டு வாழ்வர். இத்தகைய வலிய வில்லையுடைய ஓரி என்னும் வள்ளலின் கொல்லி மலையின் மேற்குப் பகுதியில் எழுதப்பட்ட பாவைபோன்ற என் காதலி காண்பவர்க்கு அறியாமை வருவதற்குக் காரணமாக விளங்குபவள். அவளுடைய மூங்கிலைப் போன்ற பருத்த தோள்கள், தழுவுவதற்கு அரியன.

மலைவாழ்மக்கள், அருவிசார்ந்த ஈரப்பசையுள்ள தம் நிலங்களில் மலைநெல்லை விதைப்பதையும், அவற்றின் களைகளை நீக்குவதையும் இப்பாடல் குறிப்பதாகும்.

வீரம் மிக்க வல்வில் ஓரி காத்தலால், அந்நிலப்பகுதி பசியின்றி, அச்சமின்றி, வளம் சுரப்பதாயிற்று இப்பாடல், கொல்லி மலையின் இயற்கை வளத்தையும், மக்கள் வாழ்க்கையையும் சுட்டுவதாகும்.

**வல்வில் ஓரி**

கடையெழு வள்ளல்களில் ஒருவன் மழவர் பெருமகன் கொல்லிமலைத் தலைவன். காரியால் கொல்லப்பட்டவன். ஒரு காலத்தில் பல

பொருள்களில் ஊடுருவிச் செல்லுமாறு அம்புஎய்வதில் வல்லவன். கடவுள் எழுதிய பாவை இவன் மலையில் இருந்தது.(குறு.100)

காடுகளைச் சுட்டு உண்டாக்கிய கொல்லைப் பகுதியில் செழித்து வளர்ந்துள்ள தினைகளில் வீழும் கிளிகள், தம்மை ஓட்டுகின்ற கொடிச்சியின் இசையில் ஈடுபட்டு, அவள் கையிலுள்ள தம்மைக் கடியும் குளிர் என்னும் கருவி கேட்டதற்கு இனிய தாளத்தை உடையது என்றும், அவள் விளிக்கும் ஓசை, கிளியோசை என்றும் எழுந்து போதற்கு விரும்பாமல், அத்தினைக் கதிர்களிலேயே அமர்ந்து இருக்கும். ஆதலால், அதனை வெறுத்து அழுத தலைவியின் கண்கள், மலைச்சாரலில் உள்ள, ஆழமான நீரையுடைய, பசிய சுனையில் பூத்துள்ள குவளையின் வண்டுகள் செறிதலால், பசிய இதழ்கள் கலைந்து, தண்ணிய நீர்த்துளிகளை ஏற்றுக் கொண்ட மலர்களைப் போன்றன.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன், பாங்கனிடம் தான் கண்ட தலைவியின் இருப்பிடம், அவள் தோற்றம், அவளால் உள்ள காதல் ஆகியவற்றைக் கூறி அவனால் தன் குறையை முடித்துக் கொள்ள விரும்பினான். தலைவி, தினையில் படியும் கிளிகளை ஓட்டுவதற்கு இசைத்தலும், விளித்தலும் கருவிகளாலும் ஒலி எழுப்புதலும் இப்பாடலில் குறிக்கப்பட்டுள்ளன. கிளிகள், கொடிச்சியின் இசைகேட்டு, தினைப்புனத்தை அடைந்தன, குளிரின் ஒலி கேட்டு, அவ்விசைக்கு ஏற்ற தாளம் என மயங்கின.

தலைவன், கொடிச்சி கிளி கடியும் நிலையிலும், புலந்து அழும் நிலையிலும் தனக்கு இனியவளாய் இருத்தலைப் பாங்கனுக்கு உணர்த்தினான்.(குறுந். 291)

**தோழி தலைவனுக்குக் கூறியது**

இரவுக் குறி வந்து நீங்கும் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு, வரைவு கடாவுகிறாள்.

மூங்கிலை வேலியாக உடைய, வேரில் பழக்குலைகளை உடைய பலாமரங்கள் செறிந்த மலைப்பக்கத்து நாடனே. நின்நாட்டு, பக்க மலையில் வளர்ந்துள்ள பலாவின் சிறிய கொம்பில், பெரிய பழம், தன்னைத் தாங்கும் எவ்வகைப் பற்றுக்கோடுமின்றித்தானே பழுத்துத் தொங்குவது போல, இத்தலைவியின் உயிராகிய கொம்பு, மிகவும் சிறியதாய் உள்ளது. அதன்கண் விளங்கும் காமநோய் என்னும் பழமோ மிகவும் பெரியதாய் உள்ளது. அந்நிலையை அறிந்தவப் நின்னையன்றி யார் உளர்? ஒருவரும் இலர். எனவே, அவளைத் திருமணம் செய்வதற்குரிய காலத்தை ஏற்படுத்துவாயாக எனக் கூறினாள்.(குறு. 18)

நடு இரவின் கண், தொகுதியையுடைய மேகங்கள், மழையைப் பெய்தமை தோன்ற மலை. நீ மெய்யுற்றுத் துய்க்கும் இன்பம், இரவுக்குறி வாய்க்கப் பெறாமையால், ஒருகால் நீங்குவதாயினும் நின்னிடத்து யாம் கொண்ட நட்பும் குறையுமோ? (குறு. 42)

யா மரத்தை வெட்டி எறிந்து, அம்மரங்களை எரித்து ஆக்கிய வழியிடத்தில், கரும்பு போன்ற அடிப்பகுதியையுடைய, பசிய தாள்களைக் கொண்ட செவ்விய தினையானது வளர்ந்து காணப்படும். மடப்பத்தையுடைய பெண்யானையின் துதிக்கையைப் போலப்பருத்து, கரிதலையுடைய சந்தனம் முதலிய கட்டைகளின் மேல், அவற்றின் கோலில், பால் முற்றிச் செறிந்து, பசிய கதிர்கள் சாய்ந்து, காணப்படும். அக்கதிர்களில் படிந்து, தினைகளை உண்பதற்காக வரும் கிளிகளைக் கூடிய, யாம் செல்லுதும்,போரை அடுகின்ற வேலினையும், அவ்வேல் விளங்குதற்குக் காரணமாகிய பெரிய கைகளையும் உடைய மலையமான் திருமுடிக் காரியின் முள்ளூர்க் காட்டில் விளங்கும் சந்தனத்தின் மணம் கமழும் மார்பினையுடையாய் வாரற்க யாய் ஆண்டு வருகுவள்.

காட்டில் உள்ள மரங்களை வெட்டி வீழ்த்திப் பின்னர் எரியூட்டித் தினைப் புனத்தை உருவாக்குவர். தினையின் தாள், கரும்பு போன்றும், கதிர்கள், பெண் யானையின் கை போன்றும் தோன்றுவன. தினை மணியின் பொறை ஆற்றாமையால், தினைக் கதிர்கள், புனத்தை எரித்தபின் கரிந்து கிடக்கும் மரக்கட்டைகளின் மேல் சாய்ந்து காணப்படும்.

தோழி, தலைவனிடம் தன் மலைக்குரியன பூசி வருக என்றும், இயல்பாகவே மணம் உடைமையால் பூசாது வருக என்றும் கூறினாள். தலைவி, அவனைப்புணர்ந்த வழி, அவன் பூசிய சந்தன மணம், தலைவியின் உடலில் காணப்பட்ட வழி, தாய் அப்புதுமணம் கண்டு ஐயுற்று, தினைகடியப் போக

விடாள் என்றும், ஆண்டு நிகழ்வது காண வருவாள் என்றும், இதனால் தாம் அஞ்சுவதும் என்றும் தலைவற்குக் கூறி குறியிடம் வேறாக உரைத்தாள். (குறுந். 198)

**தலைவனுக்கு தோழி நொந்து கூறியது**

உயர்ந்த மலைப்பகுதியின் தலைவனே, பெய்யும் மேகங்கள், வானத்து இடத்தை மறைத்தலால் அங்குள்ள விண்மீன்களைக் காண்பாயல்லை. கதிரவன், மேற்றிசையில் மறைந்தமையால் மேலும் கீழுமாகிய யாங்கணும் இருள் மிகவும் தோன்றுவதாயிற்று. இந்நிலையில் நின்னையும் எம்மையும் இன்றிப் பலரும் உறங்கும் நாளின் பாதியாகிய இரவுப்பொழுதில் எங்ஙனம் வந்தனையோ? ஈண்டுள்ள வேங்கையின் பூக்கள், மணம் வீசுகின்ற ஆண்டுள்ள சிறுகுடி, உள்ள இடத்தை எவ்வாறு வருவதற்குத் தெரிந்து கொண்டனை, யான் வருந்துவேன்.

இரவுக்குறியில் இடையீடுகள் பல இருப்பினும், தலைவன் தன் வலியாலும், அறிவாலும் அவற்றைக்கடந்து, தலைவியைக் குறியிடத்தில் கண்டான். அவள் அவன் வருகை குறித்து மகிழ்ந்த போதிலும், அவன் வரும் வழியின் ஏதங்களை எண்ணி வருந்துவதாயினாள். (குறுந். 355)

**தலைமகன் வாயில் மறுத்தல்**

பரத்தை காரணமாகத் தலைவியைப் பிரிந்த தலைவன் தலைவியின் ஊடல் தீர்க்கத் தோழியை வாயிலாக விடுத்தான். அத்தோழியிடம் தலைவி,

“மலைநாடன் மிக இனியனாயினும் புலவி நீக்கிக் கூடுதல் இன்பஞ் செய்வதால் யான் ஊடி நிற்பேன்” என வெகுண்டுரைத்தாள்.

“தோழி! புகழ்மிக வாழ்பவரின் செல்வம் பொலிவுறுதல் போலக் காணுந்தோறும் விரைந்த நடையையுடைய களிற்றியானை பொலிந்து தோன்றும். அத்தகைய யானை, தன்னை எதிர்க்க இயலாது. கரிய நிறமுடைய வலிமையான புலி அஞ்சியோடக் கண்டது. அதனால் அருகிலுள்ள கரிய அடிப்பகுதியையுடைய வேங்கை மரம் சிதையுமாறு முறித்த பின்னரே அதன் பெருஞ்சினம் தணியும். இத்தகைய யானையையுடைய குன்றத்திற்குரிய நாடன், நம்மொடு பலமுறை நிகழ்த்தும் புணர்ச்சியாலும் கொள்ளும் விருப்பத்தாலும் மிகப்பெரிதும் இனிய பண்பினனே, ஆயினும் பிரிவாலுண்டான நீள் வருத்தம் தூரத்தே அகன்று போகும்படி செய்வதற்கு வன்மையுடன் புலவியுணர்த்த வேண்டும் எனக் கருதினேன். ஆகவே ஊடல் மிகப்பெற்று அவருடன் வேறுபட்டு நிற்பேன்.”

தனக்கு நேர்ந்த பிரிவச்சத்தைத் தலைவனும் உணரத்தான் ஊடுவதாகக் குறித்தாள். தலைவன் ஊடலை உணர்த்தி அருகிலிருந்து அருள் செய்யும் தன்மையைக் கருதியும் தான் ஊடல் உறுவதாகக் கூறினாள். தான் துய்த்த துயர் அகலுமாறு ஊடல் உறுவதாகக் கூறினாள். தான் துய்த்த துயர் அகலுமாறு பணிந்தும் நயந்தும் செய்யும் செயல்களுக்காகத் தலைவி ஊடினாள். யானை புலியைத் தாக்குறுதல் மேற்கோள்கள்.

**தோழி தலைவனிடம் வரைவு கடாவியது**

வேங்கை கமழும் சிறுகுடி என அதுவே பகற்குறியின் குறியிடமாகத் கொண்டமை தோழி நினைவு கூர்ந்தாள். விசும்பு காணாமையின் திசை அறிதலும், நீர் பரந்து ஒழுகுதலால் நிலம் அறிதலும், எல்லை சேறலால் நெறியறிதலும், ஒலியின்றி ஊர் துஞ்சுதலால், ஊரிடம் அறிதலும், அரிதாகும்நிலை கூறித் தோழி தலைவனை இரவுக்குறியின் பயனின்மை காட்டி, வரைவு கடாவியதாக குறுந்தொகை 355ம் பாடல் விளக்கப்பெற்றது.

**தோழி தலைவன் கேட்கும் வண்ணம் தலைவிக்குக் கூறியது**

தினையின் ஒருவகையாகிய, அழகிய சிறிய தினையைக் காவல் புரிகின்ற, பரண்மேல் இருப்பவன், எறிகொள்ளியை வீசி எறிய, அதனைக் கண்டு அஞ்சி நீங்கிக் சென்ற யானை இருள்கெட வீழ்கின்ற விண்மீன்களின் ஒளியைக் கண்டு அஞ்சும். இத்தகைய மேகங்கள் தவழ்கின்ற மலையையுடைய, நாட்டின் தலைவன் நின்னைத் தழுவுவதற்கு முன்பு, பருத்து எழுச்சியுடையவாய் விளங்கிய நின்னுடைய தோள்கள், தன்னையே வெறுத்துக் கொள்ளும் அளவு துன்பத்தால் வருந்திய துயிலுதல் இல்லாத மையுண்ட கண்களில் நீர்த்துளி, வாய்க்காலாய்க் கீறி ஒழுக, மென்மையுடைய ஆதலால் நெகிழ்ந்தன. அவை முன்பு பெண்பாலாகிய யானும் விரும்பும் வண்ணம் திரட்சியுற்று, நல்லன என்னும் பாராட்டுரையை நிலையாகப் பெற்றன.

இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னரும், பின்னரும் தலைவியின் நிலையைக் கூறுவதாக குறுந் 357ம் பாடல் அமைகின்றன. தலைவன் புணர்ந்து

தணந்தபின் தலைவியின் கண்கள் நீரைப் பெருக்கின. தோளின் பணைத்த எழில் அழிவதாயிற்று. தலைவியின் கண்ணும் தோளும் நல்ல எனக் கூறுமாறு இல்லை எனச் சிறைப்புறத்தானாகிய தலைவனுக்கு உணர்த்தி தோழி அவனை வரைந்து கொள்ள வேண்டினாள்.

பரண்மேல் இருப்பவன் எறிகொள்ளியைக் கண்டஞ்சி ஓடின யானை, விண்ணிலிருந்து விழும் எறிகற்களைக் கண்டும் அஞ்சி ஓடுவதாயிற்று. வரைவுடன்படாத தமரைக் கண்டஞ்சிய தலைவன் தனக்கு நலம் பயப்பன கூறும் சான்றோரையும் கண்டு அஞ்சுவதாயினான்.

தினைப்புனத்தைக் காப்பதற்கு மரங்களின் மேல் பரண் அமைத்து அவற்றில் நின்று எறிகொள்ளி வீசி யானைகளைத் துரத்தும் செயல் இதில் கூறப்பட்டுள்ளது.(குறள். 357)

**தலைவியை மணம் முடிக்க அடைந்த அயலாரை தோழி நகையாடிக் கூறியது**

பலாமரத்தில் பழங்களை உண்பதற்காக அடைந்த திரண்ட கூட்டமாகிய கருங்குரங்குகள், குறவன் சிலைக்கின்ற வில்லில் இருந்து, தமக்கு நேராகப் புறப்பட்டுவரும் அம்பிற்கு அஞ்சி, மலைச்சாரலில் வளர்ந்துள்ள பெரிய திண்ணிய மூங்கிலும், நீண்டகுழல் மூங்கிலும் போர் உற்ற குதிரையைப் போல உயர எழுந்து, அசையுமாறு பாயும். இத்தகைய பெரிய மலையடுக்குகளையுடைய நாடன், எந்நாளும் இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த நாள்

போன்ற நட்பினையுடையவன். இவ்வாரவாரத்தையுடைய ஊர், நமக்கு இனன் ஆகாத புதியவர்களை உடையதாகும்.

பலாவின் சுளையை அருந்த இருக்கும் குரங்குகள் கானவன்வில்லினின்றும் புறப்பட்ட அம்பின் ஓசையைக் கண்டு அஞ்சிப் புறத்தே ஓடி ஒளித்தல் போல, தலைவியை மணம் முடிக்க அடைந்தஅயலார், தலைவன் வரைவொடு வரும் முரசொலி கேட்டு ஓடி ஒளிந்தனர் என்பதைக் குறிப்பதாகும்.

வில்லிலிருந்து அம்புகள் தம்மைக் குறித்து வருதலைக் கண்டஞ்சிய குரங்குகள், மூங்கில் விசைத்து எழுமாறு தாவி ஓடி ஒளிந்தன. 'ஆர்கலை' என்ற தொடர், உண்பதற்காக இருந்த குரங்குகள் என்று எதிர்காலம் உணர்த்தும். பலநாள் தம்முடன் பழகிய தலைவன் உள்ளபோது, புதியராக வந்தாரை இவ்வூர் இன்று உடையதாகின்றது என்று தோழி நகையாடிக் கூறினாள். (குறுந். 385).

246-ம் பாடல் மட்டும் நெய்தல் திணையாக உள்ளது.

### தலைவி தெய்வத்திற்கு பராஅயது

ஊர் மன்றத்தில் உள்ள கடம்ப மரத்தில் உறைகின்ற, அச்சம் செய்தலில் பழமை வாய்ந்த கடவுள் கொடுமையுடைய யாரைக் கொல்லும் என்று கூறுவர். குன்றுகள் பொருந்திய நாட்டின் எம் தலைவர், சிறிதும் கொடுமையுடையாரல்லர். அவர் தமைப் பிரியலாகாது என்பதற்காக என்னுடைய நுதல், பசலை பூத்தது. பிரிந்தால் உள்ளம் நெகிழும் என்பதைக் காட்டுவதற்காக என்னுடைய பெரிய தோள்கள் மெலிந்தன.(குறு. 87)

**தலைவி தூதுவர்க்குக் கூறியது**

தலைவன் தலைவியைத் தனி விடுத்துப் பரத்தையில்லில் இருந்தான். தன் மனைக்குத் திரும்பும் விருப்புடன் தன் தூதுவர்களைத் தலைவிபால் அனுப்பினாள். அங்ஙனம் சென்ற தூதுவர்கட்குத் தலைவி கூறுகிறாள்.

‘‘புலி கொல் பெண்பார் பூ வரிக் குருளை
வளை வெண் மருப்பின் கேழல் புரக்கும்
குன்று கெழு நாடன் மறந்தனன்
பொன்போல் புதல்வனோடு என் நீத்தோனே”
(ஐங்.கேழற்பத்தில்.265)

புலியால் கொல்லப்பட்ட பெண்பன்றியின் அழகிய வரிகளைத் தம் மேனியிற்கொண்ட குட்டிகளை அவற்றின் தந்தையாகிய வளைந்த வெண்மையான பற்களைக் கொண்ட ஆண்பன்றி பேணிக்காக்கும் தன்மையுடைய குன்றுகள் பொருந்திய நாட்டை உடையவன் தலைவன். என்னை அறவே மறந்தான். பொன் போலும் பெறுதற்கு அரிய புதல்வனோடு என்னை விட்டுச் சென்றான்.

தம் முன்னோர்க்கு அருங்கடனிறுக்கும் தகுதிப்பாடு மிக்க அரும் பெறல் செல்வமாம் மகனையும், அத்தகு மகனைத் தனக்கு ஈன்று கொடுத்த தன் மனைவியையும் அறவே மறந்து காம இன்பம் நாடிப் பரத்தையர் மனையில் தங்க

ஒருப்பட்ட ஒருவனுக்காகத் தூதுவந்த நும் அறிவுதான் என்ன? என்று தலைவி தன் வெறுப்பை வெளியிட்டாள். மேற்கோள்

(i) புதல்வனைப் பொன்போற் புதல்வன் எனல்

“தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்

பொன்போற் புதல்வன்” (புறம். 9)

(ii) “புகழா வாகைப் பூவின் அன்ன

வளை மருப்பு ஏனம்” (பெரும். 109-110)

**தலைவன் வரும் வழியின் அருமை**

“வான் தோய் வெற்ப சான்றோய் அல்லை - எம்

காமம் கனிவது ஆயினும், யாமத்து

இரும் புலி தொலைத்த பெருங கை யானை

வெஞ்சின உருமின் உரறும்

அஞ்சுவரு சிறு நெறி வருதலானே” (நற். 353)

இரவில் கரிய புலியைக் கொன்ற சினத்தால் யானை இடி முழக்கும். அத்தகைய அச்சம் தரும் யாமத்தில் எம்பால் உள்ள காமத்தின் காரணமாக யாரும் வருவதற்கு அஞ்சும் சிறிய கொடி வழியின் வருதலால் நீ சால்புடையை அல்லை. எனவே இவ்வாறு வருதலை நீக்கி வேறு தக்கதொன்றினை செய்வாயாக என எனத்தோழி தலைவனிடம் கூறினாள்,

களிறு புலியைத் தாக்கும் சாரல் என்பது“சிறுகட்பெருங்களிறு வயப்புலி தாக்கித் தொன் முரண்சோரும் துன்னரும் சாரல்” (குறுந்.88.2-3) என்பதாலும், தலைவன் சான்றோன் அல்லன் என்பது

(நற். 283, 8-9), (குறுந். 102.4)

என்பனவற்றால் அறியலாம்.

**தலைவியை இற்செறித்தல்**

நற்றிணையில் 368,373,376 ஆகிய பாடல்களில் இற்செறிப்பு கூறப்பட்டிருக்கிறது.

“பெரும் புனம் கவரும் சிறு கிளி ஓப்பி,
கருங் கால் வேங்கை ஊசல் தூங்கி,
கோடு ஏந்து அல்குல் தழை அணிந்து, நும்மொடு
ஆடினம் வருதலின் இனியதும் உண்டோ?
நெறி படு கூழைக் கார் முதிர்ப்பு இருந்த
வெறி கமழ் கொண்ட நாற்றமும், சிறிய
பசலை பாய்தரு நுதலும், நோக்கி,
வறிது உகு நெஞ்சினள், பிறிது ஒன்று சுட்டி,
வெய்ய உயிர்த்தனள் யாயே-
ஐய! அஞ்சினம், அளியம் யாமே! ” (நற். 368)

தலைவியை விரைந்து மணம் செய்து கொள்ளுமாறு தலைவனிடம் தோழி கூறினாள். ஐயனே! நாங்கள் உன்னுடன் தினைப்புனம் காத்தும், ஊசலாடியும், அருவியாடியும் விளையாடி மகிழ்ந்தோம். எனினும் எங்களிடம் ஏற்பட்டுள்ள தோற்ற வேறுபாடு கண்டு அன்னை மிகவும் சினம் கொண்டுள்ளான். ஆகவே நாங்கள் இச்செறிக்கப்படுவோம் என்பதைக் தலைவனுக்குக் கூறினாள் தோழி.

பெரிதாக விளங்கும் தினைப்புனத்தில் உள்ள தினைக் கதிர்களைக் கொய்து கொண்டு செல்லும் சிறிய கிளிகளை விரட்டி விட்டுக்கருமையான அடிப்பக்கத்தைக் கொண்ட வேங்கை மரத்தில் தொடுத்த கயிற்று ஊசலில் ஏறி ஆடிப் பக்கம் உயர்ந்த அல்குல் மறையத் தழையுடை பூண்டு தலைவனுடன் அருவியாடி வருவதைவிடவும் வாழ்க்கையில் இனியதாகப் பெறுதற்கு ஒன்றும் இல்லை. நெறிப்பாக அமைந்த கருமைமிக்கிருக்கும் கூந்தலில் நறுமணம் கமழும் புதுநாற்றத்தையும், நெற்றியின் கண்பசலை பாய்ந்திருப்பதையும் உற்றுப் பார்த்து அறிந்த அன்னை வேறொன்றைக் குறித்து நினைந்தாள் போலப் பெருமூச்சு எறிந்தாள். அதனால் நாங்கள் இற்செறிக்கக் கூடும் எனத்தோழி கூறினாள்.

களவு நீட்டிப்பதில் எங்கட்கு ஒன்றும் தடையில்லை என்பாள் அன்னை ‘வெய்ய உயிர்த்தனள்’ என்றாள்.

அறிகரி கூறி அறிந்தேன் நின் களவு எனக்கூறுவதற்கு வழியின்மையால் ‘பிறிதொன்று எட்டி உயிர்த்தனள்’ என்றாள். கிளி ஓப்பியும், ஊசல் தூங்கியும், தழை அணிந்தும் பெறும் இன்பமெல்லாம் நிலையானவை

அல்ல. ஆகவே வரைந்து கொள்வதை எண்ணிக் கொள்வாயாக என தோழி அறிவுறுத்தினாள்.

(i) தினைப்புனக் காவற்கடமை பூண்டபூண்டமகளிர் பல விளையாட்டுகளிலும் ஈடுபடுதலைக் குருவி கிளி கடிந்தும் குன்றத்துச் சென்று வைகி அருவி ஆடியும் அஞ்சுனை குடைந்தும்....(சிலப்-வேட்டுவரி) என்பதால் அறியலாம்.

(ii) தலைவியின் நுதல் பசத்தல்

(குறுந். 48:5,205:7)

(நற் 73:10,108:8,133:3,167:11,247:7-8)

(ஐங்.55:4,67:5,105:4)

(iii) கூந்தலின் நறுமணம்

(குறுந். 116:1:4, நற்.137:1)

முன்றிற் பலவின் படு சுளை மரீஇ,

புன் தலை மந்தி தூர்ப்ப, தந்தை

மை படு மால் வரை பாடினள் கொடிச்சி,

ஐவன வெண்ணெல் குறூஉம் நாடனொடு

குருடைச் சிலம்பின் அருவி ஆடி,

கார் அரும்பு அவிழ்ந்த கணி வாய் வேங்கைப்

பா அமை இதணம் ஏறி, பாசினம்

வணர் குரற் சிறுதினை கடிய,

புணர்வதுகொல்லோ, நாளையும் நமக்கே?”(நற். 373)

தலைவன் சிறைப்புறத்தானாக நிற்பதை அறிந்து தோழி தலைவியிடம், “தலைவியே நின் மெய் வேறு பாடெல்லாம் அன்னை அறிந்து இற்செறிக்கக் கருதினாள். எனவே இதுவரையில் காதலனொடு நாம் பயின்றது போல நாளை இயலாது” எனக் கூறினாள் தோழி.

“முறஞ்செவி யானைத் தடக் கையின் தடைஇ
இறைஞ்சிய குரல் பைந் தாட் செந் தினை,
வரையோன் வண்மை போல, பல உடன்
கிளையோடு உண்ணும் வளைவாய்ப் பாசினம்!
குல்லை, குருவி, கூதளம், குவளை,
இல்லமொடு மிடைந்த ஈர்ந் தன் கண்ணியன்,
சுற்று அமை வில்லன், செயலைத் தோன்றும்
நல் தார் மார்பன், காண்குளின், சிறிய
நற்கு அவற்கு அறிய உரைமின், பிற்றை
அணங்கும் அணங்கும் போலும்? அணங்கி
வறும் புனம் காவல் விடாமை
அறிந்தனிர் அல்லிரோ, அறன் இல்யாயோ?” (நற். 376)

தலைவி இற்செறிக்கப்பட்டதைச் சிறைப்புறமாக வந்திருக்கும் தலைவனுக்கும் உணர்த்த முயலும் தோழி கிளிகளுக்குக் கூறுவதைப் போல் கூறினாள். “கிளியின் இனமே! அன்னை எம்மை இற்செறித்தமை அறிந்தீர்!

இனி வெறியாட்டும் நிகழும் இச்செய்திகளை எம்தலைவரைக் காணில் கூறுங்கள்.' என்று கூறினாள்.

தலைவி இற்செறிப்புற்றாள் இனி வெறியாட்டு நிகழவும் கூடும். இந்நிலையில் களவு தொடர இயலாமை கூறி வரைந்தெய்துக என்பாள் கிளிகட்குக் கூறுவாள் போலக் கூறினாள். தலைவன் சிறைப்புறத்தே நிற்க, கிளிகட்கு உரைப்பதோர் பான்மையின் உரைத்தாள்.

(i) யானையின் கை போலத் தினைக்கதிர் விளைந்திருத்தலைப்

"பைந்தாட் செந்தினை மடப்பிடித் தடக்கை அன்ன

பால்வார்பு கரிக் குறட்டிறைஞ்சிய செறிகோட் பைங்குரல்"

(குறுந். 198:3-4)

என்பதால் அறியலாம்.

(ii) தலைவன் பல மலர்களைச் சூடி வருதல்

"மலையவும் நிலத்தவும் சினையவும் அனையவும்

வண்ண வண்ணத் மலராய்பு விரை இய

தண்ணுறுஞ் தொடையில் வெண்போழ்க் கண்ணி

நலம்பெறு சென்னி நாமுற மிலைச்சி" (குறிஞ்சிப். 113-16)

என்பதால் அறியலாம்.

## சிறைப்புறம் (நெய்தல்)

கழுத்துப் பகுதியில் சிறிது வெண்மை நிறமுடைய காக்கை, பெரிய கடலின் கரைப்பகுதியில் உள்ளது. யானைக் கன்றின் செவியைப் போல

விளங்கும் நெய்தலின் இலைகளை அது கலக்கி, குளிர்ந்த அக்கழிநீர்ப் பகுதியில் இரையைத் தேடி, ஒரு நாளின் பாதியாகிய பகற்பொழுது முழுவதும் துழாவிக் கொண்டிருக்கும் அப்பகற்பொழுதில், இளையர் துணை ஏதும் இன்றித்தனிமையில் ஒரு தேர் மட்டும் வந்து, திரும்பிச் சென்று விட்டது. என்று பிறர் கூறுவர். அச்சொல்லைக் கேட்ட அன்னை, என்னைக் குறித்துத் தனக்குள்ளே ஆராய்வாளாயினாள். என்னை வருத்துவதாயினாள் தலைவனின் தேர்வந்து பெயர்ந்துழி யானேயன்றி, பின்னிவிடப்பட்ட கூந்தலையுடையவர்களும், அழகுடையவர்களும், ஆகிய பிறர் இருந்தனர். அவரெல்லாரும், தம்மை வருத்துதல் இல்லாத தாயரால் நல்வினையுடையவர் ஆவர்.

பகற்பொழுதெல்லாம், இரைதேடிக் காக்கை துழாவுதல், தலைவியைப் பெற தலைவன் கழிக்கானலில் காத்திருந்தமையைக் குறித்தது.

தாயரின் இற்செரிப்போ, வசைமொழியோ பெறாமல், நலன் இழவாமல் இளையரும், மடவரும் உய்ந்தனர். ஆனால் 'நான் மட்டும், நலன் இழந்து இற்செரிப்பும், வசை மொழியும் பெற்று தாயராலும் இகழப்பட்டு, தலைவர்க்கும் இன்னாது செய்பவளாகத் தீவினையுடையவளாக ஆயினேன்' எனத்தலைவி வருந்தினாள். (குறுந். 246)

### தலைவன் தலைவியை மணந்து கொள்ள தேரூர்ந்து வருதல்

"அன்னாய், வாழி! வேண்டு, அன்னை நம் ஊர்ப்

பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்

குடுமித் தலைய மன்ற

நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே" (ஐங். 202)

நம் காதலனாகிய நெடிய மலைநாட்டுக்குத் தலைவன் தேரை ஈர்த்து வரும் குதிரைகளும் அந்த ஊரில் உள்ள அந்தண சிறார் போலவே தாமும் குடுமித் தலையை உடையவாயின. அதனைக் காண்பாயாக எனத் தோழி அன்னையிடம் கூறுகிறாள்.

(i) 'மானுளை அன்ன குடுமி' (புறம். 310)

(ii) 'நிரல் இயைந்து ஒன்றிய செலவின் செந்தினைக்

குரல் வார்ந் தன்ன குவவுத் தலை நல்நான்கு

வீங்கு சுவல் மொசியத் தாங்கு நுகம் தழீஇ' (அகம். 400)

**அறத்தொடு நிற்றல்**

"அன்னாய், வாழி! வேண்டு, அன்னை! என்னை-

தானும் மலைந்தான், எமக்குத் தழை ஆயின,

பொன் வீ மணி அரும்பினவே-

என்ன மரங்கொல்" (ஐங். 201)

தலைமகள் ஒரு காளையைக் காதலித்துக் கற்புக்கடம் பூண்டது அறியாது அயலவர் பெண் கேட்டு வந்தனர். அதனை அறிந்த தலைவி தன் நிலையைத் தன் தாய்க்கு உணர்த்தும் வகையில் தோழியிடம் கூறியது.

மேற்கோள்

(i) வேங்கையின் வீயும் அரும்பும்

மன்ற வேங்கை மணநாட் பூத்த

மணியேர் அரும்பின் பொன்வீ தாஅய் (அகம். 232)

**செவிலிக்குத் தோழி அறத்தொடு நிற்றல்**

(i) "அன்னாய், வாழி! வேண்டு, அன்னை! என் தோழி

நனி நாண் உடையவள்; நின்னும் அஞ்சும்;

ஒலி வெள் அருவி ஓங்கு மலை நாடன்

மலர்ந்த மார்பிற் பாயல்

தவ நனி வெய்யள், நோகோ, யானே" (ஐங். 205)

என் தோழி மிகவும் நாணமுடையவள், மேலும் நின்னையும் பெரிதும் அஞ்சுகின்றனள், ஒலியொடு வீழும் வெள்ளிய அருவியினையுடைய உயர்ந்த மலைநாட்டிற்கு தலைவன் இவள் காதலன், அவனது அகன்ற மார்பிடத்தே கிடந்து துயிலுதலை இவள் மிக விரும்புகிறாள். இவள் நிலைக்காக நானும் வருந்துகிறேன்.

(i) "அன்னாய், வாழி! வேண்டு, அன்னை! நம் படப்பைப்

புலவுச்சேர் துறுகல் ஏறி, அவர் நாட்டுப்

பூக்கெழு குன்றம் நோக்கி நின்று,

மணிபுரை வயங்கு இழை நிலைபெறத்

தணிதற்கும் உரித்து, அவள் உற்ற நோயே" (ஐங். 210)

தலைவி மெலிவுக்குத் தெய்வக் குற்றம் காரணம் என்று நினைத்து வெறியெடுக்க முற்பட்டனர். தமர் ஆகவே அதனைத் தடுத்து, உண்மையை வெளிப்படுத்துகிறாள் தோழி. தலைவி உற்ற நோய்க்கு அவள் ஒரு மலை நாட்டுத்தலைவன் மேற்கொண்ட காதலே காரணம் என்பதைக் கூறுகிறாள் தோழி. அத்தலைவனுக்கே அவளை மணம் செய்து கொடுத்தலே இவள் நோய்க்குரிய தீர்வாகும், என்கிறாள் தோழி.

(i) ‘அவர் நாட்டுக் குன்றம் நோக்கினென் தோழி

பண்டை யற்றோ கண்டிசின் நுதலே’ (குறுந். 249)

“சாத்த மரத்த பூழில் எழு புகை

கூட்டு விரை கமழும் நாடன்

அறவற்கு எவனோ, நாம் அகல்வு? அன்னாய்” (ஐங். 212)

தலைவன் தலைவியைத் தனக்குத் திருமணம் செய்து கொடுக்கும்படி வேண்டும் பொழுது, தலைவியின் பெற்றோரும் பிற உறவினரும் மறுத்தனர். அப்பொழுது அவனுக்கும் தலைவிக்கும் இடையே ஊழால் ஏற்பட்ட காதலுறவு உண்டு என்பதைத் தோழி செவிலிக்கு அறிவிப்பாள்.

**குறிஞ்சிக் கலியில் அறத்தொடு நின்றமை**

குறிஞ்சிக் கலியில் 39-ம் செய்யுள் தோழிக் கூற்றாக அமைந்துள்ளது. இது அறத்தொடு நிற்றல் என்று கூறப்படும். தலைவி - தலைவன் களவொழுக்கத்தில், தலைவியின் தந்தை தனயர் முதலான தமர்,

திருமணத்திற்கு மறுப்புக் கூறிய நிலையில் தோழி அறத்தொடு நிற்க வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாயினர். தலைவியின் களவொழுக்கத்தைச் செவிலித் தாய்க்குத் கூறினாள். அவள் நற்றாய்க்கு அறத்தொடு நின்று அறிவித்தாள். நற்றாய் தன்னையர் முதலானோர்க்கு அறத்தொடு நின்றாள். இறுதியில் தனயர் திருமணத்திற்கு உடன்பட்டனர். இதனைத் தோழி தலைவிக்குக் கூறினாள். விரைவில் திருமணம் முடிதற் பொருட்டுத் தெய்வத்தைப் பரவினர்.

## குறிஞ்சிப் பாட்டில் அறத்தொடு நின்றமை

“அன்னாய் வாழிவேன் டன்னை ஒண்ணுதல்
ஒலிமென் கூந்தல்என் தோழி மேனி
விறல்இழை நெகிழ்ந்த வீவருங் கடுநோய்
அகலுள் ஆங்கண் அறியுநர் வினாயும்
பரவியுந் தொழுதும் விரவுமலர் தூயும்
வேறுபல் லுருவிற் கடவுட் பேணி
எய்யா மையலை நீயும் வருந்துதி” (1-8)

தலைவியின் உடலில் அணிந்துள்ள சிறப்பான அணிகலன்கள் நெகிழ்ச்சியடைந்து விழுந்தது கண்டு இவள் நோயுற்றிருக்கிறாள், என்று நினைத்துப் பெரிய ஊரில் உள்ள குறிகூறுவதில் வல்லவர்களையும், கட்டுவிச்சியையும். வேலனையும் அணுகிச்சென்று என் மகளின் உடல் நோய்க்கான காரணத்தைக் கூறுங்கள் என்று தாய் கேட்க, அவர்கள் இது தெய்வத்தால் ஏற்பட்டது என்று கூறினார்கள். உடனே இறைவனைப் போற்றி

வாழ்த்தியும் வணங்கியும் பலவிதமான மலர்களைத் தூவி வழிபட்டும் நறுமணப் பொருள்களைக் காணிக்கையாகச் செலுத்தியும் தலைவியின் நோய் நீங்கவில்லை.

ஆகவே தலைவி ஒரு ஆடவன் மேல் காதல்கொண்ட விதத்தை பக்குவமாக எடுத்துக்கூறுகிறாள் தோழி. குறிஞ்சிப்பாட்டு முழுவதும் அறத்தொடு நிற்றல் நிலையில் வருகிறது.

பிறர் நெஞ்சு புகாக்கற்பு நெறிப்பட்ட பெண்ணின் வாழ்வினுக்கு இடுக்கண் வருதல் ஆகாது என்ற அறத்தொடு நிலையை ஆரிய அரசன் பிரகதத்தனுக்கு உணர்த்த கபிலர் பாடிய நூல் குறிஞ்சிப் பாட்டு எனப்படும்.

## தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றமை

தலைமகளை மகட்பேசிடச் சான்றோரை அனுப்பினான் தலைவன். ஆயின் அவள் தமர் மறுத்தனர். அது கண்டு தோழி அவன் பெருந்தகுதியை செவிலிக்கு அறிவித்து அறத்தொடு நின்றாள்.

அவரைக் காய்களை வயிறார உண்ட பெண்குரங்கு, வணிகர் கையாளும் பையைப் போலப் பருத்துக் காணப்படும் மலைநாடன் விரும்புனானெனில் பசுப்போல் பெண்டிதர் பலரையும் தன் பெண்டாகப் பெற வல்லான். ஆயினும், அவன் தலைவிக்குப் பழைய கேள் ஆதலின் பிறர் யாரையும் விழையானாய் நம் பெண்ணிடத்தே தன் அருளைப் பொழிந்தான்.

**தோழி தாய்க்கு கூறியது**

தோழி தானே தலைவியைத் தலைவனுடன் அனுப்பினாள். ஆதலின், அதன்பிறகு நிகழ்ந்த செயல்களை ஆய்ந்து, தலைவன் மணந்த செய்தியை அறிந்து தாய்க்கு உரைத்தாள்.

**தொகுப்புரை**

கபிலர் பாடல்களில் காதல்நெறி என்ற இயலில் தலைவன் தலைவி இருவரும் புனல் தரு புணர்ச்சியால் ஒன்று படுகிறார்கள். தங்கள் விருப்பப்படியே திருமணம் நடக்க வேண்டும் என்று நினைத்து கொள்கிறார்கள். ஆனால் அதற்கு தமர் முதலியோர் மறுப்பு தெரிவிக்கும் போது, அவர்களின அன்பு வாழ்க்கையில் அதாவது களவு வாழ்க்கையில் சில சிக்கல்கள் ஏற்படுகிறது. ஆகவே அச்சிக்கலைத் தீர்ப்பதற்காக தோழி, பாங்கன் போன்றோர் உதவி புரிகிறார்கள்.

தலைவன் தன் நெஞ்சுக்குள்ளே வருந்திக் கூறுவதும் அவ்வருத்தத்தை தோழி, பாங்கன் போன்றோர் உதவுகிறார்கள்.

தலைமகளைத் தமர் பேசிட சான்றோரை அனுப்பினான் தலைவன். அதற்கு தலைவியின் தமர் மறுத்தனர். உடனே தோழி அறத்தொடு நிற்பாள். நம் தலைவி ஒரு காளையை விரும்பி கற்புக்கடம் பூண்டாள். ஆகவே அவளுக்கு அலர் நேராதவாறு, செல்வ செழிப்புமிக்க தலைவனுக்கே திருமணம் செய்து வைக்கும் படி கேட்டுக் கொள்வாள். இவ்வாறு அகத்திணையில் பல காதல் உணர்வுகளையும், நெறிகளையும் பற்றி மேற் கூறப்பட்ட கருத்துக்களை மிகவும் சிறப்பாகவும் விளக்கமாகவும் இவ்வியலில் விளக்கப்பட்டிருக்கின்றன.

பதிற்றுப்பத்து

வெற்றிச்சிறப்பும் கொடைச்சிறப்பும்

சேரன் பகைவரை வெல்லுதல்

வெற்றிச் சிறப்பு

செல்வக் கடுங்கோ வாழியாதனின் செல்வச் சிறப்பு

செல்வக் கடுங்கோ வாழியாதனின் கொடைச் சிறப்புகள்

செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் பரிசில் பெற செல்லும் விதம்

மன்னர்கள் நடத்தும் விழா

சேரனின் பிரிவால் வருந்தும் பெண்கள்

சேரனின் தாளினது நிழலில் வாழும் வீரர்கள்

பதிற்றுப் பத்தில் கபிலர் பாடல்களில் பண்டைய வழக்கம்

பாடிப் பெற்ற பரிசில்

பதிற்றுப்பத்து 7-ம் பத்தின் பதிகம்

செல்வக் கடுங்கோ வாழியாதன் குறிப்பு

சேரனுடைய அருங்குணங்கள்

சேரன் பெருந்தேவியின் சிறப்பு

கொடை வள்ளல் பாரி

தொன்மை மரபு

சங்க இலக்கிய பெருவழக்கு

தமிழ் நாகரிகம்

குருவி

பண்டைக் காலத்து நம்பிக்கை

நன்மாந்தர் பண்பு

பண்பாடு

தலைவனின் நாட்டின் வளம்

நாட்டுவளம்

பிற ஆசிரியர் கருத்து

தலைவன் நாட்டு வளம் குறிஞ்சிகலியில்

தலைவன் நாட்டின் வளம்

தலைவனின் பண்புகள்

தலைவன் நாட்டின் இயற்கை

பண்டைத் தமிழர் வாழ்வியல் கூறு

தலைவியின் குடிச்சிறப்பும் செல்வச் சிறப்பும்

பண்பாடு

பண்பாடு

குறிப்பு

தலைவியின் அரிய பண்புகள்

அபூர்வ செய்தி

தொகுப்புரை

## பதிற்றுப்பத்து

பதிற்றுப்பத்தில் ஏழாம்பத்து கபிலர் பாடியதாகும். இது புறக் கருத்துக்களைக் கூறுவதாகும். ஏழாம் பத்தில் செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியிருக்கிறார்.

## வெற்றிச்சிறப்பும் கொடைச்சிறப்பும்

பலா மரத்திற் பழுத்த பசிய புண்பட்ட வாய்போல் வெடித்த பழத்திலிருந்து அரித்து விழுகின்ற தேனை, காற்றானது வீசுகின்ற பறம்புநாடு பொருந்திய பெருவிறலையுடையவன். சித்திரத்தைப் போன்ற தொழில் புனைந்த நல்ல மனையின் கண்ணேயுள்ள கொல்லிப் பாவையைப் போன்ற வடிவையுடைய நல்லோருடைய கணவன். பொன்னைப் போன்ற நிறத்தையுடைய பூவினையும், சிறிய இலைகளையும், பொலிவற்ற அடிமரத்தினையும் உடைய உன்னமரத்துக்குப் பகைவனாகிய எம்முடைய அரசன் பூசிப் புலர்ந்த சந்தனத்தையும் வற்றாத ஈகையையும் மகளிர்க்கு மலர்ந்த மார்பினையும் பெரிய கொடையையுமுடைய பாரியைப் போன்றவன். முழவு என்னும் வாத்தியம் தன்னிடத்தே பூசிய மார்ச்சனை மண் காயவும் பரிசிலர் துன்பமடையவும் மீண்டு வராத உயர்ந்த இடத்திற்குச் சென்றான். நீ எம்மைக் காப்பாற்று என்று இரப்பேனாகி வாரேன். நின் பெருமையைக் குறைத்துக் கூற மாட்டேன்.

பறம்பு நாட்டில் பருவமன்றியும் பலாக் காய்த்தால் அதன் தேனை உறிஞ்ச வாடைக்காற்று வீசுகிறது.

“பாரியது பறம்பே உழவருழாதன நான்கு பயனுடைத்தே

..........தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க்கும்” (புறநா. 109) 1-8

பாவை என்றது கொல்லிப்பாவை.

“ஓவத்தன்ன வியனுடைய வரைப்பிற் பாவை

யன்ன குறுந்தொடி மகளிர்” (புறநா. 251.1-2)

கொல்லிப்பாவை பேரழகினையுடைய மகளிர்க்கு உவமையாகக் கூறப்படுதல் உண்டு.

**சேரன் பகைவரை வெல்லுதல்**

ஓடை முதலிய ஆபரணங்களை அணிந்து எழுகின்ற பலவாகிய ஆண்யானைகளின் கூட்டங்களோடும் மேகமென்று மயங்குதற்குக் காரணமாக கரிய பெரிய பலவாகிய கேடகம் தாங்கிய படையோடும் கூரிய வாட்படையை வென்ற, கத்தரிக்கப் பெற்ற பிடரிமயிரினையுடையதுமான குதிரைப் படையோடும் வந்து வன்மையையுடைய அரிய மதில்களைப் பக்கத்தே நெருங்கும்படி வளைந்து அவ்விடத்தே சேரனது சேனை தங்கும். பசிய தீப்பொறிகளையுடைய ஒளிபொருந்திய நெருப்பு ஊழியினிறுதிக் காலத்தில் சூரியன் பல உருவங்கொண்டது போன்ற மாயத்தோடு ஒளி திகழப் பெற்று உயிர்களுக்குப் பொறுத்தற்கு இயலாத மயக்கத்தைச் செய்தலோடு ஒலியைச்

செய்து திரிகின்ற ஊழித்தீயின் தன்மையைக் கொள்ளுதற்குக் காரணமான கடிய திறலால் போர்த் துறைகளெல்லாம் முற்ற முடித்த வெற்றியையுடைவன் சேர மன்னன். (செல்வக் கடுங்கோ வாழியாதன்)

தன்னிடத்திலுள்ள நீர் மதிலைப் பொருகின்ற அகழியினையும் மலையைப் போன்ற மதிலையும் தம் பகைவரை வருத்துதலையுடைய பெரிய கையையும் உடையவன். நின்னுடைய பகைவர் வணக்கத்தைச் சொல்லி நின்னை வணங்கித் திறைகொடுப்பராயின அவரது பரந்த இடத்தினையுடைய நாடுகளில் உள்ள புல்லையுடைய அகன்ற முல்லை நிலத்தில் பல பசுக்களைப் பரவச் செய்து வளப்பத்தையுடைய வயல்களில் விளைந்த பயிர்களின்னின்றும் உதிர்ந்த, களத்தில் கடா விடுதலில்லாத தூற்றா நெற்குவியலைக் காஞ்சி மரத்தின் நிழலில் தொகுத்துப்பின் அந்நெல்லை விலையாகக் கொடுப்பர். கள்ளை உண்ணுதலையுடைய வலிய கையையுடைய தொழில் செய்யும் உழவர். நீரினிடத்தே வளர்ந்த ஆம்பற் பூவைத் தலையின் கண்ணே சூடியவராய் அதனிடத்தே மொய்த்தற்கு வரும் ஆடுகின்ற சிறகையும் கோடுகளையும் உடைய வண்டுகளை ஓட்டுதற்கு இடனான புலவர்களால் புகழ்ந்து பாடுதற்கமைந்தனவான அகன்ற இடத்தையுடைய நாடுகள் பாடல் மிக்கன ஆவன.

சேரனின் பகைவர் தம் பகைவரை வருத்துதலையுடைய பெரியகையையுடையராய் வணக்கத்தைச் சொல்லுபவர். வரைபோல் இஞ்சியை அரணாகவுடையராயிருந்தே திரை தருப என்றார்.

1. ‘வரைபோலிஞ்சி’ (பதிற். 16:1)

2. ‘அரியல் ஆர்கை வன் கை வினைநர்’ என்பதால் கள்ளையுண்ணுதலையுடைய வலிய கையுடைய தொழில் செய்யும் உழவர் என்றார். இது “கள்ளா ருவகைக் கலிமகிழ் உழவர்” (அகநா 346. 5) என பிற இடங்களிலும் வரும்.

சிறிய இலையையுடைய உழிஞைப் பூவாற் செய்யப்பட்ட மாலையச் சூடி, கொள்ளை மிகுதியாக உண்ட, தண்ணிய தமிழ் நாட்டிலுள்ள படைகளை நிறைத்து, குன்றைத் தன் நிலையினிலும் தளரச் செய்யும் இடியைப் போலச் சினந்து, ஒரே போர் முற்றுகையினால் சோழனையும், பாண்டியனையும் வென்ற ஒள்ளிய வாளினையும் போரில் விருப்பம் மிக்க சேனையையும் உடைய வெல்லும் போரைச் செய்வான். முன்பு பிறரோடு போர் செய்து வெற்றி பெற்றுப் பின் நினக்குத் தோற்ற வீரர் தம் பகைமை நீங்கி நின்னால் மீண்டும் படைக்கப்பட்டாரைப் போன்றேம் என்று கூறினார் கபிலர். நீயும் நும் குலத்தார்க் குரிய வன்மையால் இன்னும் பல போர்களை வெல்வாய்.

உன் பாசறையினிடத்தே கரிய பெரிய ஆகாயத்திற்பல நட்சத்திரங்கள் ஒளிகெடும்படி சூரியன் தோன்றினாற் போலப் பகைவரது மிக்க மாறுபாட்டைக் கெடுத்த உன் வலிய முயற்சியை வாழ்த்தி காண்பேனாகி வந்தேன் என்றார் கபிலர்.

### வெற்றிச் சிறப்பு

படைத்தலைவர் படைகளை ஆராய, முன்பு வென்றமையால் எடுத்த கொடிகள் விளங்க, விளங்குகின்ற கிரணங்களையுடைய கொம்பென்னும்

வாத்தியத்தோடு வலம்புரி சங்குகளும் ஒலிக்கின்றன பல களிற்று கூட்டத்தின் வரிசை போரை விரும்பித் தம் இருப்பிடத்தை விட்டு திரிகின்றன. போர் செய்யும் இடத்திற்குப் பொருந்தியனவும் விளங்குகின்ற நிணத்தையுடைய கூட்டமாகியனவுமாகிய சிறகுகளை உடைய பருந்துகள், இரத்தத்தை நிரம்ப உண்ண, தலை வெட்டப்பட்ட உடல் மட்டும் மிஞ்சிய ஆண்மை மிக்க கவந்தத்தோடு அழகிய வடிவில்லாத பேய்மகள் கண்டார்க்கு வருத்தத்தைச் செய்தன. நாடு முழுவதும் நடுங்கின. இவ்வாறு வீரர்கள் பல போர்களிலே பல மன்னர்களைக் கொன்றனர். மணம் கமழ்கின்ற பூங்கொத்துக்களையுடைய கொன்றையினது பூவை பனங்குருத்தின் கண் வைத்துத் தொடுத்த கண்ணியையுடையவராகிய, வாளின் வாய் உண்டாக்கிய மாட்சிமைப்பட்ட தழும்பைப் பெற்ற உடம்பினையுடைய வீரர், நெறித்துப் பொருத்திய கொம்பினையும் பெரிய கண்ணையும் உடைய எருத்தோடு வளைந்த தலையையுடைய விலங்குகளையுமுடைய தாழ்ந்த இழிவான இறைச்சியை விற்பாருடைய வெட்டும் அரிவாளால் ஊனைக் கொத்துதலை உடைய மரக்கட்டை எவ்வாறு சிதையுமோ அது போல உடம்பு சிதைந்து பூசிய சந்தனத்தின் அழகை மறைத்த வீரருடைய தலைவன் சேர மன்னன்.

மலை போன்ற யானையின் மேல் எடுத்த வானத்தை அளாவிய வெற்றிக்கொடி, மலையின் மேலுள்ள அருவியைப் போல இடந்தோறும் அசைய, கடல்போலப் பரந்த சேனையினிடத்தே கடிய குரலையுடைய முரசங்கள் காற்றுப் பொருந்திய கடடிலப் போல சருமையுடையனவாய் முழங்க, பகைவரை வெட்டிக்

சிதைத்த வாளையுடைய வீரரோடும். பகைவர் மீது பாய்ந்து வன்மை குறைந்த குதிரை வீரரோடும், ஆராய்ந்து தெரியப்பட்ட போரை விரும்பு தலையுடைய மற்ற வீரரோடும். இறந்த பிணம் உயரும்படி கொன்று பகைவருடைய கெட்ட குடிகளை மீண்டும் அவர் நாட்டிலே வாழச் செய்த வேந்தன் சேரனாவான்.

நிலம் பயனைப் பொழிந்தாற்போல மிக விளைய காலத்தே தவறாமல் மழை பெய்தலால் சூரியன் வெப்பந்தணிந்தாற் போன்று. விளங்க உலகத்திற்குப் பயன் பொருந்திய சுக்கிரனென்னும் கோள் மழைக்குக் காரணமான மற்ற நாள் கோள்களுக்குச் செல்கின்ற நல்ல நாட்களிலே நிற்க, தூமகேது முதலியன இல்லாமையால் ஆகாயம் தன் வடிவம் அகன்றாற் போல விளங்க. நான்காகிய வேறுபட்ட அகன்ற திசைகளும் ஒன்று போலப் பகையின்றி விளங்க, விளங்குகின்ற கிரணத்தையுடைய ஆஞ்ஞா சக்கரத்தையுடைய நின் முன்னோர் நின்னைப் போல் மாறுதல் இல்லாத கொள்கையையுயராதலால் நடுக்கமில்லாமல் இந்த அணு செறிந்த மண்ணுலகை ஆண்டனர்.

சிலர் அரசு செய்யுங்காலங்களில் குறைய விளையும் காலமும் உள்ளதாகக் கூறப்படுகிறது. அவ்வாறில்லாமல் நிலம் பயனைப் பொழிந்தாற் போல மிக விளைய வென்றவாறு, மழை மாதந்தோறும் குறைவில்லாமல் பெய்தலின் வேனிற் காலத்தும் சூரியன் சினம் தணிந்தாற் போன்று தோன்றுகிறது.

மழை உண்பார்க்கு நல்ல உணவுகளை உளவாக்கியும் தான் உணவாய் நின்றும் பசியையும் நீர் வேட்கையையும் நீக்கி உலகினை புதுக்கி நிற்கிறது.

போர்க்களத்திலே ஆண் யானையைச் செலுத்திய தாளையும், குதிரைகளோடு பொருதகாலின் விளிம்பையும் உடைய படைவீரர்களின் தலைவன் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்னும் சேரன் பகைவர் செய்யும் போர் கெடுதற்குக் காரணமான வேல் வெற்றியையும் உடைய வீரர்களின் தலைவன். வண்டு பாட்டைப் பாடுதலில்லாத குளிர்ந்த பாளையினது குவிந்த அரும்பு போன்ற கூர்மையையுடைய வெள்ளிய குருத்தை அணிந்து கொண்டு கண்ணுக்கு இனிதாகிய சுனையிலுள்ள குவளையாகிய நீர்ப்பூவைச் சூடி மதம் மிக்கு, பகையரசருடைய தலைமையை அழித்த வெற்றி உண்டாதற்குக் காரணமான சிறந்த கழலை அணிந்த வீரர்களுடைய தலைவன் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்னும் சேரன் ஆவான்.

சேரன் களிற்றின் மீது அமர்ந்த போது அதனைத் தன் காலால் தூண்டிச் செலுத்துவான். ஆகவே 'களிறு கடை இயதாள்' என்று சிறப்பிக்கப்பட்டான். குதிரையைக் கால் விளிம்பால் தூண்டிச் செலுத்தலின் 'மா உடற்றிய வடிம்பு' என்றார். வீரர்கள் தம் தோளுக்குத் திண்மையுண்டாக்கும் பொருட்டுப் பந்து போன்ற திரண்ட கல்லை மேலே தூக்கிப் போட்டுத் தம் தோளால் தட்டுவர். அப்போது தோளின் திண்மையால் அக்கல் வருந்தும் என்று

கூறப்படுகிறது. ‘கல் அலைத்த தோள்’ என்றார் கபிலர். பகைவர் இடைவிடாது போர் செய்யும் இயல்பினராதலால் ‘உடை நிலை நல் அமர்’ என்றார்.

**செல்வக் கடுங்கோ வாழியாதனின் செல்வச் சிறப்பு**

குதிரைக்கு உளையைச் சூட்டியது அதற்கு போர் வேட்கை பிறத்தற்பொருட்டு.

வெட்டப்பட்ட பிணங்களை இடறுதலால் உண்டான இரத்தத்தாற் சிவந்த கறையை உடைய குளம்பினையும் விரைந்த செலவையுமுடைய நல்ல குதிரைக்கு விரிந்த தலையாட்டத்தைக் சூடிசேரனோடு மாறுபட்ட பகைவரது வீரம் கெடும்படி வஞ்சியாது எதிர் நின்று வென்றவன். நிலையாமை எப்போதும் தம் நெஞ்சில் நிலைபெற்ற வீரருக்குத் தலைவன். விற்படையாளருக்குக் கவசம் போன்றவன். உன்னை அடைந்தோருடைய செல்வமாக இருக்கக் கூடியவன் என்று சேரனைக் கபிலர் சிறப்பிக்கிறார்.

நிலையாமையை எப்பொழுதும் தன் உள்ளத்தில் கொண்டிருக்கும் வீரர் என்பது, அதன் பயன் போரில் தன் உயிர்க்கு அஞ்சாத வீரத்தோடு போர் புரிதலாகும்.

பாணரது குடும்பத்தைப் புரத்தலை வல்லாய். ஏழு முடியாற் செய்த ஆரம் முதலிய ஆபரணங்களை அணிந்து விளக்கமுற்ற புகழ்மிக்க மார்பையுடையவன். சேரனுடைய நாளோலக்கத்தின் செல்வச் சிறப்பை இனிமையாகக் காட்டுகின்றார் கபிலர், இனிய நரம்புக்கட்டையுடைய பாலை

யாழை வாசித்தலில் வல்லவன் பண்கள் எல்லாவற்றுள்ளும் துன்பத்தைச் செய்யும் உறுப்பையுடைய பாலைப் பண்களை மாறி மாறி வாசித்தாற் போலச் சேற்றைச் செய்கின்ற மழையைப் போல அளிக்கும் விழாவின் தன்மையுண்டான செல்வத்தைப் போன்ற மதுவால் மகிழ்ச்சியையுடைய ஓலக்க விருப்பின் கண்ணே வாழ்பவன்.

காலைப் பொழுதில் கூடும் திருவோலக் கத்தின் கண் சேரன் வீற்றிருக்கும் செல்வச் சிறப்பு கூறப்பட்டிருக்கிறது. பதிற்றுப்பத்து 65-ம் பாடலில் சேரனது ஓலக்க வினோதச் சிறப்பும் செல்வச் சிறப்பும் ஒருங்கே கூறினார் கபிலர்.

கோபங்கொண்ட பகைவரது மிக்க மாறுபாட்டைத் தடுக்க வல்லதும் ஒழுங்கான அணிவகுப்பையுடையதும், பகைவரால் குலைத்தற்கு முடியாத படை வகுப்பையும். விடியற்காலத்தே மேகத்தின் கூட்டத்தையுடைய சித்திரத்தை ஒத்த தோற்றத்தையுடைய பரிசைப் படையின் மேலதாகி, எழுகின்ற ஒளிபரவி விளங்குகின்ற வாட்களையுடைய வாள் விழாவையும் உடைய போல் உண்டாகின்றதற்குக் காரணமான வீரர் பனங்குருத்தோடு சேர்த்துத் தொடுத்த வெற்றிக்குக் காரணமான கொற்றவை வாழ்தலையுடைய வாகை மரத்தினது பூக்களையுடைய மலர் மாலையை அணிந்திருந்தனர். இவ்வாறு பனந்தோட்டுடன் தொடுக்கப்பட்ட வாகை மாலையை ஒப்பப் புதலை சூழ்ந்து பூத்த முல்லைக் கொடி விளங்கும். இப்புதலைச் சூழ்ந்த வண்டாகிய பறவை அப்புதரை விட்டுக் காட்டினிடத்தே பிடாமரத்தின் தொடுத்தலையுடைய

பூக்குலையிலே தங்குவதற்கு இடமான உயர்ந்த பளிங்கு கலந்த சிவந்த பருக்கைக் கற்களையுடைய மேட்டு நிலத்தே விளங்குகின்ற ஒளியினையுடைய அழகிய மணியை அவ்விடத்தே வாழ்வார் பெறுதற்கு இடமாகிய ஊர்களையுடைய நாட்டுக்கு உரியோன் செல்வக் கடுங்கோ.

## செல்வக் கடுங்கோ வாழியாதனின் கொடைச் சிறப்புகள்

அறத்தையே கூறி விளங்கிய செவ்விய நாவினையும் விளங்கிய புகழ்ச்சியமைந்த செய்தற்கரிய யாகங்களைச் செய்து முடித்த பெருமையினையும் வேதத்தை ஓதுதலையும் உடைய அந்தணர் அரிய கலங்களைப் பெற்றுக் கொள்வர். நீ அவற்றை நீர் வார்த்துக் கொடுத்தலால். அந்நீர்பட, கரிய சேறு உண்டான மணம் மிக்க முற்றத்தினிடத்தே களிறு தான் நிற்றலை வெறுக்கும் இத்தகைய முற்றத்தையும் ஒழுங்கையும் உடைய புலவர்பொருநர் அந்தணர் என்போருக்கு அன்றிப் பிறர் புகுதற்கு அரிய அரண்மனையின் எல்லையினிடத்தே பரிசு பெறக் கூத்தர்கள் வருவர் அவர்களைக் கண்டால் தாமதிக்காமல் கூரிய அம்பு முதலிய ஆயுதங்கள் உடைய படையை வென்றனவும் கத்திரிகையால் மட்டம் செய்யப்பெற்ற பிடரி மயிரினையுடையனவுமாகிய குதிரைகளையும் விளங்கும் தேர் பூணும் எருதுகளையும் அவற்றிற்கு உரிய இழைகளை அணிந்து கொடுங்கள் என்று அவ்வீதலுக்கு உரியாரை ஏவினான். அந்த ஈதலினிடத்தே அமையாத கொள்கையுடையாதலால் அழகிய நின்னூரிடத்தே, கரிய நிறம் உண்டாகின்ற மலர்களையுடைய கழியில் மலர்ந்த

நெய்தற் பூவினது இதழின் அழகை ஒத்த தோற்றத்தோடு உயர்ந்த மேகத்தைக் காட்டிலும் பெரிய பயனை இரவலருக்குப் பொழிதலை உடையவன்.

வேள்வி முடித்த அந்தணர் அரசரால் அளிக்கப்படும் பெறுவதற்கரிய பேரணிகலன்களை ஏற்பது வழக்கம்.

"கேள்வி முற்றிய வேள்வி யந்தணர்க்கு" (புறநானூறு. 361; 4)

"நூலந்தணர் பொங்கல மேற்ப" (பரி. 11; 79)

அந்தணர்க்குச் சேரன் அணிகலன்களை நீர் வார்த்துக் கொடுக்கும் போது சிறிய அளவினதாகிய நீர் பட்டு அவ்விடம் இருஞ்சேறானமை நீர் பலகால் வீழ்ந்தமை சேரன் அந்தணர்க்கு அளித்த தானத்தின் மிகுதியைக் குறிக்கிறது.

பசியைத் தொன்று தொட்டே உடைய சுற்றத்தாரை அப்பசி நீங்கும் படி செய்த புகழ் மேவிய தோன்றல் சேரன்.

இடியினைப் போன்ற ஓசையையுடைய முரசத்தோடு வஞ்சினத்தைக் கூறி பகைவரது வேலைப் பெற்ற திரளுதலையுடைய போர் கெடும்படி அழித்துக் கொன்று, அவர் முதுகு காட்டி ஓடுதலைப் பெற்ற. பிணங்கள் நெருங்கிய போர்க்களப்பரப்பில், அப்பகைவர் பழைய திறையாகத் தந்த ஆண் யானைகளோடு மரக்காலின் அளவையால் அளந்து உறையிட முடியாத நெல்லாகிய உணவை அளிப்பான் என்று சொல்லுகிறார் கபிலர்.

மலர்ந்த காந்தளினது மலரை இது தெய்வத்திற்குரியதென்று அறிந்தும் அதனை விட்டு நீங்காமல் ஊதிய, விரைந்து பறத்தலையுடைய தும்பியென்னும் சாதிவண்டுகள், அக்காந்தள் மலரிலுள்ள தேனை உண்டன.

அதனால் தம் பறத்தல் இயல்பை இழந்தன. அத்தகைய இடமான புகழ்ச்சி மிக்க நீண்ட மலையாகிய பக்க மலைகள் உயர்ந்த நேரிக்கு உரிய ஒப்பற்றோனாகிய, செல்வத்தையுடைய கோமானை நெடுமொழியாயுடைய சுற்றத்தோடு பாடினையாய்ச் சென்றால், யாழை வாசித்தலின் முறையை அறிந்த கைதேர்ந்த பாணனே கொடுமணம் என்னும் ஊரிலேயுண்டான நல்ல ஆபரணங்களை பந்தரென்னும் பெயரையுடைய பெரிய புகழையுடைய பழைய ஊரினிடத்தேயுள்ள தெளிந்த கடலில் விளைந்த முத்துக்களோடு பெறுவாய். என சேரனின் கொடைத் தன்மை பற்றி கபிலர் சிறப்பாகக் கூறுகிறார். நேரி மலைக்கு தலைவனாகிய செல்வக் கோமான் என சிறப்பாகக் கூறுகிறார்.

### செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் பரிசில் பெற செல்லும் விதம்

வளைந்த கரிய தண்டினையும் இனிய நரம்புக்கட்டு முற்றுப் பெற்றும் இசையில் முதிர்ந்த, இடமுடைய பேரியாழென்னும் யாழின் கண் பாலைப் பண்ணை அமைத்து, சேரனை நினைத்து அவனிடம் பரிசில் பெறச் செல்லுகின்ற பேரறிவு வாய்ந்த இரவலனே! என புலவர்களைப் பார்த்து கபிலர் கூறுகிறார்.

### மன்னர்கள் நடத்தும் விழா

தம் போர்த் திறமையை அறிவித்தற்பொருட்டு வாட்போரினை மன்னர்கள் தம்முள் ஒரு விழாவாகவே நிகழ்த்துவர். எனவே ‘வாளுடை விழவின் மன்னர்’ என்றார் கபிலர்.

**சேரனின் பிரிவால் வருந்தும் பெண்கள்**

சேரனின் காதல் மகளிர் அவன் பிரிவால் உறக்கமில்லாமையால் பசிய பொன்னாற் செய்த இழை நழுவ, உயர்ந்த மண்ணாற் செய்யப்பட்ட மதிலையுடைய நீண்ட அரண்மனையின் எல்லையில் சித்திரத்தை ஒத்த அழகிய வரிகளையுடைய சிலம்பையணிந்த, நோக்கினாரை வருத்துகின்ற அழகையுடைய அம்மகளிரை வசப்படுத்துகின்ற நல்ல மணம் கமழ்கின்ற மார்பினை உடையவன்‘.

**சேரனின் தாளினது நிழலில் வாழும் வீரர்கள்**

காற்று அடிக்கும் குறுந்தடியாக அமையக் கடல் ஒலித்தாற் போல, வேற்று நாட்டினிடத்தே சென்று தங்கிய பாசறையின் நடுவே, மிக்க ஓசையைப் பாசறை முழுவதும் செலுத்துகின்ற ஒலிக்கின்ற ஓசையையுடைய வெற்றி முரசம் மற்ற நான்கு பூதங்கள் விரிதற்குக் காரணமான பெரிய ஆகாயத்தினிடத்தே அதிரும் படி முழங்க, விரும்பத்தக்க சித்திரங்கள் நிலை பெற்ற மதிலை அழித்தல்லது உண்ணுதலைச் செய்யாமற் பலவாக அடுக்கிய பொழுதுகள் பல நீங்கின. அவ்வாறு கழியவும் நெஞ்சு விரும்பிய ஊக்கத்தை உடையவராய், உடம்பு அசையும் படி வந்த ஓய்வினையுடைய பகைவரது உறைவிடத்தைத் தாம் பெற்றுல்லாது வேறு வெற்றியில்லை.

உண்ணாது அடுக்கிய பல பொழுது கழியினும் பகைவர் உறையுளைப் பெற நெஞ்சு பொழுது போர் செய்தலால் உடலானது தளர வருத்தமுற்றனர் வீரர்கள்.

பகைவேந்தரது பட்டத்து யானையின் கோட்டைக் களத்தே தடிந்து கைக்கொண்டனர். 'வேந்து ஊர் யானை வெண்கோடு கொண்டு' என்று குறித்தார். யானைக் கோட்டைக் கள்ளின் விலையாகக் கொடுத்தனர்.

"மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு
பொன்னுடை நியமத்துப் பிழிதொடை கொடுக்கும்"

(பதிற். 30:11-12)

என வரும் அடிகளாலும் அறியலாம்.

**பதிற்றுப் பத்தில் கபிலர் பாடல்களில் பண்டைய வழக்கம்**

குங்குமக் குழம்பால் மகளிர் தம் முலை மீதும் தோள் மீதும் கரும்பு, வில் முதலியவற்றை எழுதிக் கொள்ளுதல் பண்டைய வழக்கம்.

**பாடிப் பெற்ற பரிசில்**

சிறுபுறம் என நூறாயிரம் காணம் கொடுத்து, "நன்றா" என்னும் குன்று ஏறி நின்று, தன் கண்ணிற் கண்ட நாடு எல்லாம் காட்டிக் கொடுத்தான்.

செல்வக் கடுங்கோ வாழியாதன் இருபத்தையாண்டு வீற்றிருந்தான்.

**பதிற்றுப்பத்து 7-ம் பத்தின் பதிகம்**

புலா அம் பாசறை, வரைபோல் இஞ்சி, அருவி ஆம்பல், உரைசால் வேள்ளி, நாள் மகிழ் இருக்கை, புதல் சூழ் பறவை, வெண் போழ்க் கண்ணி, ஏமவாழ்க்கை, மண் கெழு ஞாலம், பறைக் குரல் அருவி; இவை பாட்டின் பதிகம்.

**செல்வக் கடுங்கோ வாழியாதன் குறிப்பு**

சேரமன்னன் செல்வக் கடுங்கோ வாழியாதன் தன் நாட்டில் பல ஊர்களைத் தோற்றுவித்தான். தன் பகைவரைத் தோற்றோடச் செய்தான். பகைவர் அஞ்சத்தக்க சேனைகளோடு பல போர்களை வஞ்சியாது எதிர்நின்று வென்றான். புகழமைந்த பெரிய யாகங்களைச் செய்து முடித்தான். அவற்றைக் செய்யும் பொழுதே பிற அறச்செயற்பாடுகளையும் செய்து முடித்தான். கரிய நிறமுடைய திருமாலை தன் மனத்தின் பொருந்தப் பெற்றான். அத்தெய்வத்திற்கு ஓத்திர நெல் என்னும் ஒருவகை நெல் விளைதலையுடைய ஓகந்தூர் என்னும் ஊரினைத் தேவதானமாகக் கொடுத்து தன் அறநெறியின் அறிவைக் கண்டு தன் புரோகிதனும் மயங்குமாறு செய்தான். வளம் பொருந்திய மனத்தோடு குற்றமில்லாமல் விளங்கினான்.

**சேரனுடைய அருங்குணங்கள்**

தான் ஈந்த பொருட்களைப் பற்றிக் கழிவிரக்கம் கொள்ளான். இரவலர்க்குக் கொடுக்குந்தோறும் தான் அயலாய் இருந்தலாக நினைத்தலேயன்றித் தான் ஈகின்றதாக எண்ணி மகிழ மாட்டான். ஈயுந்தோறும் பெரிய கொடையையுடைவனென உலகத்தாரும் பலரும் சொல்லுகின்ற உரையும் பாட்டுமாகிய நின்னுடைய நல்ல புகழை நின்னிடத்துச் செலுத்துதலால் வந்தேன். ஒள்ளிய வாளால் வெட்டப்பட்ட வன்மையையுடைய களிறுகளையுடைய புலால் நாற்றம் வீசுகின்ற பாசறையிடத்து நிலவைப்

போன்ற வெள்ளிய வேலைப் பாடுகின்ற விறலி முழவின் கண்ணே செலுத்திய தாளத்திற்கு இசைய விடும் எழிற் கையையுடைய விழாவினைப் போன்ற நின்னுடைய ஆரவாரத்தையுடைய ஓலக்கத்தின் கண்ணே வந்தேன் என்று இரவலர்கள் கூறுகின்ற தன்மை உடையவன் சேரன்.

பாரியது குணங்கள் இச்சேரனிடத்தும் காணப்பட்டமையின் உலகோர் அக்குணங்களை எடுத்துக் கூறுவாராயினர்.

வீரர்கள் எல்லாம் போர் செய்து புண்பட்ட மிகுதியாற்புலால் நாறுகின்ற பாசறை என்றானது. இதனால் இதற்கு புலாசம் பாசறை என்பது பெயராகக் கொள்ளப்படுகிறது.

அந்தணருக்குப் பணிதல் அல்லாமல் பிறருக்குப் பணிதலை அறியாதவன். நட்பின் நிலையில் தாழ்வுபடாத மனத்தால் அழகு பொருந்திய மனம் பொருந்திய நின்னொரு நட்புச் செய்தோர்க்கல்லது. கண்ணோட்டத்தால் அஞ்சமாட்டான். வளைந்த வில் உராய்ந்த மணம் பரக்கின்ற மார்பை, மகளிர்க்குப் போகத்தின் பொருட்டு மலர்வித்தலையல்லாமல் பகைவர்க்கு மலர்வித்தலை அறியாதவன். நிலவுலகம் தன் கூறுபாடு எல்லாம் நீங்கும் காலத்தாயினும் நீ சொன்ன சொல்லைப் பொய்த்தலை அறியாதவன்.

பார்ப்பார் என்றது அறம்புரியந்தணரை. ‘அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்’ (தொல் புறத் 30; 1)

“மகளிர் மலைத்தல்லது மன்னர்,

மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப” (புறநானூறு. 10; 9 -10)

செல்வத்தையுடைய அரசே, சேரர் குடியில் வழித்தோன்றலாயுள்ளாய், காற்று அலைகளை உண்டாக்கிய, முதுங்குகின்ற ஓசையையுடைய கடலாகிய எல்லையையும் அகன்ற இடத்தையுமுடைய உலகத்து நன்மக்கள் செய்த அறம் உண்டாயின் அடை அடுத்தலை அறியாத பூக்கள் அரிதாகிய பல ஆம்பல் என்னும் எண்ணும் ஆயிரத்தாற் பெருக்கிய வெள்ளம் என்னும் எண்ணும் ஆகிய எண்களின் அளவுள்ள பல ஊழிகள் நீ வாழ்வாயாக என்றார் கபிலர். சேர மன்னன் வாழ்ந்தால் உலக மக்கள் நன்மை பெறுவார்கள். ஆதலின் இவன் வாழ்வதற்கு அவர்கள் செய்த புண்ணியம் காரணமாகியது. இங்கு சேரனுடைய பல குணங்களையும் ஒருங்கு கூறி வாழ்த்தினார் கபிலர்.

விளையாட்டிடத்தும் பொய் கூறுதலையறியாமைக்குக் காரணமான வாய்மையையும் பகைவரது புறங்கூறும் சொல்லைக் கேளாத, குற்றம் நீங்கிய சிறந்த அறிவையும் உடையவன் சேரன். ஏழரசர் முடியாற் செய்த ஆரமாகிய ஆபரணம் விளங்குகின்ற மார்பை உடையவன். அழியாத கோட்பாட்டையுடைய அமைச்சர் முதலிய சுற்றத்தார் சூழஇருப்ப வேள்விகளைச் செய்ததனால் தேவர்களை உண்பித்தார் சேரன். வேதத்தை ஓதினமையால் உயர்ந்த நிலையையுடைய தேவருலகத்திலுள்ள முனிவரை இன்புறச் செய்தார்.

பெரியோரிடத்தே வணங்கிய மென்மையையும் பகைவர்க்கு வணங்காத ஆண்மையையும் உடைய இளந்துணையாகிய புதல்வர்களைப் பெற்றமையால் நின் குலத்து முன்னோர்களாக பிதிரர்களைக் காப்பாற்றி,

இல்லறத்தார்க்கு உரிய பழைய கடன்களைச் செய்து முடித்த வெல்லும் போரை செய்யும் தலைவனே! கற்பக முதலிய செல்வத்தையுடைய தேவர் வாழும் உலகமும் கேட்கும் படி, இழுமென்னும் ஓசை உண்டாகும்படி கீழே இறங்குகின்ற பறையோசையைப் போன்ற ஓசையையுடைய அருவிகள் பெரியனவாகிய உச்சியையுடைய சிகரங்கள் தோறும் நிறைந்து விளங்கும் அயிரையென்னும் உயர்ந்த மலையைப் போல நீ வாழும் நாள் அழிவில்லாததாகுக என்று கபிலர் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்னும் சேர மன்னனை வாழ்த்தி பாடியிருக்கிறார்.

இழி தரும் அருவி கோடுதொறும் துவன்று அயிரையாகிய நெடுவரைபோல நீ வாழும் நாள் தொலைந்து போகாமல் இருக்க வேண்டும் என்று கபிலர் கூறுகிறார்.

## சேரன் பெருந்தேவியின் சிறப்பு

பதிற்றுப் பத்து ஏழாம் பத்தில் கபிலர் பாடல்கள் அமைந்துள்ளன. அதில் 65-வது பாடலில் சேரன் பெருந்தேவியின் சிறப்பு கூறப்படுகிறது.

முத்தாரம் முதலியவற்றை அணிந்த அழகுபெற்ற எழுதப்பட்டாற் போன்று வருத்தக் கொண்ட இளைய நகிலையும், மாட்சிமைப்பட்ட வரிகளையுமுடைய அல்குலையும், மலர்ந்த கண்களையும், மூங்கிலை ஒத்து அழகுபெற்று விளங்கிய மூட்டுக்களையும் உடைய பெருத்த தோள்களையும், விரும்பத்தக்க அருந்ததியையும் வென்ற கற்பினையும், நெடுந்தூரத்தை மணம்

கமழ்கின்ற நல்ல நெற்றியையும் உடைய சிவந்த ஆபரணங்களை அணிந்தவள். இவள் செல்வக் கடுங்கோ வாழியாதனுக்கு மனைவி என்பவளாவாள்.

### கொடை வள்ளல் பாரி

கடையெழு வள்ளல்களுள் ஒருவன் பாரி. கொடை வள்ளல் முல்லைக்குத் தேர் கொடுத்தவன்.

மிகுந்த வண்மையுடையனாதலின் 'மாவண் பாரி' என்று பாரி புகழப்படுகிறான். பாரியிடம் பரிசில் பெறும் பொருட்டு இரவலர் ஆடல் பாடல்களை நிகழ்த்திய காலத்து ஒலித்த முழவு அவன் இறந்த பின் இரவலரைப் பாதுகாப்பாரின்மையின் ஆடல் பாடலில்லாமல் கெடுதலின் 'முழவு மண்புலர' என்றார். முழவினால் தொழில் கொள்வாரின்மையின் முழவு பயனிழந்தது. 'இரவலர் இனைய' வென்றது, பாரியின் இறப்பை எண்ணி வருந்தவென்றவாறு, தம்மை இனிப் புரப்பாரின்மையின் வருந்துகின்றனர்.

மேற்கோள் "மலர்ந்த மார்பின், மாவன் பாரி" (பதிற். 61; 8)

### தொன்மை மரபு

தலைமகள் தன்முதல் மனைவி இருக்கும் பொழுதே தன் தகுதிக்கு ஏற்பத் தன் குலத்தாள் ஒருத்தியை இரண்டாம் மனைவியாக ஏற்று, அவளைத் தன் இல்லத்திற்கு அழைத்து வந்தபோது, முதல் மனைவி அவளை மகிழ்ந்து ஏற்றுக் கொள்வாள்.

மயில்கள் மகிழ்ந்து ஆடவும், பெரிய தேனீக்கள் ஆரவாரிக்கவும் குளிர்ந்த மழைமுகில்கள் முகட்டைத் தழுவிக் கிடக்கும் பெரிய மலையை உடைய நாட்டின் தலைவனே! நீ விரும்பி நம் நல்ல மனையின் கண் கொண்ர்ந்து வதுவை செய்து கொண்டமையின், அம்மனத்தால் எம் நலமும் சிறத்தலான், இப்பொழுதுயாம் பெற்ற இவள் எமக்கு நின்னினும் மேலானவளாவாள்.

குடிவளர்ச்சிக்குரிய மகப்பேறு காரணமாகவே தலைவன் இரண்டாவது மனைவியைக் கொண்டானாதலின், 'எம் நலம் சிறப்ப யாம் இனிப் பெற்றோள்' என்றாள். அவள் பெறப் போகும் மகவும் தன் மகவே என்பது தலைவியின் கருத்தாகும்.

இச்செய்யுளால், பல மனைவியரை ஓராடவன் மணப்பது தொன்மையான மரபு என்பது விளங்குகின்றது. (ஐங். மஞ்ஞை. 292)

**சங்க இலக்கிய பெருவழக்கு**

வேங்கை மலரை எரியோடு உவமித்தல் சங்க இலக்கியத்தில் பெருவழக்கமாகும்.

பெண்ணை மயிலோடு உவமித்தலும் பெருவழக்கமாகும்.

**தமிழ் நாகரிகம்**

திருமணச் சடங்கில், மணமகன் மணமகள் கூந்தலில் மலரணிதல் இன்றும் வழக்கமாக உண்டு. இதனால் தான், 'கூந்தற் கிழவன்' என்று காதலனைக் குறித்தனர் சான்றோர். பெண்ணின் கூந்தற்கு உரிமையுடையான்

எவனோ அவனே அவள் கூந்தலில் மலரணிய உரிமையுடையான் என்பது தமிழ் நாகரிகமாகும்.

தமிழ் நாகரிகத்திற்கு எடுத்துக்காட்டாகக் கபிலர் பெருமான் பாடிய குறிஞ்சிப்பாட்டில், கன்னிப் பெண்கள் 99 மலர்களைப் பறித்துப் பாறையிற் குவித்தமையைக் காட்டினார். வெறும் பொழுது போக்காக இதனைக் கொள்ளல் பொருந்தாது மகளிர் பூப்பறித்துச் சூடிக் கொண்டதற்குப் பல சான்றுகளைச் சங்க இலக்கியத்தில் காணலாம்.

## குருவி

ஒருவகைக் சிறிய பறவையினம் குருவியாகும். இது குரீஇ என்னும் வடிவிலேயே ஏனைய செய்யுட்களில் இடம் பெற, இதில் மட்டுமே இருவி என்பதனோடு தொடை நயம் பெறக் குருவி என்று ஆளப்பட்டுள்ளது. கபிலர் குரீஇப்பூளை என்றே குறிஞ்சிப் பாட்டில் ஆள்கிறார். அவரே இங்குக் குருவி என்று ஆண்டார் என்பது சிந்தனைக்குரியதாகும். (ஐங்.மஞ்ஞை. 295)

## பண்டைக் காலத்து நம்பிக்கை

வேங்கை மலரும் காலம் மணம் புரிதற்குரிய பருவம் என்பது பண்டைக்காலத்து நம்பிக்கை. (ஐ. மஞ்ஞை. 297)

## நன்மாந்தர் பண்பு

உற்றார்க்கு உறுதி பயத்தலே நன்மாந்தர் பண்பு. நம் காதலரோ நேர் மாறாக, நட்டோர் என்றும் மறவாத துயரத்தைத் தந்தது வியப்பே! இவரை

நாம் சான்றோன் என மதித்தல் எவ்வாறு என்பாள். 'உற்றோர் மறவா நோய் தந்து' என்றாள், 'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல் பண்புடைமையாகவும். யாதொரு தீங்கும் செய்யாது நன்மையே புரிந்த நமக்கு இவர் நீங்காத் துயரம் செய்தது வியப்புக்குரியது என்றாள்.

**பண்பாடு**

"அறத்தொடு நிற்றல்" என்பது தமிழர் தம் வாழ்வில் பண்பாட்டை அடிப்படையாகக் கொண்ட ஒரு நிகழ்வு தலைவிக்குத் தலைவனுடன் களவில் இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த பின்னர், திருமணம் அவனுடன் தான் நிகழ வேண்டும். நொதுமலர். தலைவியின் களவு வாழ்க்கை அறியாமல் மணம் பேச வருதலும் கூடும்; அப்பொழுது தலைவி தோழியிடத்தே அறத்தொடு நின்று, நிகழ்ந்தது கூறி, உதவ வேண்டுவள்; தோழி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தன் ஐயர்க்கும் அறத்தொடு நிற்பர். உள்ளப் புணர்ச்சிக்கு எத்தகைய மதிப்பு அளித்தனர் என்பது புலனாகும்; களவு வாழ்வு பொய்ப்பட்டு வேற்றவர் வரைவு நேருமாயின், காதலறம் பிழைக்குமாதலின், அதனைத் தவிர்க்கும் வகையில் களவினைத் தோழி, செவிலி, நற்றாய் முதலியோர்க்குப் புலப்படுத்துதல் தலைவி முதலியோர்க்கும் கடனாகும். அதனால் அச்செயல் அறத்தொடு நிற்றல் எனப்பட்டது.

மதங்கொண்ட யானை, நீராட்டுதற்கு வெளிக்கொணருங்கால் பறையறைந்து மக்களை வெளியே வாராதீர்கள் என்று சொல்லும் வழக்கம்

பண்டிருந்தது; பறையறைந்து தெரிவிக்க வேண்டியது மன்னது கடமையாகும்; இது ஈண்டு சுட்டப் பெற்றது.

**தலைவனின் நாட்டின் வளம்**

"................ அவ்வழிப்
பழுமிள குக்க பாறை நெடுஞ்சுனை
முழுமுதற் கொக்கின் தீங்கனி உதிர்ந்தெனப்
புள்ளெறி பிரசமொ டீண்டிப் பலவின்
நெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த தேறல்
நீர்செத் தயின்ற தோகை வியலூர்ச்
சாறுகொள் ஆங்கண் விழவுக்களம் நந்தி
அரிக்கூட் டின்னியங் கறங்க ஆடுமகள்
கயிறூர் பாணியில் தளருஞ் சாரல்
வரையர மகளிரிற் சாஅய் விழைதக
விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தள்
தண்கமழ் அலரி தாஅய் நன்பல
வம்புவிரி களத்திற் கவின்பெறப் பொலிந்த
குன்றுகெழு நாடனெம் ....." (கு.பா. 186-199)

அப்பொழுது பழுத்துக் கனிந்த மிளகுகள் உதிர்ந்து கிடந்த பாறையில் உள்ள நீண்ட சுனையில் பெரிய அடியினை உடைய மா

மரத்திலிருந்து மாங்கனி உதிர அக்கனியின் சாறும், வண்டுகள் சிதறித் துளிர்த்த தேனும், பலாக்கனி கனித்து துளித்த தேனும் கலந்திருந்தன. தலைவன் நாட்டில் உள்ள மலையில், அவ்வாறு தெளிவாக இருந்த தேனை நீர் என்று நினைத்து மயிலானது உண்டது.

மலைச் சாரலில் செங்காந்தள் மலர்கள் உதிர்ந்து கிடக்கும் மலை நாட்டை உடையவன் தலைவன்.

**நாட்டுவளம்**

“சாத்த மரத்த பூழில் எழு புகை
கூட்டு விரை கமழும் நாடன்
அறவற்கு எவனோ, நாம் அகல்வு? - அன்னாய்!”

(ஐங். 212)

சந்தன மரங்களுக்கு இடையே உள்ள நிலத்தில் சுட்டு எரிக்கப்படும் அகில் கட்டையின் நறிய புகை, சந்தனம் பூக்களின் நறுமணத்தோடு சேர்ந்து, ஒரு புதுக்கலவை மணமாகப் பரவுதற்கு இடமான மலைநாட்டை உடையவன் தலைவன்.

பூழிலாவது விலையுடைய அகிற் கட்டையாகும். சந்தன மரங்களிடையே உள்ள நிலப்பகுதியில், வாழ்வார் அகிற் கட்டையை விறகாகப் பயன்படுத்தி உணவு சமைத்தனர். பிறருக்கு அது அரிய பொருளாகும். ஆனால் தலைவன் நாட்டிலுள்ள குறவர்க்கு அது எளிய விறகாகும்.

"குறத்தி மாட்டிய வறன் கடைக்கொள்ளி

ஆரமாதலின் அம்புகை அயலது சாரல்

வேங்கைப் பூஞ்சினைத் தவழும் பறம்பு" (புறம். 102)

என்றார் கபிலரும்.

தலைவன் நாட்டின் செல்வ மிகுதியை. அந்நாட்டு மக்கள் அகிலை விறகாகப் பயன்படுத்துவது கொண்டு விளக்கினாள் தோழி.

**பிற ஆசிரியர் கருத்து**

பூழில் அகிலாதலைப் பதிற்றுப்பத்தாலும் அறியலாம்.

"சாந்தம் பூழிலொடு பொங்கு திரை சுமந்து" (ப.ப. 87:2)

இச்செய்யுளிலும் சந்தனமும் அகிலும் இணைத்துப் பேசப்படுகிறது.

"ஒண்செங்காந்தள் அவிழும் நாடன் அறவன்"

(குறுந். 284)

என்று தலைவனைக் கூறப்படுகிறது.

சந்தனப்பூ நாற்றம் என்பதற்கு மாறாக, 'சந்தனப் புகை நாற்றம்' என்றார் ஈழத்து உரையாசிரியர். இதனால், ஆண்டுக் கேட்பாரற்றுக் கிடந்த சந்தன மரத்துண்டுகளும் அகிலோடு சேர்ந்து எரிக்கப்பட்டமை புலப்படும்.

"நறு வடி மாஅத்து மூக்கு இறுபு உதிர்ந்த

ஈர்ந் தண் பெரு வடு, பாலையில் குறவர்

உறை வீழ் ஆலியின், தொக்கும் சாரல்" (ஐங். 213)

நறுமணம் மிக்க வடுக்களைக் கொண்ட மாமரத்திலிருந்து, காம்பு இற்று வீழ்ந்த ஈரமான, குளிர்ந்த பெரிய வடுக்களை, பாலை நிலக் குறவர்கள் மழைத்துளியுடன் வீழும் ஆலங்கட்டிகளைத் தொகுப்பது போல் தொகுத்து வைத்தற்கு இடனான வளமான நாட்டினையுடையவர் தலைவர்.

“பழம் மூக்கு இற்று விழுதல்; - விளவின்
ஆட்டொழி பந்தின் கோட்டு மூக்கிறுபு” (நற். 24)

“நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉம்” (ஐங். 61)

“சாரற் பலவின் கொழுந் துணர் நறும் பழம்
இருங் கல் விடர் அளை வீழ்ந்தென, வெற்பில்
பெருந்தேன் இறாஅல் சிதறும் நாடன்” (ஐங். 214)

மலைச் சாரலின் கண் உள்ள பலாப்பழம் யாருக்கும் பயன்படாது இருள் சூழ்ந்த மலைப் பிளவில் வீழும். அவ்வாறு வீழும்போது பெரிய மரக்கிளைகளிலே கட்டப்பட்டிருக்கும் பெரிய தேனடையும் சிதைந்து விழும் வளமான நாட்டை உடையவன் தலைவன்.

மேற்கோள்

“பலவின், மாச்சினை துறந்த கோண்முதிர் பெரும்பழம்
விடரளை வீழந்தாங்கு” (நற். 116)

“. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
அருவரை மருங்கின் ஆய்மணி வரன்றி

ஒல்லென இழிதரும் அருவி நின்

கல்லுடை நாட்டு . . . - தெய்யோ! (ஐங். 233)

ஏறற்கு அரிய மலையின் கண் இருந்து அழகிய மாணிக்கக் கற்களை வாரிக் கொண்டு பேராரவாரத்துடன் வீழும் அருவிகளைக் கொண்டது தலைவனின் மலைநாடு.

**தலைவன் நாட்டு வளம் குறிஞ்சிகலியில்**

தினைப்புனத்தில் இட்ட பரணிடத்து எழுந்த அகிற்புகையானது, எழுந்து, வானத்து இயங்கும் மதியை மறைக்கும், அம்மதி ஒளி குன்றி, வானிடத்தே சென்று மலை முகட்டிலே தங்கி இருக்குமானால், அதனை அந்த மலையிலே வைத்துக் கட்டியுள்ள தேன்கூடு எனக் கருதி, அத்தேன் கூட்டினை அழித்தற்குக் கண்ணேணி அமைப்பர், அத்தகைய காடகன்ற நாட்டிற்குரியானின் மகன்.

குறிஞ்சிக் கலியில் 40-வது செய்யுளில் தலைவனது மலை வளத்தை அழகுறச் சித்தரித்துள்ளார். சந்தன மரத்தாலாகிய உரல்; இளையமரமன்று. நன்கு முதிர்ந்த சந்தன மரம், “முகைவளர்சாந்து; அதுபோல, யானைக் கொம்புகளாகிய உலக்கை; யானைக் கொம்பு நன்கு முதிர்ந்தது. நன்கு முதிர்ந்த தந்தத்தில் முத்துக்கள் உருவாகும். ‘முத்தார் மருப்பு’ - உரலிலே இடிக்கப்படுவது தினை. முற்றிய தினைக் காட்ட “தாழ்குரல்” எனப்பட்டது. முற்றிய நிலையில்

தான் கதிர் தாழ நிற்கும். தினை, உரல், உலக்கை - மூன்றுமே குறிஞ்சிக் கருப்பொருளான் இயன்றவை.

142-ம் செய்யுளில் குறிஞ்சிக் கருப்பொருள்கள் பாடலின் தொடக்கத்தே சிறந்த முறையில் இடம் பெற்றுள்ளன. உணவுக்காக நெல்லைக் குற்றுவது எந்நிலத்தும் உண்டு. குற்றுவதற்குப் பயன்படும் பொருள்கள் நிலத்திற்குத் தக மாறுபடும். ஈண்டு யானைக் கோடும், வெதிர் நெல்லும் அமைந்துள்ளன.

தன் பழைய பகையான வீரம் படைத்த பெரிய புலியைக் கொன்ற, முறம் போலும் காதுகளைக் கொண்ட காட்டு யானை, தன் முன்னர் கிடந்த இலையாகிய உணவைத் தின்றது, ஒலிக்கின்ற வெள்ளிய அருவி நீரைப் பருகி, அயர்ந்து வளம் நிறைந்து விளங்கும் கரிய சோலையிடத்தே உறங்கியது. அத்தகைய நல்ல மலை நாட்டை உடையவன் தலைவன். குறிஞ்சிக் கலியில் 143-ம் பாடலில் தையலே, ஐவனமாகிய வெண்ணெல்லைப் பாறையாகிய உரலிலே பெய்வோம். வேங்கைப் புலியைக் கொன்ற மதம் நிறைந்த புள்ளிகளை உடைய யானையினது கொம்பினாலான உலக்கையையும், இனமான வண்டுகள் ஒலித்துத் தாது ஊதும் சந்தன மரத்தினால் செய்த உலக்கையையும் கொள்வோம். நாம் இருவரும் இவ்வுலக்கைகளினால் நெல்லைக் குற்றுவோம்; முருகனைப் புகழ்வது போல, அழகுடைய, மேகம் தவழ்கின்ற உச்சியினை உடைய பயன்தரும் மலைநாட்டை உடையவன்.

"உருடைமான் குழவிய வளமலை"

"வயங்கு எழில் யானைப் பயமலை" - என்று

தலைவனது மலைவளத்தைப் புலப்படுத்துகிறார்.

ஒன்றனுக்கொன்று எதிர் எதிர் ஓங்கிய பெருமையுடைய இரு மலையின் அடுக்கடுக்கான மலைத்தொடர்கள் கொண்ட அகன்ற சாரல், விரிந்து வரும் கதிர்களைக் கொண்ட இளஞாயிற்றின் கிரணங்கள் பட்டு ஒளி வீசிக் கொண்டிருக்கும் பாறையில், அதிர்ந்த ஓசையுடன் இரு மலைகளின்றும் அருவி வீழா நின்றது. அழகிய கிளைகளின் மேலே அருவிநீர் வீழ்தலின் முதிர்ந்த கொத்துக்கொண்ட முழவுபோலும் தளிரினை உடைய வேங்கையிடத்தே நெருப்புப் போலும் மலர்கள் மலர்ந்துள்ளன. இக்காட்சி வரி படர்ந்த மத்தகத்தினை உடைய அழகிய யானைகள் மலரும் நீருமாகக் கலந்து நீரை முகந்து மேலே சொரிய நின்றன. அந்நீர் கீழே வீழ்தலால், முறுக்கு அவிழ்ந்தன தாமரை மலர்கள், அழகிய தாமரையின் அழகிய அல்லியிடத்தே வீறு பெற்ற திருமகள் விருப்புடன் குடி கொண்டிருந்ததனை ஒத்திருந்தது. அத்தகு தேன் மணக்கும் வெற்றியினை உடைய வெற்பன்.

எதிரெதிரே உயர்ந்து விளங்கும் மலைச்சாரல் விளங்கக் கதிரவனின் ஒளி திகழும் மாணிக்கப் பாறையிடத்தே, இருமலை களின்றும் வீழும் அருவிகள் தன் கிளைகளில் விழுதலால், அழகிய கொத்துக்களாய் மலர்ந்து முழவு போன்றும் எரிபோன்றும் விளங்குகின்ற அடியினைக் கொண்ட வேங்கை மரம் விளங்கியது. இக்காட்சியினை அழகிய புள்ளிகள் பொருந்திய மத்தகத்தோடு

விளங்கும் இரு யானைகள், இரு பக்கங்களிலும் நின்று தம் துதிக்கைகளால், பூவொடு கூடிய நீரினைச் சொரியத் தாமரை மலரின் அழகிய அல்லியில் வீறுபெற்று விளங்கும் திருமகள் காட்சியொடு இணைத்துக் கபிலர் காட்டியுள்ளார். அவ்வகையில் மணங்கமழும் வெற்றியினையுடைய மலை நாட்டிற்குரியவன் என்று தலைவனைக் குறிப்பிட்டுள்ளார். தெய்வ சிற்பக் காட்சிகளுள், 'கசலக்குமி' (கஜலஷ்மி) என்னும் திருமகள் மூர்த்தி வடிவத்தை நினைவிற் கொண்டு கபிலர் இவ்வாறு வருணித்துள்ளார்.

தெரிந்தெடுத்த அணிகளை உடையாய், அகன்ற மலைப் பாறையின் மேல் ஒரு கருங்குரங்கு இருந்தது. அதனை வெருண்டு பார்த்தது ஒரு வருடை மானின் குட்டி. பயந்து, இருள் செறிந்த பக்க மலையிலே ஏறி இறங்கி ஓடா நிற்கும், இத்தகு வளப்பத்தை உடைய மலை நாடன்.

மணம் நாறும் கூந்தலினை உடையாய், பிடியொடு கூடி மகிழ்கின்றது யானை, வளகின் தழையை மனம் விரும்பித் தின்றது, எழில் கொண்ட இணைந்த கொம்புகளுடைய மலை நடந்து செல்வது போன்ற செலவினை உடையது. இத்தகைய விளங்கும் அழகுடைய யானைகளை உடையவன் பயன் கொண்ட மலைநாடன்.

விடியற் காலத்தே விரும்பத் தகுந்த இளஞாயிற்றை, மூங்கிலின் செறிவு மறைத்து விளங்கிய அகன்ற மாணிக்கப் பாறையிடத்துள்ள மணமுடைய சுனைகளிடத்தே, காந்தளின் குலைகள் அழகுற வளர்ந்துள்ளன. அக்குலையினை, அரிய மணியினைக் கொண்ட பொறியினை உடைய பாம்பு

நீரை உண்ணுவதாக நினைத்தது இடியேறு; பெரிய மலைகளைக் கீழ்மேல் ஆக்குமாறு போலக் காற்றுடன் செறிந்த மழை பெய்தது; மழையில் உருமேறு இடித்தலால் ஏற்படும் உயர்ந்த ஓசையாகிய ஒலி எங்கும் பரந்தது; மணமுடைய சாரலில் ஒலித்ததினால், சிறு குடியில் உள்ளார் விரைந்து உறக்கம் நீங்கி எழுந்தனர்; இத்தகு உயர்ந்த வெற்றியுடைய மலை நாடன் தலைவன்.

பெருமையினையும் அழகுடைத்தாகிய சிறகினையும் நீலமணி போலும் நிறத்தினையும் உடைய தும்பி, தான் நுகர்ந்த பூவினை விடுத்து, தான் விரும்பிய பூவினை நாடிப் போயது. வாய் இடத்தே வீழ்கின்ற மதநீரையும் வெள்ளிய மருப்பினையும் உடைய யானையோடு? அழகினையும், வரியினையும் உடைய புலி போர் செய்தது; அப்பொழுது தும்பி, வேங்கையினது அழகையுடைய பூங்கொம்பு என்று கருதி வலிமை பெற்ற புலியைச் சுற்றியது; வேங்கையினது சினை என்று கருதி, பொலிவு பெற்ற புள்ளிகளை உடைய யானையினது புகார் முகத்தை அணுகியது; புலியையும் களிற்றின் முகப் புள்ளிகளையும் மலர் என்று கருதித் தும்பி அங்கும் இங்கும் மாறி மாறி வட்டமிட்டது; தும்பியின் இச்செயல் சினத்தாலே வாட்போர் செய்யா நின்ற வலிமிகுந்த மன்னர் இருவரை நட்பாக்கும் உபாயத்தை ஆராய்ந்து, நண்பர்களாக்கும் சந்து செய்விப்பாரைப்போல இருந்தது. இத்தகு காட்சிகள் நிறையப் பெற்றுப் பள்ளத்தே குதிக்கின்ற அருவிகள் கொண்ட திரண்ட மலைகளை உடைய நன்னாடன் தலைவன்.

நீர் விழுகின்ற அழகினை உடைய மலையிடத்துத் தேனினம் மொய்க்கும், மலர்ந்த பூக்களைக் கொண்ட வேங்கையினது அழகு போல, வண்டுகள் ஊதும் புள்ளிகளை உடைய முகத்தினையும் கமழ்கின்ற மதத்தான் நனைந்த கவுளினையும் கொண்டு விளங்கின யானைகள்; அக்களிற்று யானைகள் எட்டுத் திசைகளிலும் காத்தல் தொழிலை மேற்கொள்ளுதற்குப் பொருந்தினவாய், பகைத்தலை எதிர் நில்லாத மிக்க வலியினையும் விளக்கத்தினையுமுடையனவாய் மழை சொரியும் பக்க மலையிடத்தே வானுற ஓங்கிய மிகுதியான மரங்கள் ஆற்றிடைக் குறையினாலே காணப்பட்டன. அத்தகைய யானைத் திரளோடு வீங்கின. கழுத்தையும் மிக்க வலிமையினையும் உடைய பெரிய புலி மாறுபாட்டின் காரணத்தான் போர் செய்தல் உற்றது. அத்தகைய மலையினையுடைய நல்ல நாடன் தலைவன்.

வளைந்த வரிகளை உடைய புலி, தன்னைத் தாக்க அதனை வென்றது யானை; வென்ற வருத்தத்தோடே நெடிய மலையிடத்தே உறங்கா நின்றது. துயில் கொள்ளும் யானை நனவிலே தான் செய்தது மனத்து நினைத்திருந்ததனால், கனவிலும் வேங்கை வரக் கண்டது; கண்டு கடுகவெருவி எழுந்தது. புதிதாக மலர்ந்து நின்ற வேங்கை மரத்தைப் புலி எனக் கருதி, அதன் அழகிய நலத்தைக் கொடுத்தது; தன் வலியினாற் பேணாத சினம் தணிந்து, தான் கொடுத்து புலியன்று மரம் எனக் கண்டபொழுது, அம்மரத்தைக் காணவும் நாணங்கொண்டு அதனைப் பாராது தலையைக் கவிழ்த்துக் கொண்டு சென்றது யானை; அத்தகைய நல்ல மலை நாட்டிற்கு உரியவன் தலைவன்.

மலையகத்து, விளைவிப்பார் இன்றித் தானே விளைந்த வளைந்து நின்ற மூங்கில் நெற்கதிர்களை வளைத்துத் தின்றது. முழந்தாளை உடைய கரிய பெண் யானை. செறிந்த இலைகளை உடைய வாழைகள் நிறைந்த இடத்தே புகுந்து சென்றது; அங்கு வருடை மானின் குட்டிகள் இயங்கா நின்ற இடத்தே, ஞாயிறு தோன்றும் விடியற்காலத்தே துயில் கொண்டது. அத்தகைய வளம் செறிந்த இருள் சூழ்ந்த சோலைகளும் விளங்கும் நீரினையும் உடைய வெற்பன்.

மழையின்றி வறண்டது என்பதை அறியாத, சுரபுன்னை நெருங்கின. நறிய பக்க மலையினையும் பெருமையையும் கொண்ட மலையிடத்து, அகன்ற யானையைத் தன்னிடத்தே கொண்டிருந்தது களிறு; வீரம் மிக்க அந்தக் களிறு, தனக்கு மாறாகிய மற்றொரு யானையை, தனது ஆற்றலால் அதன் புள்ளியை உடைய நுதலைப் புண்ணாக்கிக் கொம்பினால் குத்தி வாங்கியது. அதன் குருதி தோய்ந்த கொம்பு போல, உயர்ந்த முகையினை உடைய காந்தள், நாள்தோறும் புதிய பூக்களை ஈன்று நின்றது. பள்ளங்கள் நீர் நிறைந்து அழகு பெற்றுத் திகழும் படி அருவிகள் ஆரவாரித்து இழிந்தன. பயன் தரும் மழையைத் தன்னிடத்தே கொண்ட, பெருமையும் வெற்றியும் வாய்ந்த வெற்பன் என்று தலைவனைக் கூறப்படுகிறது.

பூவான் அமைந்த குளிர்ந்த மாலையினையும், புலர்ந்த சந்தனத்தையுமுடைய தென்னவனின் உயர்ந்த கூடல் நகரிலே வாழ்பவன் தலைவன்.

**தலைவன் நாட்டின் வளம்**

அவரைக் காய்களை வயிறார உண்ட பெண்குரங்கு, வணிகர் கையாளும் பையைப் போலப் பருத்துக் காணப்படும் மலைநாடன் என்றது தலைவனுடைய பெருஞ் செல்வமுடைமையை விதந்தது என்பர்.

சிறிய தினைத் தானியம் கொண்ட கதிர்களைக் கொண்ட கதிர்களைக் குறவர் அறுவடை செய்த பின்னர் நின்ற வெள்ளிய கருவிகளின் மேல் படர்ந்த காய்த்த அவரையின் மேல் வந்து படிகின்ற கிளிகளை ஓட்டுதற்கு இடனான புதிய வருவாய்கள் உண்டாகும் வளமலை நாடன்.

நெடுமலைமேல் வாழும் குறிய கால்களையுடைய வருடை மான்களைக் கண்டு அஞ்சி, தினைக்கதிர் மேல் படியும் கிளிகள் அஞ்சி விலகிச் செல்லும் மலை நாடன்.

மயில்கள் மகிழ்ந்து ஆடவும், பெரிய தேனீக்கள் ஆரவாரிக்கவும் குளிர்ந்த மழை முகில்கள் முகட்டைத் தழுவிக் கிடக்கும் பெரிய மலையை உடைய நாட்டின் தலைவன்.

**தலைவனின் பண்புகள்**

தலைவன் அறப் பண்புகளை உடையவன்.

“அறவற்கு எவனோ, நாம் அகல்வு?” (ஐ. 212)

செல்வ வளத்தோடு பண்பு வளமும் உடையவன் தலைவன். ஆகவே ‘அறவன்’ என்று புகழ்ந்தாள் தோழி.

அன்பு, அருள், நடுநிலைமை, வண்மை முதலான பண்புச் செல்வங்களோடு, பொருட்செல்வமும் உடையவன் தலைவன்.

**தலைவன் நாட்டின் இயற்கை**

பகை என்று கூறிக் கூற்றுவன் எதிர்ப்பட்டாலும் கெடானாய் வெற்றி பெறுவன்; தன்னை உறவாகக் கொண்டவர்களுக்குத் தோல்வி அடைதலை நாணாதவன் மலை. அதன் கண்ணே மகளிர் கையிலே செறித்த, நீலச்சடைச் செறிபோலத் தும்பிகள் அழகிய காந்தள் முகையின் மேலே அமர்ந்து அலரும் காலம் நோக்கிக் காத்திருக்கும்.

மாறுபாட்டின் காரணத்தான் சிறிதளவும் நன்மை செய்யார் ஆயினும், பிறர் தம் குற்றத்தைக் கூறுதற்கு நினைத்தலும் செய்யாத பெருந்தகையாளன் குன்று; நுண்ணிய புள்ளிகளை உடைய மானினது செவியினைப் போல, மூங்கில் முளையினது கண்ணைப் பொதிந்த பாளை கழன்று விழும் பண்பினை உடையது.

யானையினது முறம் போன்ற செவியை மறைப்பாகக் கொண்டு, பாய்ந்து, மாறுபாடு செய்த புலியைச் சினந்து தாக்கியது யானை; மறத்தைத் தன்னிடத்தே கொண்ட நூற்றுவர்க்குத் தலைவனாகிய துரியோதனனைத் தொடையிலே அடித்து உயிரைப் போக்கினான் பீமசேனன். அதுபோலத் தன்னுடைய கூரிய கோட்டினது நுனியாலே குத்தி, புலியினது மருமத்தைத் திறந்து மாறுபாடு தீர்த்தது அழகினை உடைய அவ்யானை.

பின்னர், மல்லர்களைக் கொன்று அவர்தம் வீரத்தைத் தொலைத்த திருமாலைப் போல், கல் உயர்ந்த அகன்ற சாரலிடத்தே தன் சுற்றத்திற்கு நடுவே சென்று கலந்தது அந்த யானை; அத்தகைய மலைநாட்டிற்குச் சொந்தக்காரன் தலைவன்.

**பண்டைத் தமிழர் வாழ்வியல் கூறு**

தமர் மறுத்தல் நொதுமலர் மறுத்தல் முதலிய காரணங்களால் காதல் நிறைவேறாது போகும் நிலை ஏற்படுமாயின் தலைவன் மடல் ஏறித் தன் காதலை வெளிப்படுத்தித் தலைவியை மணக்கும் நிலை உருவாகும். பண்டைத் தமிழர் தம் வாழ்வியற் கூறுகளுள் மடல் ஏறுதல் ஒன்றாகும். இது களவு, கற்பாக மாறுதற்கான அரிய நிகழ்ச்சியாகும். மடல் ஏறுவேன் என்று கூறுவதோ, மடல் ஏறுதலோ தலைவனுக்கு மட்டுமே உரியது. தலைவன் மடலேறுவன் என்றால் அது ஐந்திணைப்பாற்படும. (கலித்தொகை. 58)

**தலைவியின் குடிச்சிறப்பும் செல்வச் சிறப்பும்**

அழகிய சிலம்பின் உள்ளிடு பரல்கள் ஒலிக்க, விளங்குகின்ற ஒளியினை உடைய அணிகள் ஒளிவீச, நுடக்கத்தான் கொடியென, விளக்கத்தான் மின் என, கட்புலன் ஆகாமையின் வருத்தம் என தலைவி தளர்ந்து அசைந்து வருகிறாள். செல்வம் நிறைந்த, உயர்ந்த சிறப்புடையது தலைவியின் தந்தையின் பெருநகரம் பழமைச் சிறப்புடையது. இளமை வேகத்தால், பந்தை எறிந்து விட்டுப் பந்தின் பின்னாகப் புறப்படுதலைச் செய்கிறாள் தலைவி. பூவான்

அமைந்த குளிர்ந்த மாலையினையும், புலர்ந்த சந்தனத்தையுமுடைய தென்னவனின் உயர்ந்த கூடல் நகரிலே, தேன் பாய்ந்து இதழ் விரிக்கும் நீல மலரினும் அலர்வென்று, அமைவன தலைவியின் மையுண்ட அமர்த்த கண்கள். ஏந்தின கோட்டையும் அழகினையுமுடைய யானைப்படை கொண்ட பகைவரை அப்பாண்டியனின் வேல் வருத்துமாறு போல சிவந்து வருத்தம் தந்து நின்றன.

பொன்னால் செய்த குழையினை உடையவள் தலைவி. மாந்தளிர் போன்ற நிறத்தினை உடையவள். கொத்துக்களைக் கொண்ட இளைய வேங்கைப் பூப் போன்ற சுணங்கினை உடையவள் தலைவி. தலைவியின் குடிச்சிறப்பும் செல்வச் சிறப்பும் 'தொல்வியனகர்' என்றதனால் சுட்டப்பெற்றன.

"வளமை சால் உயர்சிறப்பின் நுந்தை தொல் வியல் நகர்"

(கலித். 57)

**பண்பாடு**

அ) தைந் நீராடுதல் இளம் பெண்களால் நிகழ்த்தப்பெறும் ஒரு நிகழ்ச்சி. சங்க இலக்கியங்களில் சுட்டப்பெறும் இது, பண்டைத் தமிழர் தம் பண்பாட்டுத் தொடர்புடையது. மணமாகாத பெண்கள் மார்கழி முழுமதி நாள் தொடங்கித் தை முழுமதி நாள்வரை நாட்காலையில் நீராடி நோன்பிருப்பர். திருப்பாவை, திருவெம்பாவை இலக்கியங்கள் தோன்றுவதற்கும் தைந்நீராடல் அடிப்படையாய் அமைந்தது.

ஆ) தைந்நீராடும் மகளிர் பிறர் மனைக்கண் சென்றுபாடி, ஐயம் ஏற்றுக் கொண்டிருந்தனர். இது சிறந்ததொன்றாகக் கருதப்பெற்றது. "ஐயமும் பிச்சையும் ஆந்துணையும் கைகாட்டி" என்னும் ஆண்டாள் பாசுரச் செயலுக்கு முன்னோடி கலித்தொகைத் தலைவியின் இச்செயல்.

இ) மரத்தால் பாவை அமைத்து விளையாடுவர் நீராடும் மகளிர்; ஆண்பாவை, பெண்பாவை என அமையும்; ஆண்பாவையைச் சிறுமுத்தன் என்பர். நீராடும் மகளிர் விளையாடுங்கால் பாவைத் திருமணம் நடத்துவர். பெண்ணைக் கொள்வதற்காகச் சிறு சோறு சமைப்பர்; இதனை ஆயத்திற்கு இட்டு மகிழ்வர்.

**இலக்கிய மேற்கோள்**

1. "தையில் நீராடிய தவந்தலைப் படுவாயோ - தாய்
   அருகாநின்று தவத்தைந் நீராடுதல்" (பரி. 11 : 91)

2. "நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும் தைஇத் திங்கள்
   தண் கயம் போலப் பலர் படிந்து" (ஐங். 84)

**பண்பாடு**

மனைவி கணவனுக்குத் தம்பலம் (தாம்பூலம்) கொடுத்தல் மரபு. "அம்மென்திரையலோடு அடைக்காய் ஈத்த மையீர் ஓதி" என்று சிலப்பதிகாரத்தில் வருகிறது. உரிமை உடையார் தம்முள் கொடுப்பதும் பெறுவதும் மரபு. தம்பலம்

கொடுத்து, ஒரு பெண் பெற்றுக் கொண்டால் அவள், அவனுக்கு இசைந்தனள் என்பது கருத்து.

## குறிப்பு

சங்க அகப்பாடல்களுள் கைக்கிளைத் திணையில் அமைந்த பாடல்கள் கலித்தொகையில் மட்டுமே இடம்பெற்றுள்ளன. (கலி. 56, 57, 58, 100). பெருந்திணைப் பாடல்களும் கலித்தொகையில் மட்டுமே இடம்பெற்றுள்ளன.

குறிஞ்சிக் கலி இரண்டாம் பாடலில், இராவணன் - கயிலை மலையை அசைக்க, சிவபெருமான் தன் கால் விரலால் அழுத்த, இராவணனின் இருபது கைகளும் மலையின் கீழ் அகப்பட்டு வருந்தின எனும் இச்செய்தி இடம்பெற்றுள்ளது. மேலும், சிவபெருமான் அசுரர்களை அழிக்க மேருமலையை வில்லாகவும், வாசுகியை நாணாகவும், திருமாலை அம்பாகவும் கொண்டு முற்பட்ட செய்தியும் இடம்பெற்றுள்ளது. இவ்விரண்டும் புராண வரலாற்று செய்திகள், குறிஞ்சி நில மக்கள் வேங்கை மலரும் காலத்தேதான் திருமணம் செய்யும் மரபினைக் கொண்டிருந்தனர் என்ற வாழ்வியற் பண்பாட்டுச் செய்தியும் இடம்பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

## **தலைவியின் அரிய பண்புகள்**

தைந்நீராடித் தவந்தலைப்படுதல், பிறர் மனை சென்று பாடி எய்திய பலர்க்கீதல், சிறு சோறு மடுத்து நக்கமை முதலியன;

"சிறு முத்தனைப் பேணி, சிறு சோறு மடுத்து நீ

நறு நுதலவரொடு நக்கது நன்கு இயைவதோ?" (கலித். 59)

## அபூர்வ செய்தி

பெரும்பாலும் தலைவன் களவுக் காலத்தே பகலில் தலைவியின் இல்லத்துக்குச் செல்வதாகக் கூறப்படுவதில்லை. குறிஞ்சிக்கலி 51-ம் பாடலில் தலைவன் சென்றது முதலாக நடந்த நிகழ்ச்சிகள் ஒரு நாடகம் போல் தோன்றுகின்றன. 'நகைக்கூட்டம் செய்தான் அக்கள்வன் மகன்' என்னும் தொடர் தலைவன் நோக்கிலமைந்த காதலுணர்வைப் புலப்படுத்துவதாக அமைந்தது. நீர் விக்கினான் எனத் தலைவி கூறிய பொய்க் கூற்று, அவன்பால் தலைவிக்கிருந்த விருப்பத்தைப் புலப்படுத்துவதாக உள்ளது.

## தொகுப்புரை

ஐந்தாவது இயலில் புறக்கருத்துக்களும் வீரச் செய்திகளையும் கூறப்பட்டிருக்கின்றன. பதிற்றுப்பத்தில் ஏழாவது பத்தில் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பற்றிக் கூறப்படுகிறது. அவருடைய கொடைச் சிறப்பும் குடி சிறப்பும் சிறந்த முறையில் விளக்கப்பட்டிருக்கின்றன. பாரியின் குணங்கள் இச்சேர மன்னனின் குணங்களோடு ஒத்திருந்ததைப் பற்றி கபிலர் பாடியிருக்கிறார்.

பாரியின் மகளிரை இருங்கோவேளிடம் திருமணம் செய்து கொள்ளும் வகையில் மன்றாடினார் கபிலர். இக்கபிலர் புலன் அழுக்கற்ற

அந்தணாளன் என்றும் போற்றப்படுகிறார். பாரி இறந்தபின்பு உடன் இறக்க முடியவில்லையே என கையறு நிலையில் பாடினார்.

சங்க அகப்பாடல்களில் நாட்டுவளம், நாட்டு இயற்கை போன்றவை சிறப்பாக விளக்கப்பட்டிருக்கின்றன. சங்க இலக்கியங்களில் புறப்பாடல்கள் அதாவது கபிலர் பாடல்களில் புறநானூறும், பதிற்றுப்பத்தும் மட்டும் தான் புறச் செய்திகளைக் கூறுவதாக அமைந்துள்ளன.

## ஆய்வு நிறைவுரை

தமிழ் மொழி மிகத் தொன்மையான வரலாறு உடையது. வரலாறு சிறப்பாக அமைவதற்குத் தமிழ் மொழியிலுள்ள இலக்கியங்களும் காரணமாக அமைகின்றன. சங்க இலக்கியங்கள் தமிழர்களின் வாழ்வியல் கூறுகளை நமக்கு அறிவிக்கின்றன. ஆதிகால மக்கள் வேட்டையாடி வாழ்ந்ததையும், காலம் செல்லச் செல்ல அவர்கள் நாகரிகமடைந்ததையும் விளக்கமாகச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. சங்க இலக்கியங்களில் நடையும் மொழியும் சமுதாய மாற்றங்களைப் பிரதிபலிக்கின்றன. தமிழரின் தனித்த அடையாளமாகச் சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன. உலக ஒருமைப்பாடு மனிதநேயம், கூட்டு வாழ்க்கை ஆகியவற்றின் முக்கியத்துவத்தைச் சமுதாயத்திற்குச் சங்க இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன.

உலகில் எந்த மொழியினருக்கும், இனத்தாருக்கும், நாட்டாருக்கும் இல்லாத நானிலப் பாகுபாடும், அதனை அடியொற்றியப் பண்பாடும் தமிழகத்திற்கே உரியன. சங்க கால பேரரசர்கள் தங்களுக்கென பூ, கொடி போன்றவற்றை அடையாளமாகக் கொண்டிருந்தனர். ஆதிகால மக்கள் கூட்டமாகச் சென்று வேட்டையாடிப் பகிர்ந்து உண்டனர். வேட்டைச் சமூகமாக வாழ்ந்த போது விலங்குகளைப் பச்சையாகவும் பின்பு வேக வைத்தும் உண்டனர். கால மாற்றத்தால் உணவு, உடை, உறைவிடம். ஆகியவற்றில் மாற்றம் ஏற்பட்டுள்ளது. சங்க இலக்கியங்கள் பெண்மையை முதன்மைப்படுத்தியே பேசுகின்றன.

சங்க கால மக்கள் நிலங்களைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நானிலங்களாக வகைப்படுத்தினர். தமிழ் இலக்கியங்கள் குறிஞ்சி நிலமே மனிதனின் முதல் வாழிடம் எனக் குறிப்பிடுகின்றன. சங்க காலத் தலைவர்களைக் சீறூர் மன்னர். முதுகுடிமன்னர், குறுநில மன்னர், வேந்தர் என நான்காகப் பாகுபடுத்தலாம். போரிலும் அறவழி முறைகளே கடைபிடிக்கப்பட்டுள்ளன.

பண்டையத் தமிழ் மக்கள் இவ்வுலகில் இன்புற்று வாழ்வதையே குறிக்கோளாகக் கொண்டனர்.

கொல்லிமலையில் அரிய கண்களையும், பெரிய அணிகலன்களையும் அணிந்து கொல்லிப்பாவை என்னும் தெய்வம் உள்ளதைக் குறுந்தொகைப் பாடல் குறிப்பிடுகிறது.

பகைவருடன் போரிட்டு விழுப்புண் பட்டு போர்க்களத்தில் இறந்த வீரர்களைத் தெய்வமாகப் போற்றி நடுகல் நட்டு வழிபடும் மரபு இருந்துள்ளது. நடுகல்லிற்கு விடியற்காலையில் நன்னீராட்டி நெய்விளக்கேற்றி, படையல் படைத்தமையைப் பற்றிய குறிப்பு புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது.

குறிஞ்சி நிலக்கடவுள் முருகன் ஆவான், கடம்ப மரத்தடியில் உறைவதால் கடம்பன் எனவும் அழைக்கப்பட்டான் பரிபாடலும், திருமுருகாற்றுப்படையிலும் முருகன் பிறப்பு குறித்த செய்திகள் இடம் பெற்றுள்ளன. பரிபாடல், சிவனுக்கும் உமையம்மைக்கும் மகனாகப் பிறந்தவன் முருகன் எனக் குறிப்பிடுகிறது. மலை வாழ் மக்களின் தலைவனான சூரனை

முருகன் அழித்ததாகத் தொன்மைக் கதைகள் கூறுகின்றன. முருகன் தன்னுடைய வேற்படையால் கிரௌஞ்ச மலையைக் குடைந்து வழியை உண்டாக்கியச் செய்தியைப் பரிபாடல் குறிப்பிடுகிறது.

அந்தணர்களைக் கொண்டு வேள்வி நடத்திப் போர்களிலும் வாழ்விலும் மன்னர்கள் வெற்றி பெற்றதை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. மான் தோலை பச்சையாக்ப் போர்த்திக் கொண்டு அந்தணர்கள் யாகச் சடங்குகளைச் செய்தனர்.எனப் புறநானூறு கூறுகிறது.

போர்க் கடவுளாகவும் வெற்றித் தெய்வமாகவும் பழந் தமிழர்கள் கொற்றவையை வழிபட்டுள்ளனர்.

குறிஞ்சி நிலத் தெய்வமாகிய முருகன் சங்க காலத்தில் முதன்மையானத் தெய்வமாக வழிபடப்பட்டுள்ளான். மக்கள் தோன்றிய இடமுமாகக் கருதப்படும் மலையை முருகன் இருப்பிடமாகக் கொண்டுள்ளான். சங்க அகப்பாடல்கள் முருகனுக்கு வேலனால் வெறியாட்டுப் பூசை நிகழ்த்தியதாகக் குறிப்பிடுகின்றன. முருகன் கோயில் கொண்டிருந்த இடங்களைப் பற்றிய பல குறிப்புகள் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. மகளிர் மாடங்களில் நின்று முன்கை கூப்பி முருகப்பெருமானை வழிபட்டுள்ளனர்,

பண்டைத் தமிழ் இலக்கியங்களில் நாள் நிமித்தம் பார்த்து செயல்பட்டுள்ள பதிவுகள் இடம் பெற்றுள்ளன. புள் நிமித்தம் குறித்த நம்பிக்கைகளும் பழந்தமிழருக்கு இருந்துள்ளன. மன்னன் செங்கோலாட்சி

செய்தால் நாட்டில் மழைவளம் மிகுந்து தொழில் சிறப்படையும் என்பது நம்பிக்கையாக இருந்துள்ளது.

அகப்பொருள் இலக்கியங்களில் குறிகேட்கும் பழக்கம் மிகுதியாக இருந்துள்ளது. மணமாகாத மகளிர் தைந்நீராடல் நோன்பு மேற்கொண்டதாக கலித்தொகை குறிப்பிடுகிறது.

மகளிர் மாலை வேளையில் விளக்கேற்றி வழிபட்டதைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. கார்த்திகை விளக்கு நிகழ்ச்சி சங்க கால மக்களின் வழிபாட்டுக் கூறாக இருந்ததை அகநானூற்றுப் பாடலடிகள் விளக்குகின்றன.

குரவைக் கூத்து சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இக்கூத்து அக்கால மக்களின் பெரும்பான்மைக் கலைவடிவமாக இருந்துள்ளது. குறிஞ்சி நிலத்தில் வாழும் குறமகளிர் முருகபெருமானுக்காகக் குன்றக்குரவை என்னும் கூத்தை ஆடியுள்ளனர். இக் கூத்துக்கள் மன மகிழ்ச்சிக்காக இறையுணர்வுடன் மேற்கொள்ளப்பட்ட ஓர் அரிய கலை வடிவமாகும்.

கபிலர் பாடல்களின் மூலம் குறிஞ்சி நில மக்கள் எவ்வாறு தினைப் புனம் காத்தனர் என்பதை விளக்கமாக அறியலாம்.

ஒத்த தலைவனும் தலைவியும் தங்கள் அன்பினையும், பண்பினையும் கலந்து கொள்ளும் விதம் தெளிவாக விவரிக்கப்பட்டுள்ளன.

களவு மணம் எவ்வாறு கற்பு மணம் ஆகிறது என்பதையும் விளக்கமாக கூறியிருக்கிறார் கபிலர்.

தலைவனின் நாட்டில் உள்ள வளங்களைப் பற்றியும், வெற்றிச் சிறப்பு பற்றியும் விரிவாக இவ்வாய்வேட்டில் கூறப்பட்டிருக்கிறது.

# துணை நூற்பட்டியல்


**முதன்மை ஆதாரங்கள்**

ஆனந்தன், சு., - **தமிழ் இலக்கிய வரலாறு,** கண்மணி பதிப்பகம், திருச்சி - 620 002, இருபதாவது பதிப்பு - 2012.

சுப்பிரமணியன், ச.வே., - **சங்க இலக்கியங்கள் மூலமும் உரையும், (தொகுதி மூன்று)** மணிவாசகர் பதிப்பகம், 31. சிங்கர்தெரு, பாரிமுனை, சென்னை - 600 108.

**துணைமை ஆதாரங்கள்**

அறவாணன், க.ப., - **தமிழ் சமுதாய வரலாறு,** தமிழ்க் கோட்டம், புதுச்சேரி, முதற்பதிப்பு - 1992.

கலியாண சுந்தரனார், திரு.வி.க., - **முருகன் அல்லது அழகு,** பசும்பொன் பதிப்பகம், 17. வடக்குபோக் சாலை, தியாகராயர் நகர், சென்னை - 600 017.

சிதம்பரனார், - **பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்,** ஸ்ரீ செண்பகா பதிப்பகம், பாண்டி, சென்னை - 600 017. முதற்பதிப்பு - 2010.

செல்வம், வே.தி., - **தமிழக வரலாறும் பண்பாடும்,** மணிவாசகர் பதிப்பகம், 31. சிங்கர்தெரு, பாரிமுனை, சென்னை - 600 108, முதற்பதிப்பு - 2005.

நீலகண்டபிள்ளை, தா., - **சங்கத் தமிழர் வாழ்வியல்,** செம்மூதாய் பதிப்பகம், 17. தாகூர் தெரு, சிட்லபாக்கம், சென்னை - 600 004. முதற்பதிப்பு - 2012.

பழனிச்சாமி, செ., - **புறநானூற்றில் தமிழர் பண்பாடு,**
வாணி பதிப்பகம்,
402. அழகேசன் சாலை,
கோயம்புத்தூர் - 641 011.

பிள்ளை, கே.கே., - **தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்,**
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை
முதற்பதிப்பு - 1972.

புலியூர்கேசிகன், - **நற்றிணை,**
பாரிநிலையம்,
184 பிராட்வே, சென்னை
முதற்பதிப்பு - 1980.

விக்டர், ம.சோ., - **பஃறுளி முதல் யூப்ரடீசுவரை,**
நல்லோர் பதிப்பகம்,
68 லஸ் சர்ச்ரோடு,
மைலாப்பூர், சென்னை,
முதற்பதிப்பு ஜீலை 2001.

வித்தியானந்தன், சு., - **தமிழர் சால்பு,**
பாரி புத்தகப் பண்ணை,
சென்னை - 600 113.
முதற்பதிப்பு - 1971.

வைத்தியலிங்கன், செ., - **'தமிழ்ப்பண்பாட்டு வரலாறு',**
சமஸ்கிருதம் மற்றும் இந்திய
மொழிகள் ஆராய்ச்சி நிறுவனம்
தமிழியல் துறை,
முதற்பதிப்பு, நவம்பர் 1999.

ஜான் ஆசிர்வாதம்., - **தமிழர் கூத்துகள்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 600 113.
பதிப்பு - 1985.